# இருமொழி இலக்கிய இன்பம்

எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்



வானதி பதிப்பகம்

முதற் பதிப்பு : ஜூன், 1981
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 2003

திருநாவுக்கரசு தயாரிப்பு

---

விலை ரூ. 50.00

- TITLE : IRUMOZHI ILAKKIYA INBAM
- AUTHOR : S.N. SRIRAMA DESIKAN
- LANGUAGE : TAMIL
- SUBJECT : LITERATURE
- EDITION : SECOND EDITION, OCTOBER, 2003
- PAGES : 192
- PUBLISHED BY : **VANATHI PATHIPPAKAM** 13, DEENADAYALU STREET, THYAGARAYA NAGAR, CHENNAI - 600 017.
- PRICE : Rs. 50.00

---

Laser Typeset : **Sri Sathya Sai Graphics,**
30/1, Golden Apt., Sarojini St. Chennai - 17. Ph: 24332504

Printed at : **Malar Printers 044-8224803**

# பதிப்புரை

வடமொழியிலுள்ள இலக்கிய நயத்தை தமிழுக்கும் தமிழ் மொழியிலுள்ள இலக்கிய இன்பத்தை வடமொழிக்கும் பிறமொழிகளுக்கும் வாரி வழங்கும் ஆற்றல் பெற்ற அறிஞர் இந்நூலாசிரியர் திரு.எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் அவர்கள்.

அவர்களுடைய வடமொழிப் புலமையும், ஆங்கில அறிவும், தமிழ்ப் புலமையும் அறிவுக் கலவையிட்டு அவ்வப்போது பல்வேறு கட்டுரைகளாக பன்மலர்த் தேனாக மலர்ந்து வந்தன. அவை பத்திரிகைகளில் வெளி வந்து மக்களுக்குச் சிறந்த பயன்களை விளைவித்தன. அந்த அரிய இலக்கியப் பொக்கிஷங்களை எல்லாம் தொகுத்து இப்பொழுது ''இருமொழி இலக்கிய இன்பம்'' எனும் தலைப்பில் நூல் வடிவாக்கித் தரும் வாய்ப்பினை அளித்துள்ளார்கள். ஆசிரியருக்கு நன்றி.

இருமொழிக்கும் பாலமாக அமைந்த ஆசிரியரின் சேவையைப் பாராட்டிப் போற்றி பன்மொழி இலக்கிய இன்பத்தையும் தமிழ் வாசகர்கள் நன்கு அனுபவிக்க வேண்டுமென்ற நற்கருத்துடன் இந்நூல் வானதி பதிப்பகத்தில் வெளியாகிறது. ஏற்று மகிழுங்கள்!

அன்புடன்

**ஏ. திருநாவுக்கரசு**

வானதி பதிப்பகம்

# முகவுரை

சமஸ்கிருதக் கல்லூரியில் மாணவனாக இருந்த காலத்திலேயே பழம் பெரும் தமிழ் இலக்கியங்களைப் படித்துப் பிரபல தமிழ் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதி வந்திருக்கிறேன். தமிழ் மொழிப் பற்று கல்லூரி நாட்களிலேயே எனக்கு இயற்கையாகக் கிடைத்த வரப்பிரசாதமாகும். இரு மொழிகளுக்கிடையே உள்ள கருத்து ஒற்றுமையையும் அடிப்படைக் கொள்கைகளை விளக்குவதில் உள்ள ஒற்றுமையையும் கண்டு ரசித்து வந்திருக்கிறேன். தமிழர்களால் இரு கண்களாக பாவித்து வளர்க்கப்பட்டு ஒன்றோடு ஒன்று போட்டியிடாமல் இந்திய கலாசாரத்தை விளக்குவதையே குறிக்கோளாகக் கொண்டு ஒற்றுமையாய் கைகோத்து வளர்த்து வந்த தமிழ், சமஸ்கிருத மொழிகளிடையே வெகு காலமாகவே வீண் சர்ச்சை இருந்து வருவது துரதிருஷ்ட வசமானதாகும். இதைக் கருத்தில் கொண்டு பழங்கால வைணவாசிரியர்கள் உபய வேதாந்தம் என்ற பெயரால் இவ்விரு மொழிகளுக்கும் சமமான பிராதான்யம் அளித்துப் போற்றி தமிழ் சமஸ்கிருத சொற்களை ஒன்றாகக் கலந்து மணிப்பிரவாளம் என்றொரு புதிய உரைநடையை தமிழ் நாட்டில் உருவாக்கி ஒற்றுமையை வளர்த்து வந்தனர்.

வெகுவாக அக்காலத்திய வடமொழிப் புலவர்கள் தமிழையும் தமிழ்ப் புலவர்கள் சமஸ்கிருதத்தையும் நன்கு அறிந்திருந்தனர் என்பதற்கு அவர்கள் இயற்றிய நூல்களே சான்றுகளாகும். இந்திய மொழிகள் யாவும் இந்திய கலாசாரத்தை விளக்குவதையே முக்கிய நோக்காகக் கொண்டவை. இந்திய மொழிகளைக் கற்பதனால் ''நாம் அனைவரும் ஒரே கலாசாரத்தினால் பிணைக்கப்பட்டு இந்தியன் என்ற ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள்'' என்ற எண்ணம் நம் உள்ளத்தில் தோன்றி சகோதர பாவத்துடன் பழகும் மனப்பான்மை

உருவாகுகிறது. பிற இந்திய மொழிகளை நேரிடையாகக் கற்க முடியாதவர்கள் மொழி பெயர்ப்பு மூலமாவது அம் மொழிகளில் உள்ள கருத்துக்களை அறிந்து கொள்ள முன்வர வேண்டும். அதனால் நம்மிடையே அன்பும், சகோதர பாவமும் ஓங்கி வளரும்.

மொழி பெயர்ப்பு என்பது மொழிகளுக்கிடையே அமைந்த பாலத்திற்கு ஒப்பாகும். தேசிய ஒருமைப் பாட்டிற்கு மொழி பெயர்ப்பு ஒன்றே சிறந்த சாதனமாக விளங்குகிறது. தாய் மொழிப் பற்று பிற மொழிப் பகையாக மாறி விடக்கூடாது. தமிழ்மொழியின் சிறப்பையும் அழகையும் உலக மக்கள் யாவரும் உணர்ந்து இன்புற வேண்டும் என்ற பரந்த மனப் பான்மையோடு சங்ககால இலக்கியம் முதல் கம்பராமாயணம் வரையாக உள்ள சில முக்கியமான தமிழ் இலக்கியங்களை வட மொழியில் ஆக்கி சுமார் 25 ஆண்டு காலமாக இரு மொழிகளுக்கும் தொண்டாற்றி வருகிறேன். சுமார் 30 சதம் முதல் 90 சதவிகிதம் வரை இந்திய மொழிகள் அனைத் திற்கும் தனது சொற்களைக் கடனாக அளித்து சரஸ்வதி நதி போல் கண்ணுக்குத் தெரியாமல் உட்புகுந்து அவற்றை ஆட்சி கொள்ளும் உலக மொழியான சமஸ்கிருதத்தில் இந்நூல் களை மொழி பெயர்ப்பதால் தமிழரல்லாத மக்களால் தமிழ் இலக்கியங்களின் கருத்துக்களை அறிந்து சுவைக்க முடியும் என்ற எண்ணத்தினால் இம்மொழி பெயர்ப்புப் பணியை ஏற்றுச் செய்து வருகின்றேன். அவ்வாறு மொழி பெயர்க்கும் போது தமிழ் இலக்கியங்களிலே யான் கண்டு ரசித்த சில அழகிய கருத்துக்களை தனியாகவும், சமஸ்கிருதத்தோடு ஒப்பு நோக்கியும் ஆனந்த விகடன், விகடன் தீபாவளி மலர், சுதேசமித்திரன் தீபாவளி மலர், மஞ்சரி, தினமணி சுடர், தினமணி தீபாவளி புத்தாண்டு இதழ்கள் ஆகியவற்றில் பல கட்டுரைகளை எழுதி வந்தேன். அவ்வாறு வெளி வந்த கட்டுரைகளே 'இரு மொழி இலக்கிய இன்பம்' என்ற

இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன. இக் கட்டுரைகளை வெளியிட்டு உதவிய அப்பத்திரிகை ஆசிரியர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலில் அடங்கி உள்ள 13 கட்டுரைகளுள், 9 கட்டுரைகள் மேற்கூறிய பத்திரிகைகளில் வெளி வந்தவை. பரிபாடல், திருக்குறளும் சமஸ்கிருத இலக்கியமும், கம்பனும் வால்மீகியும் என்ற மூன்று கட்டுரைகள் எனது ஸமஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலில் உள்ள ஆங்கில முகவுரைகளின் தமிழாக்கங்கள். இருமொழிகளுள் உள்ள இலக்கிய நயங்களை அனுபவிக்க இந்நூல் உதவியாக இருக்கும் என்பது எனது உறுதியான நம்பிக்கை. ஒவ்வொரு கட்டுரையின் கீழ் அது வெளியான பத்திரிகையின் பெயர் தரப்பட்டுள்ளது.

இந்நூலை வெளியிட்டு மக்களுக்கு இருமொழி இலக்கியங் களை சுவைக்க வழி வகுத்துதவிய வானதி பதிப்பகத்தின் உரிமையாளர் திரு. திருநாவுக்கரசு அவர்களுக்கு என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். 20-6-1981 அன்று எனக்கு நடந்த மணிவிழாவின் நினைவு மலராக இந்நூலைப் பணிவன்புடன் உங்களுக்கு நான் சமர்ப்பிக்கின்றேன்.

**27-6-1981** **எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்**

# பொருளடக்கம்

# 1. கம்பன் கண்ட ஞாயிறும் திங்களும்

ஓய்வு எடுப்பதில்லை, ஊதியம் வாங்குவதில்லை, உறக்கமும் கொள்வதில்லை. செய்வதிலோ ஓர வஞ்சனை கிடையாது. கடமை செய்வதிலேயே எப்பொழுதும் கவனம்; அதிலும் காலம் தவறுவதில்லை. காலம் தங்கள் போக்கால் மாறிக் கொண்டே போகும். தாங்கள் மாத்திரம் என்றும் மாறாமல் ஒரே மாதிரி மங்கா ஒளியுடனும், உற்சாகத்துடனும், இன்றைக்கும் சிரஞ்சீவிகளாக இருந்து கொண்டு உலகைக் காத்து வருகிறார்கள். இவர்கள் யார் என்று கேட்கிறீர்களா? கண் கண்ட தெய்வமென மக்கள் காலையிலும் மாலையிலும் போற்றிப் பணிந்து வரும் சூரிய சந்திரர்களைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? அச் சூரிய குலத்திலே உதித்த ஸ்ரீ இராமபிரான் சூரியனையே ஒத்திருந்தான். வால்மீகி முனிவர் இராமபிரானின் சரிதத்தை முதலில் மாபெரும் காவியமாக வடமொழியில் இயற்றினார். பிறகு அதைப் பின்பற்றி காலத்திற்குத் தக்கவாறு கதையை மாற்றி இடையிடையே சில அற்புதமான கற்பனைகளையும் புகுத்தி தமிழிலே இராமாயணத்தை உருவாக்கினான் கம்பன்.

கற்பனைதான் காவியத்தின் ஜீவநாடி. மற்ற கவிகளைப் போன்றே கம்பனின் கற்பனை உள்ளமும் பல கோணங் களிலே சென்றிருந்தாலும், ஏனோ சூரிய சந்திரர்களைத்தான் அதிகமாகக் கவருகிறது. கதையில் இடையிடையே சூரியன் தோன்றினான், மறைந்தான்; சந்திரன் தோன்றினான், மறைந் தான் என்று நாட்கள் கடந்தமையைச் சொல்லும் ஒவ்வோர் இடத்திலும், குறிப்பாக சுமார் நூறு இடங்களில் சந்தர்ப்பத்திற் கேற்றவாறு ஒவ்வொரு புதிய கருத்தை கற்பித்துக் கூறி அதைக் கதையோடு பொருத்திப் பேசியிருக்கும் அழகை

மாலை வருகிறது. ஓடுவதில் சூரியனுக்குத்தான் இன்று ஏன் இப்படி அவசரம்? இப்படிப் பதறி ஓடும்படி அவனுக்கு என்ன ஆயிற்று?

'சீதையை வாட்டி வருத்திய அந்தக் காமத் தீ' கொழுந்து விட்டெரிந்து வானளாவி சூரியனையும் பற்றிவிட்டது. தனது கிரணங்களால் உலகையே சுட்டெரிக்கும் கதிரவனை அக் காமத் தீ சுடுகிறது. சூரியனின் உடல் சிவந்து புண்ணாகி விட்டது. இந்த வேதனையைத் தாள மாட்டாமல் தனது கிரணங்களான ஆயிரம் கைகள் நடுநடுங்க மேற்குக் கடலில் ஓடோடிப் போய்க் குதித்து மூழ்கினான் சூரியன்.

தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென
தன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலில் மூழ்கினான்

*1-10-61*

## 3. கதிரவனின் சீற்றம்

இடம் அயோத்தி. நேரம் இரவு வேளை. கைகேயியின் அந்தப்புரத்திலே, வேறு வழியின்றி அவள் கேட்ட வரங்களை அளித்து விட்டு, மூர்ச்சையுற்றுக் கிடக்கின்றான் தசரதன். கேட்ட வரங்களைப் பெற்ற ஆனந்தத்திலே, நிம்மதியாய் உறங்குகிறாள் கைகேயி.

அதற்கு முன்பே இராமனின் முடிசூட்டு விழாவிற்கு எல்லா ஏற்பாடுகளும் நடந்திருந்தன. உலகத்து நாயகனான இராமனல்லவா முடிசூட்டிக் கொள்ளப் போகிறான்? அயோத்தி நகரத்திற்கு மட்டும் பந்தல் போட்டால் அது பொருத்த மாகுமா? உலகம் முழுவதற்கும் அல்லவா பந்தல் போட வேண்டும்? குடை போல நான்கு பக்கங்களும் விரிந்து,

உலகை மறைத்தாற் போல இரவில் ஒளியோடு காட்சி தரும் வானம், இராமனின் முடிசூட்டு விழாவிற்கு இயற்கையாகப் போடப்பட்ட பந்தல் போலக் காட்சி அளித்ததாம்.

அதனிடையிடையே காணப்படும் நட்சத்திரங்கள், பந்தலிலே தொங்கவிடப்பட்ட முத்துச் சரங்களைப் போலக் காட்சி அளிக்கின்றனவாம்.

ஆனால், இப்போது எல்லாமே தலை கீழாக மாறி விட்டதே! முடிசூட்டு விழா தடைப்பட்ட செய்தி எங்கும் பரவி விட்டது. கிழக்கு வெளுக்கிறது. அந்தக் காட்சி எப்படி இருக்கின்றது தெரியுமா? முடிசூட்டு விழா நின்றதால் வானப் பந்தலும், முத்துச் சரங்களும் கலைக்கப்பட்டது போல இருந்ததாம்?

இதைப் பார்க்கின்றான் கதிரவன். "பாவி, கைகேயி என் வம்சத்தில் உதித்த தசரதனின் உயிருக்கு உலை வைத்து விட்டாளே" என்று அடங்காத சீற்றம் கொள்கிறான். சினத்தால் சிவந்த அவன் உடலைக் கண்டு, காரிருள் ஓட்ட மெடுக்கிறது. கைகேயியைச் சுட்டு எரிப்பதற்கு வந்தது போல உதய பர்வதத்தின் கிழக்கே கதிரவன் தோன்றுகிறான்.

விரித்த பந்தர் பிரித்த தாமென
மீனொளித்தது வானமே.

(2-3-50)

பாப முற்றிய பேதை செய்த
பகைத் திறத்தினில் வெய்யவன்
கோப முற்று மிகச் சிவந்தன
னொத்த னன் குணக் குன்றிலே

(2-3-61)

## 4. இருள் சூழ்ந்தது

மாலை நேரம். இராமனைக் காட்டுக்கு அனுப்புவது உறுதியாகிவிட்டது. இதோ, தம்பி துணை சேர, மனைவி உடன் வர நகரை விட்டுப் புறப்பட்டு விட்டான் இராமன். சோகத்தின் உருவங்களாக நகர மக்கள் அவனைப் பின் தொடர்கிறார்கள். வெயில் தணிந்தது. எருமைகளும் பசுக்களும் வழக்கம் போல் புல்லை மேய்ந்து விட்டுத் தொழுவத்திற்குத் திரும்புகின்றன.

எந்த வீட்டிலும் பார்க்கலாம் - வயதானவர்களுக்குத் தங்கள் குடும்பத்தில் உள்ள சிறுவர்களிடத்தில் பாசம் அதிகம். தங்கள் குழந்தை வருத்தப்பட்டால் அதை அந்தப் பெரியவர் களால் தாங்கவே முடியாது. அதைப் பார்க்க விரும்பாமல் கண் காணாத இடத்திற்குப் போய் விடுவார்கள்.

இராமன் மீது சூரியன் கொண்டிருக்கும் பாசத்திற்கு அளவேயில்லை. அவன் அன்புக்குரியவன்; இன்னும் சிறிது நேரத்தில் வனம் புகப் போகிறான் என்ற செய்தியை அறிந்த சூரியனுக்கு வேதனை தாங்க முடியவில்லை. அதைக் கண் கொண்டு பார்க்க விரும்பவில்லை. கண் காணாத இடத் திற்குப் போய்விட விரும்புகிறான். ''இனியும் இங்கு இருந் தால் என் குலக் கொழுந்தாகிய இராமன் காட்டில் கல்லிலும் முள்ளிலும் நடந்து செல்லும் கோரக் காட்சியைக் காண வேண்டிவரும். அதைக் கண்டு சகித்திருக்க முடியாது'' என்று துடிக்கிறது அவன் நெஞ்சம். எங்காவது ஓடிப் போய்க் கல்லிடையே மறைந்து கொள்ள வேண்டும் என்று அன்று மாலை மேற்கு மலையில் சூரியன் மறைந்தான்.

........................ கதிரவ னத்தம் புக்கனன்
கான்புகக் காண்கிலே னென்று கல்லிடைத்
தான்புக முடிகின னென்னுந் தன்மையான்

(2-5-3)

## 5. சூரிய சாம்ராஜ்யம்

நேரம் நள்ளிரவு. அயோத்திக்கு அருகாமையில் உள்ள ஒரு சோலை. காட்டுக்குப் புறப்பட்ட இராமன், சீதையுடனும் தம்பியுடனும் இரவு அங்கு தங்குகிறான்.

இராமனிடம் விடை பெற்று, சுமந்திரர் நாடு திரும்பு கிறார். ''இனி இங்கிருந்தால் மக்கள் நம்மை விடமாட் டார்கள்'' என்று நினைத்த இராமன் நடந்து காட்டுக்குப் பயணமாகிறான்.

எங்கும் இருள். இருள் என்றால் அரக்கர்களுக்குக் கொண் டாட்டம். அந்த நேரத்தில்தான் அவர்கள் அதிக பலத்தோடு நல்லவர்களைத் துன்புறுத்தி, பாபச் செயல் புரிவது வழக்கம். அரக்கர்களுடன் தோழமை பூண்டிருக்கும் இருள், இந்த நேரத்தில் இராமன் வெளியே புறப்பட்டால் தன் நண்பர் களான அரக்கர்களை அழித்துவிடுவானே என்று அஞ்சுகிறது. இராமனை வழி மறித்துத் தடுப்பது போல் இருள் எங்கும் பரவிக் கிடக்கிறது!

இராமனுக்குத் துணைபுரிய ஓடி வருகிறது வானம். இருளை விரட்டி அடித்து, இராமனுக்கு வழிகாட்டுவதற்காக வானம் ஒரு பெரிய கை விளக்கைத் தாங்கி நிற்பது போல, சந்திரன் அன்று இரவில் வானத்தில் தோன்றினான்!

**மைவிளக் கியதே யன்ன**
**வயங்கிரு ளுரக்க வானம்**
**கைவிளக் கெடுத்த தென்ன**
**வந்தது கடவுட் டிங்கள்**

(2-5-49)

## 6. சூரியன் சொன்ன சோதிடம்

அழகிய சித்திரக்கூட மலை. அதன் இயற்கை அழகு கண்களைக் கவர்கின்றது. சீதா தேவிக்கு அதன் அழகைக் காட்டிக் கொண்டே அம் மலையின் தாழ்வாரத்திற்கு வரு கிறான் இராமன். அங்குள்ள முனிவர்கள் அளித்த விருந்தை ஏற்றுக் கொள்கின்றான்.

இராமன் சித்திரக்கூடத்திலே அடியெடுத்து வைத்து விட்டான். இனி ஒருவர் பின் ஒருவராக அரக்கர்கள் அழியப் போகிறார்கள், அரக்கர்களை அழிக்கப் போவதாகச் சபதம் கொண்ட திருமாலே இராமனாகத் தோன்றி இங்கு வந்திருக் கின்றார் என்ற எண்ணம் திடீரென்று அப்போது கம்பனுக்குத் தோன்றுகிறது. இதுவரை வில்லும் கையுமாகக் காட்சியளித்த இராமன், திருத்துழாய் மாலை அணிந்து போர்க் கோலம் பூண்ட திருமாலாக மாறி, கவியின் கண் முன்னே தோன்றினான்.

அதே சமயம் மாலை நேரமும் தற்செயலாக வந்தது. கற்பனை உள்ளத்தில் உதித்த இத் திருக்கோலத்தை என்றும் போல அன்று நடந்த சூரியாஸ்தமனத்தோடு பிணைத்து, கவி அனுபவிக்கும் அழகு இணையற்றது.

'... காலநேமி' என்று ஓர் அரக்கன். இவனுக்கு நூறு தலைகள். தனது தந்தையான இரண்யனைக் கொன்றதால் திருமால் மீது அவனுக்குக் கோபம். அந்தப் பழைய பகையை நினைத்து அவன் திருமாலை வலியப் போருக்கு அழைக் கிறான். திருத்துழாய் மாலையை அணிந்த திருமாலும் கையிலேந்திய சக்கரப் படையை அரக்கன் மீது ஏவுகிறார். அதனால் தாக்குண்ட அரக்கனின் உடலிலிருந்து இரத்த வெள்ளம் பெருகி ஓடுகின்றது. அவன் வாயிலுள்ள கோரைப் பல் சிதறித் தூர விழுகிறது...

இந்தச் சம்பவம் நடந்து பல காலம் ஆகிவிட்டது. முன்பு என்றோ நடந்த இந்தச் சம்பவத்தை நமக்கு நினைவூட்டுவது போல, அன்று மாலை மேற்கு மலையிலே சாய்ந்த கதிரவன் சக்கரப் படையைப் போலவும் அவனைச் சுற்றி வளைத்தாற் போலக் காணப்பட்ட செவ்வானம் இரத்த வெள்ளம் போலவும் தோன்றியது. சிறிது தூரத்தில் வானத்திலே தெரிந்த பிறைச் சந்திரன், அரக்கன் வாயிலிருந்து சிதறிய வளைந்த கோரைப் பல்லைப் போலக் காணபட்டது.

இனி அரக்கர்களுக்கு அழிவு நேரப் போகிறது என்ற ஜோதிடத்தைத்தான் இந்தச் சூரியாஸ்தமனத்தின் மூலம் சொல்லுகிறான் கவிஞன்.

**மாவிய லுதயமாந் துளப வானவன்**
**காவியல் குடவரைக் கால நேமிமேல்**
**ஏவிய திகிரிபோ லிரவி யேகினான்**

*(2-8-40)*

சக்கரந் தானவ னுடலிற் றாக்குற
எக்கிய சோரியிற் பரந்த தெங்கணும்
செக்கரத் தீயவன் வாயின் றீர்ந்து போய்
உக்கவான் றனியெயி றொத்த திந்துவே

*(2-8-41)*

## 7. பழிவாங்கிய சந்திரன்

சூர்ப்பணகை சீதையின் அழகைப் பற்றிச் சொல்லச் சொல்ல, இராவணனுக்கு அந்த உலகநாயகியிடம் கொண்ட தப்பெண்ணம் அதிகமாகியது. அவனுடைய கெட்ட காலம், இந்தத் தப்பெண்ணம் நாளுக்கு நாள் வளர்கிறது. இதனால் துயரமுற்ற இராவணன், தனது தாபத்தைத் தீர்த்துக் கொள்ள எல்லா ருதுக்களையும் தன்னிடம் அழைக்கிறான். இவன்

காம நோயைத் தீர்க்க அவற்றாலும் முடியவில்லை. குளிர்ச்சியைத் தருவதன் மூலம், சந்திரன் ஒருவேளை தனது துயரத்தைத் தீர்ப்பானோ என்று நினைத்து, சந்திரனை அழைத்து வரக் கட்டளை பிறப்பிக்கின்றான்.

சந்திரனுக்கு இராவணன் வீழ்ச்சியைக் காண வேண்டும் என்ற துடிப்பு உண்டு. இராவணன் திக் விஜயம் செய்த போது அவனிடம் தோற்றுப் போய் ஓடியவன் இந்தச் சந்திரன்.

அன்று விரட்டியடித்த அதே இராவணன் இன்று உதவிக்கு அழைக்கின்றான். வஞ்சம் தீர்க்க வரிந்து கட்டிக் கொள்கின்றான் சந்திரன்! காம நோயை வளர்ப்பதிலே சந்திரன் கை தேர்ந்தவன். அறமற்ற செயலாகத் தகாத இடத்தில் காமவெறி கொண்ட இராவணனின் காம நோயை மிகைப்படுத்தி, யமனாக வந்து அவனை ஒழித்து விடத் திட்டம் போடுகிறான் சந்திரன். இதுவரை இலங்கைக்கு அப்பால் ஒளிந்து மறைந்து அரைகுறையாகத் தோன்றி வந்த சந்திரன் - அன்று துணிவோடு தனது பரிபூரண உருவத்துடன் இலங்கையிலே கிழக்குக் கடலிலிருந்து தோன்றினான்!

............. ஆழி இந்து
செயிருறச் சேதித் தாண்டோர்
தேய்வுவந் துற்ற போது
வயிரமுற் றுடைந்த செற் றோர்
வலியவர் செல்லுமா போல்
உயிர் தெறக் கால னென்பா
னொத்தன னுதயஞ் செய்தான்.

(3-7-107)

## 8. தாமரையில் சீதை பதுங்கினாளோ?

சீதையைத் தேடிச் செல்கிறான் இராமன். சடாயுவுக்கு ஈமச் சடங்குகளை முடித்துவிட்டு, மறுபடியும் காட்டு வழியே அவளைத் தேடுகிறான். மாலை நேரம். அருகாமையிலே ஓர் அழகிய மலை. இலக்குமணனுடன் அங்கு தங்குகிறான். இராமனுக்கோ இரவெல்லாம் தூக்கமே வரவில்லை. இர வெல்லாம் அவளை நினைத்துப் புலம்புகிறான். இப்படியே இரவு கழிந்தது. விடியற் காலையில் இராமனிடத்தில் இரக்கம் காட்டுவது போல் பறவைகள் ஒலி எழுப்பின. அந்த நேரத்தில்தான் வழக்கமாகச் சீதை எழுந்து கிளி போல் இனிய குரலில் இராமனை அன்போடு அழைப்பாள். கிளி மொழியாளின் குரல் அன்று திடீரென இராமனுக்கு நினை வுக்கு வருகிறது. வருந்துகிறான். அவனுடைய பார்வை நான்கு பக்கங்களிலும் விழுகிறது. ஓடைகளிலே தாமரைகள் குவிந்து இருந்தன. அதைக் கண்டான் அவன். பெண்கள் கோபித்துக் கொண்டால் திடீரெனத் தாயகம் சென்று விடு வார்கள். திருமகளாகிய சீதையும் ஒருவேளை கோபித்துக் கொண்டு தன் பிறப்பிடமாகிய தாமரை மலருள் மறைந்திருக் கிறாளோ என்று இராமன் எண்ணலாம் அல்லவா? இராமன் எண்ணினானோ இல்லையோ, அவன் இவ்வாறு எண்ணக் கூடும் என்று சூரியனுக்குத் தோன்றியது. தனது குழந்தைக்கு ஏற்படும் அச் சந்தேகத்தைத் தீர்த்து அத் துயரத்தைப் போக்க எண்ணிய கதிரவன் வழக்கத்திற்குச் சற்று முன்னதாகவே கிழக்கு மலையிலே தோன்றி, தாமரை மலர்களை மலர வைத்து, இராமனுடைய சந்தேகத்தைப் போக்குகின்றான். பெற்றோர்களுக்குப் பிள்ளைகளிடம் பாசம், அன்பு அதிகம் இருந்தால் அவர்கள் என்னென்ன எண்ணுவார்களோ என்று முன்னதாகவே ஊகித்துப் பார்த்து அதற்குத் தக்க பரிகாரம் காணுவது வழக்கம். இவ்வழகிய உண்மையை இப் பாட்டிலே வைத்துப் பேசியிருக்கிறான் கவி.

முடிநாட் டியகோட் டுதயத்து
முற்ற முற்றவுற்றான்...கிளிமிழற்று

மென்சொற்கேளா வீரற்காண்டு
அடிநாட் செந்தா மரை யொதுங்கு
மன்ன மிலளால் யானடைந்த
கடிநாட் கமலத் தெனவவிழ்த்துக்
காட்டுவான் போற் கதிர்வெய்யோன்

*(3-9-30)*

## 9. இலட்சுமி கடாட்சம்

*சூரிய குலத்திலே உதித்த இராமனுக்குச் சுக்ரீவன் பாட்டனார் வரிசை ஆகிறான். சீதையைத் தேடுவதிலே அவனுடைய உதவி வேறு கிடைக்கப் போகின்றது. தன் குல மூத்தவனாகிய சுக்ரீவனை, வானரர்களுக்கு அரசனாக்கு வதிலே இராமனுக்குப் பங்கு உண்டு அல்லவா? வாலி இறந்த பிறகு இராமனின் கட்டளைப்படி சுக்ரீவனுக்கு முடி சூட்ட எல்லா ஏற்பாடுகளும் நடந்து வருகின்றன. எல்லாம் சித்தமாகிவிட்டது. பொழுது விடிந்தால் விழா. தனது மகனான சுக்ரீவனுக்கு நடக்கப் போகும் இத் திருவிழாவை நேரில் வந்து காண அவா கொண்டான் சூரியன். மூத்த மகனாகிய இராமனுக்குப் பட்டம் சூட்டி அன்று பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை தசரதன். இன்று தன் குலத்தில் மூத்தவனும் என் மகனுமாகிய சுக்ரீவனுக்குத் தானே முன்வந்து பட்டம் சூட்டி வைப்பதைக் கேட்டாவது தசரதன் சந்தோஷப்படட்டும் என்று சூரியனுக்கு ஒருபுறம் எண்ணம் ஓடியது. அத்துடன் அவனுடைய அரசு நீடூழி நடப்பதற்குத் திருமகள் நேரிடையாய் வந்து சுக்ரீவனைக் கண் குளிரக் கடாட்சித்து, ஆசி கூறும்படியாகச் செய்ய வேண்டும் என்று*

மற்றொரு புறம் விருப்பம் அவனுக்கு. திருமகளை அழைத்து வருவதில் ஒருவித சிரமும் இல்லை. அவள் அங்குள்ள தாமரை மலர்களுள் வசிப்பவள்தானே? ஆனால், மலர்களின் கதவுகள் திறக்கப்பட வேண்டும். அதற்குச் சூரியனுடைய உதவி தேவைப்படுகிறது. உடனே, கிழக்குத் திக்கிலே தோன்றித் தனது ஆயிரம் கிரணங்களாகிய கைகளால் தாமரை இதழ்களாகிய கதவுகளை மெல்ல நீக்கி அங்கிருந்தவாறே சுக்ரீவனுக்கு இலட்சுமி கடாட்சம் உண்டாகும்படி செய்து, அவ்விழாக் கோலத்தைக் கண்டு களித்தான் கதிரவன்.

**புதல்வன் பொன் மகுடம் பொறுத்தலான்**
**முதல்வன் பேருவ கைக்கு முந்துவான்**
**உதவும் பூ மகள் சேர வொண்மலர்க்**
**கதவஞ் செய்ய கரத்தி னீக்கினான்**

*(4-8-21)*

## 10. தூது செல்லும் கதிரவன்

மால்யவான் என்பது ரிஷ்யமுக பர்வதத்தின் ஒரு பகுதி யாகும். வாலி இறந்த பிறகு இப்போது சுக்ரீவ அரசாட்சி கிஷ்கிந்தையில் நடக்கிறது. அங்கு வசிக்க இராமனுக்கு விருப்பம் இல்லை. தம்பியுடன் ஏகாந்தமாய் மால்யவானில் வந்து குடியேறுகிறான்.

அப்போது ஆடி மாதத்தின் தொடக்கம். முதல் நான்கு மாதங்களுக்கு மழைக் காலமென்பதால் சீதையை எங்கும் சென்று தேடுவதற்கு வசதியிராது. அக்காலத்தில் அங்கு தங்கிக் கழித்துவிட விரும்புகிறான் இராமன்.

சீதையைத் தேடுவதற்கு யாரை அனுப்புவது என்று திட்டம் தயாராகிறது. அநுமனை அனுப்பப் போகிறார்கள். அதற்கு முன்பு, சீதையைத் தேடச் சூரியனைத் தூது அனுப்ப முடிவு

செய்கிறான் இராமன். இராமனின் குலத்துக்கே மூத்தவன் சூரியன். அநுமனுக்குச் சாத்திரங்களைக் கற்பித்த ஆசிரியன் அவன். ஆகவே, அவனை முதலில் தூது அனுப்ப நினைக்கிறான் இராமன்.

ஆடி மாதம் முதல் ஆறு மாதங்களுக்குத் தட்சிணாயனம் எனப் பெயர். அப்போது சூரியன் வடக்குப் பக்கமாக உதய மாகி, கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து தெற்கு நோக்கிச் செல்லு கிறான். தை மாதம் முதல் ஆறு மாதங்களுக்கு உத்தராயனம். அப்போது தெற்குப் பக்கமாகத் தோன்றிக் கொஞ்சம் கொஞ்ச மாக வடக்குப் பக்கமாக நகர்ந்து செல்கிறான் கதிரவன்.

ஆடி மாதம் ஆரம்பத்துல இராமன மாலயவான மலை யில் வந்து தங்கும் பொழுது தட்சிணாயனம் ஆரம்பமாகி வழக்கமாகச் சூரியன் தெற்கு நோக்கி நகர்கிறான். இதைப் பார்த்தால், இராமபிரானின் கட்டளைப்படி சீதையைத் தேடுவதற்காகத்தான் சூரியன் தெற்கு நோக்கித் தூது செல்கிறானோ என்று நினைக்கும்படி இருந்தது.

மாவியல் வடதிசை நின்று வானவன்
ஓவிய மேயென வொளிக்க வின்குலாந்
தேவியை நாடிய முந்தித் தென்திசைக்
கேவிய தூதென விரவி யேகினான்.

*(4-10-1)*

## 11. இலங்கையிலே ஒரு திரிசங்கு

இலங்கையிலே அரக்கர்களின் தீய செயல்கள் அதிகமாய் விட்டன. கோடை போன்ற அத்தீய செயல்களால் அறமாகிய முளை உலர்ந்து, கருகி, வாடி வதங்கிவிட்டது. மழை பெய் தால், ஒரு வேளை அது முளைத்து எழலாம். அங்கு வந்து மழை பெய்வதற்கு வருண தேவனுக்குத் தைரியம் ஏது?

ராமனால் ஏவப்பட்ட அநுமனாகிய மழை இலங்கையிலே

வந்து இறங்கி எங்கும் பரவிப் பெய்தது. அதனால் தருமமும் புத்துயிர் பெற்று முளைத்து, கீழ்த் திக்கிலே மலர்ந்த முகத்துடன் தோன்றிற்று. அதுதான் அன்று இலங்கையில் கீழ் வானத்தில் தோன்றிய பூரண சந்திரன். இந் நற்செய்தியைக் கேட்டுக் கண்டு களித்த தேவர்கள், அநுமன் மேல் பூமாரி பொழிந் தனர். அம்மலர்கள் இலங்கையில் போய்க் கீழே விழுந்தால், இராவணன் நம்மைப் பொசுக்கி விடுவான் என்ற அச்சத் தினால் கீழே செல்லாமலும், வந்த வழியே திரும்பாமலும் அப்படியே நடுவானத்தில் பரவினாற் போல் எங்கும் சிதறி நின்று விட்டன. அவைதாம் அன்று இலங்கையில் வானத்திலே நட்சத்திரங்களாகச் சந்திரனைச் சுற்றி எங்கும் காட்சியளித்தன.

................................ மாரு திப்பெயர்
ஆண்டகை மாரிவந் தளிக்க வாயிடை
ஈண்டற முளைத்தென முளைத்த திந்துவே

*(5-2-52)*

எண்ணுடை யநுமன்மே லிழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில
அண்ணல்வா ளரக்கனை யஞ்சி யாய்கதிர்
விண்ணிடைத் தங்கின போன்ற மீனெலாம்.

*(5-2-57)*

## 12. வானமேந்திய வெற்றிக் குடை

கடலைக் கடந்து இலங்கையை அடைந்தான் அநுமன். நகருக்கு அப்பாலுள்ள பவளமலையில் இறங்குகிறான். அரக்கர் களுக்குத் தனது நிஜ உருவம் தெரியாதிருக்க மாபெரும் தனது உருவை அநுமன் சுருக்கிக் கொள்வதைக் கண்ட கதிரவனும் அன்று தனது கிரணங்களையும் சுருக்கி, மேற்குத் திக்கில் மறைகின்றான். காரிருள் எங்கும் பரவி நகரைச் சூழ்ந்து

கொண்டது. இராவணனால் பொழுது போனால் பொழுது விடிந்தால் இந்திரலோகத்திற்குத் தொல்லைதான். அநுமன் இலங்கைக்கு வந்தது இந்திரனுக்குத் தைரியத்தை அளிக்கிறது. இனி அரக்கர்கள் அழிவது திண்ணம் என்று எண்ணிக் களிப்புற்று, தனக்கு உரிய கிழக்குத் திக்கிலே மலர்ந்த முகத்துடன் தோன்றப் போகிறான். அதற்கு முன் அவனைக் கௌரவிக்கும் வகையில் வெற்றிக்கு அறிகுறியாக வெண்ணிறமான குளிர்ந்த ஒற்றைக் குடை புறப்பட்டாற் போல் பூர்ண சந்திரன் குண திசையில் தோன்றினான். அவனைக் கண்டு பொங்கி எழுந்து உலாவும் கடல் அலைகள், வெண்ணிலாவின் சேர்க்கையில் மேலும் வெண்ணிறம் பெற்றவனவாய் தேவேந்திரனுக்கு நாற்புறமும் வீசும் வெண்சாமரங்கள் போல் காணப்பட்டன. இவ் விழாவில் தானும் பங்கு கொள்ள எண்ணிய வான புருஷன், சந்திர மண்டலமாகிய வெள்ளிக் குடத்தைக் கையிலேந்தி, அதனால் பாற்கடலி லிருந்து பாலை மொண்டு மொண்டு எடுத்து அனைவரும் பருகிக் களிப்பதற்காக எங்கும் பொழிகிறான். அந்தப் பால் வெள்ளம், புவியிலும் ஆகாயத்திலும் எங்கும் பரவி, வெண்ணிலவு எனப் பெயர் பெற்று விளங்குகிறது. அச்சமயம் தெளித்த பால் துளிகள்தான் வானத்தில் நட்சத்திரங்களாக இன்றும் காட்சி தருகின்றன.

கற்றைவெண் கவரிபோற் கடலின் வெண்டிரை
இற்றதெம் பகையென வெழுந்த விந்திரன்
கொற்றவெண் குடையெனக் குளிர்வெண் டிங்களே

(5-2-54)

தெரிந்தொளிர் திங்கள்வெண்குடத்தி னாற்றிரை
முரிந்துயர் பாற்கடன் முகந்து மூரிவான்
சொரிந்ததே யாமெனத் துள்ளி மீனொடும்
விரிந்தது வெண்ணிலா மேலும் கீழுமே.

(5-2-55)

## 13. கடல் கொடுத்த சூடாமணி

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது, சீதை நடு வழியிலே தனது நகைகளை எல்லாம் மூட்டை கட்டிக் கீழே எறிந்தாள். ஆபத்திற்கு உதவுவதற்காக ஒன்றையாவது வைத்துக் கொள்ளலாமே என்று கருதிய சீதை, சூடாமணியை மட்டும் வைத்துக் கொண்டாள். இலங்கையில் சிறைப்பட்டுக் கிடந்த போதும் அவள் சூடாமணியைத் தலையில் அணிந்து கொள்ளவில்லை.

தன்னிடம் மிஞ்சியிருந்த அந்தச் சூடாமணியையும், இராமனுக்கு அடையாளமாகத் தருவதற்கு அநுமனிடம் கொடுத்து விடுகிறாள். பெண் நகைகளை இழந்து விட்டால் அது தந்தைக்குத்தான் பெரும் மன வேதனையை அளிக்கும். மீண்டும் புத்தம் புதிய நகைகளைச் செய்து போட்டால்தான் தந்தைக்கு நிம்மதி ஏற்படும். தனது மகளும், திருமகளின் அவதாரமுமாகிய சீதை எல்லா நகைகளையும் இழந்து நிற்பதைக் கண்டு சமுத்திரராசன் மனம் கலங்குகிறான்.

சீதை அணிந்திருந்த சூடாமணிக்கு நிகரான மற்றொரு மணியைத் தேடித் தர விரும்பினான். எல்லா முறையிலும் அதற்கு நிகரான மற்றொரு சூடாமணியைத் தேடி எடுத்து - இலங்கையில் வாழும் சீதையின் முடியில் சூட்டுவதற்காகத் தான் அனுப்பினானோ என்று நினைக்கும் படி காலைக் கதிரவன் கிழக்குத் திக்கில் அங்கு தோன்றினான்.

உறுசுடர்ச் சூடைக் காகக்
கரசினை யுயிரொப் பானுக்(கு)
அறிகுறி யாக விட்டாள்
ஆதலான் வறிய ளந்தோ

செறிகுழற் சீதைக் கென்றோர்
  சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகட லீவ தென்ன
  எழுந்தன னிரவி யென்பான்

*(5-7-45)*

## 14. ஆக்கப்பணி புரியும் அதிசய அம்பு

*ஒரு வில்லாளி ஏவும் அம்பு ஒரு பொருளை அழித்து அதை இரண்டாக உடைப்பதைப் பார்த்திருக்கிறோம். உடைந்து பிரிந்த இரு பொருளை ஒன்றாகச் சேர்த்து இணைக்கும் சக்தி அதற்கும் உண்டு என்பதை இதுவரை கேட்டதில்லை. அப்படிப்பட்ட திறமை வாய்ந்த வில்லாளி ஒருவனும் இருக்கிறான் என்றால் ஆச்சரியப்படுவீர்கள்! தன் மலர் அம்பை ஏவிக் காதலை வளர்த்து, தனியே பிரிந்து வருந்தும் காதலர்களை ஒன்று சேர்த்துப் பிணைக்கும் காமன் தான் அவன். அதிலும் அறம் வளர்க்கும் காதலை வளர்ப்ப திலே அவனுக்கு ஆர்வம் அதிகம். இராமனைச் சீதையிடம் இருந்து பிரித்து வருத்திய இராவணனிடம் அளவிலாக் கோபம் இவனுக்கு. அறக் கடவுளாகிய தாமரைக் கண்ண னாம் இராமன் மீது மலர் அம்பினை ஏவி, இராமனையும் சீதையையும் ஒன்று சேர்த்துப் பிணைக்க எண்ணினான் மதனன். வில்லை எடுத்து வேகமாக இழுத்தான், வளைத் தான். இரண்டு நுனிகளும் ஒன்று சேரும் அளவிற்கு அதை வளைத்துவிட்டு ஆள் மாத்திரம் மறைந்து கொண்டான். அவன்தான் அனங்கனாயிற்றே! எப்படி அவனைக் காண முடியும்? வளைந்த வில் மாத்திரம் கண் எதிரே காட்சி அளிக்கிறது. அதுதான் அன்று இலங்கையில் கீழ் வானத்தில் வளைந்து அழகாய்க் காட்சி அளிக்கும் பிறைச் சந்திரன். கடலைக் கடந்து சுவேலமலையில் பர்ணசாலை அமைத்துக்*

*கொண்ட இராமன், இப்பிறைச் சந்திரனைப் பார்த்து, சீதா தேவியை உள்ளத்திலே கொண்டான் என்ற இக் கருத்தைக் கவி கம்பன் இங்கு அழகாய்ச் சித்திரிக்கிறான்:*

மாலுறு குடக வானின்
　　வயங்கிய வந்து தோன்றும்
பாலுறு பசுவெண் திங்கள்
　　பங்கய நயனத் தண்ணல்
மேலுறு பகழி வாங்கி
　　வெகுண்டனன் விரைவில் வந்த
காலுற வளைத்த காமன்
　　வில்லெனக் காட்டிற் றன்றே

*(6-8-20)*

**ஆனந்த விகடன் - 1967**

காலத்தில் தாம் புராணம் கேட்டு ரசித்த இராமாயணக் கதை அவரது நினைவுக்கு வருகிறது.

வெற்றி வீரனான இராமபிரான் மனைவி, கற்புக்கரசி சீதாதேவியை அபகரித்து, ஆகாய வழியே எடுத்துச் செல்கிறான், அரக்கன் இராவணன். வானவழியே செல்லும்போது தன் அணிகலன்களையெல்லாம் ஒரு துணியிலே மூட்டை கட்டிக் கீழே எறிகிறாள் சீதை. அது குரங்குகள் வாழும் ரிச்ய முகப் பருவதத்தில் குரங்குகளின் நடுவே வந்து விழுகிறது. அதைப் பிரித்துப் பார்த்த செங்குரங்குகளுக்கு அவற்றையெல்லாம் எங்கு, எப்படி அணிவது என்பது ஒன்றுமே புரியவில்லை. கையில் அணிய வேண்டியதைக் காதிலே அணிகிறது ஒரு குரங்கு, காதிலே அணிய வேண்டியதைக் கையிலே அணிகிறது மற்றொன்று. இடுப்பில் அணிய வேண்டியவற்றைக் கழுத்திலும், கழுத்தில் அணிய வேண்டியவற்றை இடுப்பிலுமாக மாற்றிக் குரங்குகள் அணிந்தனவாம். தம் உறவினர்கள் அணிகலன்கள் அணிந்த காட்சியோடு இதை ஒப்பிட்டுப் பார்த்து நம்மையும் ரசிக்க வைக்கிறார் கவிஞர் பெருமான். வான்மீகத்தில் இந்தக் கதை காணப்படவில்லை. ஆனால், சங்க காலத்திலே மக்களிடையே கர்ண பரம்பரையாகச் சொல்லப்பட்டு வழங்கி வந்திருக்கிறது. கவிஞர் பெருமான் தம் கவிதையிலே உவமான வடிவிலே இதைப் புகுத்தி, அன்றைய மக்களிடம் இருந்த இதிகாசப் பற்றை வெளிப்படுத்துகிறார். தமிழ் - சமஸ்கிருத மொழி முதல் இலக்கியங்களான சங்க நூல்களிலும் வால்மீகி இராமாயணத்திலும் உவமையின் வாயிலாக ஒப்பு நோக்கிப் பார்ப்பதிலே எவ்வளவு பொருத்தம் இருக்கிறது!

''கடுந்தெறல் இராமன்
உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன்
வௌவிய ஞான்றை

நிலஞ்சேர் மதர் அணி
கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை
இழைப்பொலிந் தாஅங்கு''

- புறநானூறு-378

## 2. ஆலமரத்தடியிலே வேதவிசாரம் செய்தது

கடற்கரை; அதையடுத்துப் பெருந்துறைகள்; அருகிலே ஒரு சோலை; அங்கே கொன்றை மலர்களும் புன்னை மலர்களும் கீழே உதிர்ந்து தரையிலே தாமாக ஓவியம் வரைந் தாற்போல் காட்சி தருகின்றன. நீரிலே தோன்றி மலர்ந்த நெய்தல் மலர்களை விழாவுக்குச் செல்லும் அணங்குகள் அணிந்து அந்த மலர்களாலேயே தாங்கள் அணியும் தழை யுடைக்கு அழகு செய்கிறார்கள். மற்றொருபுறம் பரதவர்கள் வாழும் குடியிருப்பு. படகுகளின் மூலம் வெகுதூரம் கடலைக் கடந்து வலை வீசி, விதவிதமான மீன்களைக் கொண்டு குவிக்கிறார்கள். தாங்கள் பயன்படுத்திய வலை யின் பெருமையை ஒருவருக்கொருவர் சொல்லிப் பரிமாறிக் கொள்கிறார்கள்.

எங்கே பார்த்தாலும் புலால் நாற்றம் வீசுகிறது. எல்லோரும் ஒன்று கூடி மீன்களைச் சரிசமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள். அவர்களுக்கொரு தலைவன்; வெகு காலமாக ஒரு பெண்ணுடன் ரகசியக் காதல் கொண்டிருக் கிறான். பெண்களுக்கு இந்த ரகசியம் தெரிந்துவிட்டால் சும்மா இருப்பார்களா? நடக்காத விஷயத்தையே கற்பனை செய்து ஊரெல்லாம் பறைசாற்றித் தூற்றும் பழக்கமுள்ள அவர்களுக்கு உண்மைச் சேதி கிடைத்துவிட்டால் சும்மா இருப்பார்களா? இந்தச் செய்தியை எங்கும் பறைசாற்றித் தூற்றிப் பெருங்கோலாகலத்தையே உண்டாக்கி விடுகிறார்கள்.

ஒரே அமளி! அடுத்த கணம் தலைவன் அங்கே வருகிறான், ரகசியக் காதல் கொண்ட அந்தப் பெண்மணியுடன். அனைவர் முன்னிலையிலும் அவளை மணக்கிறான். அதை அறிந்த அனைவரும் வியப்பில் ஆழ்கிறார்கள். பேச்சு மூச்சு இல்லை! சுற்றிலும் ஓர் அமைதி. ஓர் ஆச்சரியம் நிகழ்ந்தால் அடுத்தபடி பேச்சு மூச்சுக்கு இடம் ஏது? அமைதிதானே நிலவும்? இதைக் கண்ட கவிஞர் பெருமான் மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் என்பவரின் எண்ணம் இராமாயணக் கதை ஒன்றை நாடி ஓடுகிறது. இராமபிரான் பரிவாரங்களுடன் சீதையைத் தேடித் தென் திசையை நோக்கி வருகிறார். பாண்டிய நாட்டின் பழைமையான தென்கோடி. அங்கே புராதனமான கடற்கரை. கடலொலி எங்கும் காதைத் துளைக்கிறது. அங்கோர் ஆலமரம். அதைச் சுற்றிலும் விழுதுகள் பந்தல் போட்டாற் போல் பூமியைத் தொட்டுச் சரம் சரமாய்த் தொங்குகின்றன. இராமர் வழக்கம்போல் தம் கடமைகளை முடித்துக் கொண்டு, அந்த ஆலமரத்தின் அடியில் அமர்ந்து அறிஞர்களுடன் வேதவிசாரம் செய்யத் தொடங்குகிறார். வேத தத்துவங்களையெல்லாம் விளக்க உவமையாகப் பயன்படும் ஆலமரத்தடியிலே வேதவிசாரம் செய்வதிலேதான் என்ன பொருத்தம்! வானவீதியிலே பறவைகளெல்லாம் ஒலியெழுப்பி வேதவிசாரத்துக்கு இடை யூறாக இருந்தன. அப்போது இராமர் எழுந்து தம் கைகளை உயர்த்திப் பறவைகளை ஓட்டுகிறார். அடுத்த கணம் எங்கும் அமைதி நிலவுகிறது. வேதவிசாரமும் தொடங்குகிறது. இப்படி ஆலமரத்தடியில் நிகழ்ந்த அமைதியை, பரதவர்களின் குடியிருப்பிலே தலைவன் காதலியோடு வந்தபோது நிகழ்ந்த அமைதியோடு உவமை வடிவிலே ஒப்பிட்டுக் கவி ரசிக் கிறார். வான்மீகத்தில் இந்தக் கதை காணவில்லை; கவி கற்பனை செய்து இதை இங்கு ரசித்து தமக்குள்ள பழைமைப் பற்றை எவ்வளவு நயத்துடன் வெளியிடுகிறார்!

''வெண்வேற் கவுரியர்
தொல்முது கோடி
முழங்கும் இரும்பௌவம்
இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன்
அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்போல்.''

- அகநானூறு - 70

## 3. யமுனைக் கரையிலே புன்னைமரம் வளைத்த காட்சி

தலைவன் பொருள் தேட தூர தேசம் செல்கிறான். அவனைப் பிரிந்து வருந்துகிறாள் தலைவி. தலைவியின் நிலையைக் கண்டு தோழி அங்கலாய்க்கிறாள். குளத்திலே முளைத்து வண்டினங்கள் சூழ ஒளி வீசி மலர்ந்த மலர் போன்ற கண்ணழகியான நாயகியின் அழகெல்லாம் பிரிவுத் துயரத்தில் எங்ஙனம் மறைந்தனவோ என்று ஏங்குகிறாள் தோழி. திருப்பரங்குன்றத்திலே குளிர்ந்த சுனையிலே மலர்ந்து புகழ் பெற்ற செங்கழுநீர்ப் பூவால் தன் கொண்டையை அலங்கரித்து அன்னநடை போட்டுச் செல்லும் தலைவியின் முதுகழகைப் பார்த்து ரசிப்பானாம் ஒரு காலத்தில் நாயகன். அதெல்லாம் கனவாகி விட்டதே எனக் கலங்குகிறாள் தலைவியின் நிலையைக் கண்ட தோழி.

கானகத்திலே பெண் யானை உணவு அருந்துவதற்கு வகையாக உயர்ந்து வளர்ந்த மரத்தைத் தன்னுடைய கையால் வளைத்துப் பெண் யானையின் அருகே அது இலையைப் புசிக்குமாறு கொண்டு செல்லுமாம் ஆண் யானை. மரத்தி லுள்ள வண்டுகள் மத நீரால் நிறைந்த யானையின் கன்னத்திலே ஒட்டிக் கொள்ளுமாம். இப்படி பிராணிகள் பெண்ணிடத்து

அன்பும் ஆதரவும் காட்டும் நிகழ்ச்சியை நடு வழியே கண்ட பிறகாவது தலைவன் தலைவியை நினைத்து நிச்சயமாய் வீடு திரும்புவான் என ஆறுதல் கொள்கிறாள் தோழி. உயர்ந்த மரத்தை யானை தனது கையால் வளைத்த காட்சியைக் கண்ணாரக் கண்ட கவிஞர் பெருமானுடைய உள்ளம் என்றோ நடந்த பாகவதக் காட்சியைக் காண விரைந்தோடுகிறது.

வட மதுரை. அங்கே அழகிய நீர் வளம் கொண்ட யமுனை விரைந்தோடுகிறது. எங்கும் மணல் பரப்பு. கோபிப் பெண்கள் ஆற்றிலே இறங்கி நீராடுகிறார்கள். கரையிலே அவர்கள் வைத்துச் சென்ற சேலைகளையெல்லாம் கவர்ந்து புன்னை மரத்திலே ஏறி அமர்கிறான் கண்ணன். பலராமன் தற்செயலாக அங்கு வருவதைக் கண்ட ஆயப் பெண்கள் வெட்கி, என்ன செய்வதென்றறியாமல் தவிக்கிறார்கள். இதை இங்கிதமாக அறிந்த கண்ணன், தான் அமர்ந்திருந்த புன்னை மரத்தைக் காலால் உதைத்து வளைத்துக் கிளைகளை அவர்கள் கைகளுக்கு அகப்படுமாறு செய்கிறான்.

கிளைகளைப் பற்றி இலையைப் பறித்து, அவர்கள் தங்கள் உடலை மறைத்துக் கொள்கிறார்கள். கண்ணன் புன்னை மரத்தை வளைத்ததுபோல் பெண் யானை உண வருந்த ஆண் யானை மரத்தை வளைத்ததென கண்ணன் கதையை உவமையாக்கி ஒப்பு நோக்குகிறார் சங்கப் புலவர். பாகவதத்திலே இக்கதையை நாம் பார்த்ததில்லை. இதுவும் சங்கப் புலவரின் உள்ளத்தில் உதித்த கற்பனையேயாகும். பெண்கள் சேலைக்காக வேண்ட, கண்ணன் அவர்களை இருகரங்களாலும் வணங்கும்படி சொல்லும் பாகவதக் கதை காலத்திற்கு ஒத்ததல்ல எனக் கருதி உடனடியாக நிர்வாணப் பெண்களுக்கு நிவாரணமளித்து ரசபங்கத்தைப் போக்கக் கருதி, ஜனங்களின் ரசனையை உணர்ந்து கவிஞர் பெருமான் பக்குவமாக கதையை இப்படி மாற்றினாரோ என்று சொல்லத் தோன்றுகிறது. எப்படி இருந்தாலென்ன? உயர்ந்த

புராணக் கதையைத்தான் உவமையாகக் கொள்ள வேண்டும் என்றொரு தனி மரபு சங்க காலத்தில் இருந்து வருகிறது. பிற்காலத்தில் திருத்தக்க தேவரும் தனது சீவக சிந்தாமணி நூலில் இக்கற்பனைக் கதையை எடுத்து 209-ஆவது பாடலில் கையாண்டிருக்கிறார். அன்று நடந்த காட்சியைக் கருத் தோவியமாகத் தீட்டி இன்று நம்முன் கொண்டு நிறுத்துகிறார் கவி. ஓவியம் கீழே பாடல் வடிவில் அமைந்திருக்கிறது.

"வடாஅது
வண்புனல் தொழுதை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்
மரம்செல மிதித்த மாஅல் போல"

(அகநானூறு 59)

## 4. கதிரவன் களவு போனான்

மோகினி வேடம் பூண்ட பரமன் அமுதத்தைத் தேவர் களுக்குப் பகிர்ந்து தருகிறான். போலித் தேவ வேடம் பூண்டு இராகுவும் ஏமாற்றி அமுதத்தைப் பெறுகிறான். சூரிய பகவான் இவ்வேமாற்று வித்தையைக் கண்டு தேவர்களிடம் கூறுகிறான். சினங் கொண்ட ராகு சூரியனை விழுங்கு கிறான். முறையே விழுங்கப்பட்டு மறைந்து விடுகிறான் கதிரவன். உலகெலாம் இருள் மயமாகி விடுகிறது. கதிரவனின்றி உலகு எவ்வாறு வாழும்? அனைவரும் கூடி பிரம்மதேவனிடம் முறையிட, பிரமனும் அருணனைப் படைத்து சூரியனுக்கு அவனைச் சாரதியாக்கி கதிரவனைக் கொணர்ந்து உலகை ஒளிமயமாக்குகிறார்.

இக்கதை மகாபாரதம் ஆதிபர்வம் அத்தியாயம் 24இல் 6-18 சுலோகங்களில் பேசப்படுகிறது. மாறோக்கத்து நப்பசலையார் என்ற சங்ககாலப் புலவர் இக் கதையைப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறார். கவிஞர் பெருமானின்

உள்ளத்தைக் கதை வெகுவாகக் கவருகிறது. தனக்குப் பிடித்த கதையை தன் கவிதையிலே கையாண்டு ரசிப்பது கவியின் மரபு. அதையும் மற்றொரு விஷயத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பதிலே அவர்களுக்குள்ள ஆனந்தம் அலாதியானது. ஒப்பு நோக்கித்தானே உலகில் எந்தப் பொருளின் அழகையும் பெருமையையும் அளந்து அறியவும் அனுபவிக்கவும் முடிகிறது. இக்கவிஞன் பாத யாத்திரையாக சோழ நாட்டை அடைகிறான். நாடு ஒளியின்றி, உணவின்றி, செழிப்பின்றி காட்சி தருகிறது. மக்களுக்கு உற்சாகமில்லை. அவர்களைக் கேட்பாருமில்லை; காப்பாருமில்லை. அரசாட்சியே குலைந்து விட்டது. அன்றாட நடவடிக்கை ஸ்தம்பித்துப் போய் விட்டது. நாடு காரிருளில் மூழ்கியிருக்கிறது. தெரியாமலா அரசனைக் கதிரவனோடு ஒப்பிட்டுக் கவிகள் பேசியிருக்கிறார்கள்! பசி பட்டினிக்குக் கேட்கவா வேண்டும்? இந்நிலையைக் கண்ட புலவருக்கு ஒன்றும் புரியவில்லை.

''சோழ நாட்டரசன் தோல்வியுற்று முள்ளூர் மலையில் போய்ப் பதுங்கி விட்டான். அதன் விளைவுதான் இது'' என மக்கள் பேசிக் கொள்வதை அறிந்த கவிப்பெருமான் பாத யாத்திரையைத் தொடங்குகிறார். யாத்திரையை முடித்துக் கொண்டு மறுபடியும் இந்நாட்டை அடைகிறார். இங்கு ஒரு மறுமலர்ச்சி தோன்றுகிறது. நாடு ஒளி மயமாகி செழிப்புடனும், செல்வத்துடனும், களிப்புடனும் விளங்குவதை அதே கண்களால் காண்கிறார் புலவர். காரியின் பரம்பரையைச் சேர்ந்த மலையமான் திருக்கண்ணன் என்பவன் முள்ளூரில் முடங்கிக் கிடந்த அரசனை அழைத்து அவனைச் சோழ அரசிலே அமர்த்தி சுயநலமின்றி ஆட்சிப் பொறுப்பை அவனிடமே அளித்து லோகோபகாரம் செய்த பெருமையை மக்கள் அங்கு வெகுவாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். நாடு மறுவாழ்வு பெற்று மிக்க ஒளியுடன் விளங்குவதற்குக் காரணமான அவனைப் பார்த்து,

"அரக்கர்கள் அபகரித்துச் சென்ற கதிரவனை மீட்டு, இருளில் மூழ்கிய உலகிற்கு ஒளி தந்து உய்ப்பித்த கண்ண பிரானைப் போல் ஓ மலைய மானே, நீயும் சோழ அரசனை மீட்டு, இருள் மூழ்கிய சோழ நாட்டை ஒளி மயமாக்கித் தந்தாயே" என மலையமானைப் புகழ்ந்து பாடுகிறார் சங்கப் புலவர்.

இக்கண்ணபிரானின் கதை எப்புராணத்திலும் இடம் பெறவில்லை. எனினும் முன்பு கூறிய மகாபாரதக் கதையைக் காலத்திற்கேற்ப மாற்றி அமைத்து அதை இந்நிகழ்ச்சியோடு ஒப்பிட்டு, ரசித்து, நம்மையும் ரசிக்க வைக்கிறார் இப் புலவர். கவி கண்ணபிரானிடம் மிகுந்த ஈடுபாடுடையவர். எனவே, அவனையே இக்கதைக்கு நாயகனாக்கி அவனைத் தன் உள்ளத்திலிட்டு அனுபவிக்கிறார். கவிப்பெருமான் தீட்டிய இக்கருத்தோவியத்தை இப்பாடலில் கண்டு ரசிப்போம்:

அணங்குடை அவுணர்கணம் கொண்டு ஒளித்தெனச்
சேணவிளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண கெடுத்த வருதிஞாலத்து
இடும்பைகொள் பருவால்தீரக், கடுந்திறல்
அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு.

(புற. 174)

## 5. சங்க காலச் சிற்பக் கலைச் சிறப்பு

திருப்பரங்குன்ற க்ஷேத்ரம். அழகிய மலை. சுற்றிலும் மூங்கில்கள் வானளாவி நிழலைத் தந்து உதவுகின்றன. எங்கும் பரவிய பாறைகள். அம்மலையிலே திருமுருகனின் திருக்கோலம் கொண்டிருக்கிறான் பரமன். அங்கோர் அழகிய எழுத்து நிலை மண்டபம். அதில் பல சிற்பங்கள் பொறிக்கப் பட்டிக்கின்றன. இருபுறமும் செதுக்கப்பட்ட நவக்கிரகங் களின் காட்சி கண்ணைக் கவருகிறது. இளம் தம்பதிகள் இந்த

காதலன். நுட்பமான வேத சாஸ்திரார்த்தங்களை நன்கு அறிந்திருந்தனர், அக்கால மக்கள். அக்கருத்தையே உவமையாகக் கையாண்டு தங்களுக்கு வேத நெறியிலே உள்ள பற்றை வெளிப்படுத்தினர். வேள்வி இயற்றும் பழக்கம் அக்காலத்தில் வெகுவாக இருந்து வந்தது. வைதிக கலாசாரத்தைப் பின்பற்றுவதிலே சங்கப் புலவர்கள் எங்கும் பின்வாங்கியதில்லை. அதே சமயம் தமிழ் கலாசாரத்திற்கு எவ்விதத்திலும் இது முரணானதல்ல என்ற கருத்திலேயும் அவர்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். இக் கருத்தை எயினந்தை மகனார் இளங்கீரனார் என்ற சங்கப்புலவர் இங்கு குறிப்பிடும் பாட்டிலே சித்திரித்திருப்பதைப் பார்ப்போம்.

அழலெழு நித்தியம் மடுத்த யாமை
நிழலடை நெடுங்கயம் புகல் வேட்டாங்கு

(அகநானூறு 36)

- மஞ்சரி - 1979

# 3. காளிதாஸ மஹா கவியின் உவமைகள்

**சா**குந்தலம், மாளவிகாக்னி மித்ரம், விக்ரமோர்வசீயம் என்ற மூன்று நாடகங்களையும், ரகு வம்சம், குமார ஸம்பவம், மேகதூதம், ருது ஸம்ஹாரம் என்ற நான்கு மஹா காவியங் களையும் வடமொழியில் இம் மஹா கவி எழுதியுள்ளார். இவை உலகெங்கும் போற்றப்பட்டு, நம் நாட்டிற்கு அழியாப் புகழைத் தேடித் தந்திருக்கின்றன. உலக மொழிகள் அனைத் திலும் இவை மொழி பெயர்க்கப்பட்டிருப்பது கவியின் பெருமைக்கோர் எடுத்துக் காட்டாகும்.

ரஸம், பாவம், அலங்காரம், காம்பீர்யம், சிலேடை, பக்தி, வேதாந்தம், இயற்கை வருணனை, தரும நீதிகள் போன்ற பல விஷயங்களை இந்நூல்களில் ஆங்காங்கு விசேஷமாய்க் காணலாம். இத்துடன் ஒவ்வோர் இடத்திலும் உவமையைக் கூறி முக்கிய விஷயத்தை விளக்கும் பாணியைக் கையாண்டு வருவதால் ''உபமா காளிதாஸஸ்ய'' என்ற, யாருக்கும் கிடைக் காத புகழ் காளிதாசனுக்குக் கிடைத்துள்ளது. உபமானம் இல்லாத வடமொழி நூல்களைக் காண்பதரிது. வேதம், உப நிடதம் போன்ற நூல்களும் உலகானுபவத்தை உபமானங் களாகக் கூறியே சிறந்த தத்துவார்த்தங்களையும் விளக்கியிருக் கின்றன. எனினும் புதிய பாணியில் விதவிதமான உபமானங் களைப் பல முறையில் எடுத்துக் கையாளும் இக் கவிக்கு இப்புகழ் தானாகவே கிடைத்துள்ளது.

மற்ற கவிகளைவிட அதிகமான உபமானங்களைச் சொல்வதோடு எந்த விஷயத்தையும் உபமானத்தைக் கூறியே தெளிவுபடுத்துவதில் வல்லவன் இக் கவி.

உபமானமாகக் கூறப்படும் விஷயத்துக்கும், முக்கிய விஷயத்திற்கும் சிற்சில சமயங்களில் தான் ஒற்றுமையைச் சாதாரணமாகக் காணமுடியும். எல்லா விதத்திலும் ஒற்றுமை காண்பது மிக அரிது. அதற்கு மாறாக எல்லா விதத்திலும் ஒற்றுமை பொருந்திய உபமானங்களை உபயோகிப்பதில் ஒப்பில்லாதவன்.

உலகானுபவங்களை மட்டுமின்றி சிறந்த சாஸ்திர ரகசியங்களையும் உபமானமாகக் கூறி, தத்துவார்த்தங்களை எளிதில் உலகில் பரப்பும் நோக்கமுடையவன்.

உபமேயத்தைத் தெளிவாய் மனதில் பதியும்படியான பொருத்தமான உவமைகளைக் கையாளுவதில் நிகரற்றவன்.

எக்காலத்திலும் எல்லோருடைய அனுபவத்திற்கும் மிகப் பொருத்தமாய் வாசகர்கள் ஒவ்வொருவரும் தம்முடைய அனுபவம்தான் பேசப்படுகிறதோ என்று நினைக்கும்படி யான உபமானங்களை உரைப்பதில் உயர்ந்தவன்.

சொற் செட்டுகளால் பெரிய கருத்துக்களை விளக்கும் உபமானங்களைப் பேசுவதில் பெரும் ஆற்றல் படைத்தவன்.

ஜனரஞ்ஜகமாய்ப் பல புதிய உபமானங்களை உப யோகிப்பதில் உலகப் பிரசித்தி வாய்ந்தவன்.

சிற்சில இடங்களில் இது உபமானமா அல்லது உபமேயமா என்று, படிப்பவர்கள் சந்தேகப்படும் அளவிற்கு உபமான உபமேயங்களுக்கு நெருங்கிய ஒற்றுமையை எடுத்துக் காட்டுவதில் கண்ணும் கருத்தும் கொண்டவன்.

ரகு வம்ச மஹா காவ்யம்தான் இக் கவிக்கு இம் மாபெரும் புகழைத் தேடித் தருவதற்கு முக்கிய காரணமாயிற் றென்பது அறிஞர்கள் கண்ட உண்மை. இம் மஹா கவியின் பல நூல்களிலிருந்தும் சில பிரஸித்தமான உபமானங்களை விளக்கத்துடன் தொகுத்துக் கீழே தருகிறேன்.

## மாள விகாக்னி மித்ரம்

1. ''நாட்டியம் சங்கீதம் போன்ற கலைகளை, ஆசிரியர், ஆற்றல் படைத்த நல்ல மாணவர்களுக்குக் கற்பிப்பதால் அது மேன்மேலும் வளர்ந்து அனைவருக்கும் புகழைத் தேடித் தருகிறது. தகுதியற்ற மாணவர்களுக்குப் போதிக்கும் அதே கலை பயனற்றதாகி விடுகிறது. எவ்வாறெனில், மழை ஜலம் கடலில் முத்துச் சிப்பியில் விழுந்தால் சிறந்த முத்தாய் மாறும். வெறும் கட்டாந்தரையில் விழுந்தால் இருப்பிடம் தெரியாமற் போய்விடும். எனவே ஒரு கலை முன்னேறு வதற்கு ஆசிரியரின் திறமையை விட மாணவர்களின் தகுதி தான் முக்கிய காரணமாகிறது'' என்று, கணதாஸன் என்ற நாட்டியாசாரியன் தனது சிஷ்யையான மாளவிகைக்குள்ள நடனத் திறமையைப் பற்றிப் புகழ்ந்து பேசுகிறான்:

ஜலமிவ ஸமுத்ர சுக்தௌ
முக்தாபலதாம் பயோதஸ்ய।

2. ''இருளில் ஒரு பொருளைப் பார்ப்பதற்குக் கண்ணிருந் தால் மட்டும் போதாது. விளக்கின் உதவியும் மிகத் தேவைப் படுகிறது. அதே போல் எதிர்ப்பில் ஒரு காரியத்தை நிறை வேற்றுவதற்கு எப்படிப்பட்டவனுக்கும் மற்றொருவனுடைய உதவி மிக மிகத் தேவைப்படும். அதே போல் மித்ரன், மாளவியை காண்பதற்காகத் தகுந்த உபாயத்தைக் கூறிய விதூஷகனைப் புகழ்ந்து பேசுகிறான்:

த்ருச்யம் தமஸி ந பச்யதி
தீபேந விநா ஸசக்ஷுரபி।

3. ''தினந்தோறும் கடலைக் காண்கிறோம். சுலபமாய்ச் சென்றும் பார்க்கிறோம். இருந்தாலும் ஒவ்வொரு தடவை யும் அதைப் பார்க்கும்பொழுது நம்மையுமறியாமல் ஓர் அச்சம் ஏற்படுகிறது. அது போல், அரசனை தினந்தோறும்

சுலபமாய்ச் சென்று பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கும் கூட, இன்று அவனைக் காணும் பொழுது என்னையுமறியாமல் சிறிது பயம் ஏற்படுகின்றதே'' என, கணதாஸன் என்ற நாட்டியாசாரியன், அக்னி மித்திர அரசனைக் காண அரண்மனையை அணுகும்பொழுது பேசுகிறான்:

**ஸலிலநிதிரிவ ப்ரதிக்ஷணம் மே**
**பவதி ஸ ஏவ நவோ நவோऽய மக்ஷ்ணோ:।**

## சாகுந்தலம்

4. ''தேர் செல்லும்பொழுது அதன் உச்சியில் கட்டி இருக்கும் கொடியானது, தேர் முன்னே செல்ல அது மாத்திரம் எதிர்க் காற்றினால் பின்நோக்கிப் பறந்து கொண்டிருக்கும். அவ்வாறு என் உடல் தான் முன்னே செல்லுகிறது. மனமோ சகுந்தலையைக் காண்பதற்குப் பின்னோக்கி ஓடுகிறது'' என்று துஷ்யந்தன், கண்வாசிரமத்தில் சகுந்தலையை முதல் முறையாகப் பார்த்து விட்டுப் பிரிய மனமில்லாமல் திரும்பிச் செல்லும்பொழுது பேசுகிறான்:

**சீநாம்சுகமிவ கேதோ:**
**ப்ரதிவாதம் நீயமாநஸ்ய।**

5. ''இங்கு நகர வாழ்க்கையில் ஈடுபட்டு சுகபோகங்களை அனுபவிக்கும் இம் மக்களைப் பார்க்கும் பொழுது எண்ணெய் தேய்த்துக் கொண்டவனை ஸ்நானம் செய்தவனும், அசுத்தமானவனைச் சுத்தமானவனும், தூங்கிக் கொண்டிருப்பவனை விழித்துக் கொண்டிருப்பவனும், மெல்ல நடப்பவனை வேகமாக நடப்பவனும் பார்த்து வெறுப்புக் கொள்வது போல், இவர்களைக் கண்டு நான் வெறுப்படைகிறேன்'' என, சகுந்தலையுடன் வந்த மற்றொரு சிஷ்யனான சாரத்வதன் என்பவன் அதே சமயம் தானும் நகர வாழ்க்கையை வெறுத்துப் பேசும் சுலோகம் இது:

அப்யக்தமிவஸ் நாத: சுசிரசுசிமிவ
ப்ரபுத்த இவ ஸுப்தம்।
பத்தமிவ ஸ்வைரகதி:।

## விக்ரமோர்வசீயம்

6. ''வெள்ளம் வேகமாக வரும் பொழுது குறுக்கே எதிர்ப்படும் கல்லில் மோதிக் கொண்டால் அது சிதறிப் பல உருவெடுப்பது போல், காதலுக்குத் தடை ஏற்பட்டால் அது பிறகு பலமுகமாய் வளர்ந்து விடுகிறது'' என்று புரூரவஸ் என்ற அரசன், ஊர்வசியைத் தான் பிரிந்திருந்த சமயத்தில், அப்பிரிவைத் தனக்குச் சாதகமாக எண்ணிப் பேசிய சுலோகம் இது:

நத்யா இவ ப்ரவாஹோ விஷமசிலா
ஸங்கடஸ்கலிதவேக:।

## குமாரஸம்பவம்

7. ''மழைக்காலத்தில் ஹம்ஸங்கள் தாமாக கங்கா நதியை வந்தடைவது போலும், இரவு வேளையில் மூலிகை களை ஓர் ஒளி தாமாக வந்தடைவது போலும், முற்பிறவி களில் கற்ற கல்விகளெல்லாம் வித்யோபதேச காலத்தில் சிரமமின்றிப் பார்வதியைத் தாமாகவே வந்தடைந்தன'' என்று, பார்வதி தேவியின் கல்விச் சிறப்பைக் கற்பனை உலகத்தில் காண்கிறார் கவி இச் சுலோகத்தில்:

தாம் ஹம்ஸமாலா: சரதீவ கங்காம்
மஹௌஷதிம் நக்தமிவாத்ம பாஸ:।

8. ''பார்வதிக்குப் பருவ காலம் வந்தபொழுது இடுப்பில் மூன்று மடிப்புக்கள் காணப்பட்டன. அவற்றைக் காமனுடைய தோழனாகிய பருவகாலத்தால் அவனுக்காக அமைக்கப்பட்ட

படிக்கட்டுகள் போல் இருப்பதாகக் கவி சமத்காரமாகக் கூறுகிறார் இச் சுலோகத்தில்:

**ஆரோஹணார்த்தம் நவயௌவநேந**
**காமஸ்ய ஸோபானமிவ।**

*9. ''பல நோய்கள் ஒன்று சேர்ந்து மனிதனைத் தாக்கும் பொழுது சிறந்த மூலிகைகளும் அங்கு வீணாகி விடுவது போல், தாரகாசுரனை அழிக்க எங்கள் திட்டங்கள் யாவும் பயனற்றதாகி விட்டன''* என்று தேவர்கள் பிரம்மதேவனிடம் முறையிடுவதாகக் கூறும் சுலோகம் இது:

**வீர்ய வந்த்யௌஷதாநீவ**
**விகாரே ஸந்நிபாதிகே।**

*10. ''பரமசிவன் பிரம்மசாரி கோலத்துடன் வந்து, பிறகு சுயரூபம் பூண்டு, கடைசியாகப் பார்வதி தேவியின் கரத்தைத் திடீரெனப் பிடிக்க, அவள் அச்சமயம் சட்டென்று எழுந்து செல்லவும் முடியாமல், நிற்கவும் முடியாமல் ஒரு கணம் தவித்த நிலையை வருணிக்கையில், வேகமாக ஓடி வரும் வெள்ளம் வழியில் பாறையோடு மோதும் பொழுது அது ஒரு கணம் தாண்டிச் செல்ல வழி காணாமல் தத்தளிக்கும் நிலைக்கு ஒப்பிடுகிறார்,* உவமையாகக் கவி இச் சுலோகத்தில்:

**மார்கா சலவ்யதிகராகுலிதேவ ஸிந்து:**
**சைலாதிராஜதநயா ந யயௌ ந தஸ்தௌ।**

## ரகுவம்சம்

*11. ''மஹா கவிகள் விரும்பும் புகழை, இந் நூலை இயற்றி யானும் அடைய ஆசைப்படுவது, உயர்ந்த மரத்தி லுள்ள பழத்தை குள்ளன் அடைய ஆசைப்படுவதுபோல் நகைப்புக்குரிய காரியமாகிறது''* என, நூல் தொடக்கத்தில் *கவி தன்னைப் பற்றி விநயமாகப் பேசிக் கொள்கிறார்:*

ப்ராம்சுலப்யே பலே லோபாத்
உத்பாஹுரிவ வாமந:।

12. ''வஜ்ரங்களின் உதவியால் துளை செய்த ரத்தினங்களை ஒன்று சேர்த்துக் கோத்து மனிதர்கள் அணிவதற்கு நூல் உபயோகப்படுகிறது. சூரிய வம்சத்தரசர்களாகிய ரத்தினங்களை வால்மீகி போன்ற முனிவர்கள் இராமாயணத்தால் துளையிட்டு அவ்வரசர்களின் பெருமையை நன்கு வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றை ஒன்று சேர்த்து மறுபடியும் உலகத்திற்கு உபயோகமுள்ளதாகச் செய்வதற்கு இந்நூலாகிய நூல் பயன்படுகிறது. அதாவது வால்மீகி போன்ற முனிவர்கள் சூரிய வம்ச அரசர்களின் பெருமையை இதுவரை விளக்கியுள்ளார்கள். அதைத் தெளிவுபடுத்துவதுதான் இந்நூலின் முக்கிய நோக்கம். நான் ஒன்றும் புதியதாகச் சொல்லிவிடவில்லை'' என்ற அழகிய கருத்தை இச் சுலோகத்தில் காணலாம்:

மணௌ வஜ்ரஸமுத்கீர்ணே
ஸூத்ரஸ்யேவாஸ்தி மே கதி:।

13. ''சூரியன் சிறிதளவு நீரை பூமியிலிருந்து கிரணங்களின் மூலமாகப் பருகி, அதையே தான் பன்மடங்காக்கித் திரும்பவும் மழையின் வாயிலாக ஜனங்களுக்கு அளிப்பது போல், மக்களிடம் இருந்து சிறிதளவே வரியை வசூலித்து அதைவிடப் பன்மடங்கு நன்மைகளை மக்களுக்குப் பிறகு செய்து வருகிறான் திலீபன்'' எனத் திலீபனுடைய நீதி தவறாத அரசாட்சியை அழகாகக் குறிப்பிடுகிறார் இங்கு.

ஸஹஸ்ரகுணமுத்ஸ்ரஷ்டும்
ஆதத்தே ஹி ரஸம் ரவி:।

(14) அரசன் தான் போடும் எந்தத் திட்டங்களையும் ரகசியமாக வைத்து அவற்றைச் செயலின் மூலமாகப் பிறகு மக்கள் அறியும்படி செய்வது, பெரிய ராஜ தந்திரம். இங்கு

*திலீபன் அவ்வாறு செய்து வந்ததை, மனிதன் இங்கு அனுபவிக்கும் இன்ப துன்பங்களைப் பார்த்து அவன் முற் பிறவிகளில் செய்த புண்ணிய பாவங்களைத் தெரிந்து கொள்வதற்குச் சமமாகக் கவி கூறுகிறார் இங்கு:*

**பலாநுமேயா: ப்ராரம்பா:**
**ஸம்ஸ்காரா: ப்ராக்தநா இவ।**

*(15) ''திரும்பத் திரும்பப் படிப்பதனால், கல்வியை சுவாதீனப்படுத்திக் கொள்வது போல், நந்தினி என்னும் பசுவைப் பின் தொடர்ந்து, விடாது செல்வதன் மூலம் அதன் அருளைப் பெற வேண்டும்'' என வசிஷ்ட முனிவர், பிள்ளைப்பேறு பெறுவதற்கு திலீபனுக்கு ''நந்தினியென்ற பசுவைப் பின் தொடர்ந்து அதை பூஜித்து வர வேண்டு'' மென்று உபாயம் கூறுமிடத்தில் வருகிறது இச் சுலோகம் -*

**வித்யாமப்ய ஸநேநேவ**

*(16) ''மாலை வேளைகளில் சூரியன் தனது ஒளியை நெருப்பிடம் வைத்து விட்டுப் போவதனால் இரவு அக்கினி விசேஷமாகப் பிரகாசிப்பது போல் தந்தையான திலீபனால் தன் இறுதிக் காலத்தில் அளிக்கப்பட்ட ராஜ்யத்தைப் பெற்ற ரகுமஹாராஜன் மிகப் பொலிவுடன் காட்சியளித்தான்'' என்று உலகானுபவம் கலந்த சாஸ்திரத்தை வெகு அழகாக இங்கு பேசியிருப்பதைக் காணலாம்.*

**திநாந்தே நிஹிதம் தேஜ:**
**ஸவித்ரேவ ஹுதாசந:।**

*(17) ''ஒரு விளக்கை இரவில் ராஜவீதியில் எடுத்துச் செல்லும்பொழுது அது கடந்த வீடுகளெல்லாம் இருள் சூழ்ந்து ஒளியற்றிருப்பது வழக்கம். அம்மாதிரியே இந்துமதி சுயம்வர மண்டபத்தில் ஒவ்வோர் அரசர்களாகப் பார்த்து அவர்களைத் தேர்ந்தெடுக்காது கடந்து செல்லும்பொழுது*

பின் தங்கிய அரசர்களும், இந்துமதி தங்களுக்குக் கிடைக்காத வருத்தத்தினால் ஒளியற்றவர்களானார்கள்!'' இந்துமதியின் சுயம்வர காலத்தில் கூறிய சுலோகம் இது. உலகானுபவத் திற்கு மிகவும் ஒட்டிய உவமை:

**நரேந்த்ரமார்காட்ட இவ ப்ரபேதே**

*(18)* ''காற்று நெருப்புடன் சேர்ந்து நெருப்பை அதிகமாக எரியச் செய்கிறது. அழைக்காமலே தானாக வந்து காற்று நெருப்புக்கு உதவி செய்வது போல, உங்கள் வேண்டு கோளின்றியே இராவணனை அழிக்க நான் சித்தமாக இருக் கின்றேன். ஏனெனில் நம் இருவருடைய லட்சியமும் ஒன்றன்றோ?'' என்று தேவர்களுக்கு மகாவிஷ்ணு அபயம் அளித்ததைக் கூறும் இச் சுலோகத்தில் உலகானுபவம் எப்படிப் பேசப்பட்டிருக்கிறதென்பதை நன்கு உணரலாம்.

**ஸ்வயமேவ ஹி வாதோSக்நே: ஸாரத்யம்।**

*(19)* ''பொருள், இன்பம் இவற்றுடன் கூடி அறமானது உருவெடுத்து வந்தாற்போல், இராம லக்ஷ்மணர்களுடன் கூடி அங்கு வந்த விசுவாமித்திரரை ஜனகன் பூஜை செய்து வர வேற்றான்'' என்று கூறுவதன் மூலம், ஒரு தர்ம ரகசியத்தைக் கவி இங்கு விளக்குகிறார்: பொருள், இன்பம் இவற்றுடன் தருமம் சேருவது அரிது. அதாவது, தர்மமான முறையில் பொருளையும் இன்பத்தையும் தேட வேண்டும் என்ற உயர்ந்த கருத்தைத் தெரிவிக்கும் அழகிய சுலோகம் இது:

**அர்த்தகாமஸஹிதம் ஸபார்யயா**
**தேஹபத்தமிவ தர்மம்।**

*(20)* ''ஒவ்வொரு சொல்லிலும் பிரக்ருதி, ப்ரத்யயம் (பகுதி, விகுதி) என்ற இரு பாகங்கள் உண்டு. இவ்விரண்டும் ஒன்று சேர்ந்தால்தான் எந்தச் சொல்லும் ஒரு பொருளைக் குறிக்கவல்லதாகின்றது. அதுபோல இராம லக்ஷ்மணாதிகள்

*நால்வரும், சீதை முதலிய நால்வரை மணந்து ஒருவரோ டொருவர் சேர்க்கையினால் வாழ்க்கைப் பயனை அடைந் தார்கள். அதாவது, வாழ்க்கையைப் பொருளுள்ளதாகச் செய் தார்கள் என்று இங்கு பேசுகிறார் கவி. இதனால் இலக்கண சாஸ்திரத்தின் ரகசியம் உபமானத்தின் வாயிலாக வெளியிடப் படுகிறது.*

**ப்ரத்யயப்த க்ருதியோ கஸந்நிப:**

*(21) ''சூரியன் தென்திசையை நோக்கி மாரிக் காலத்தில் செல்லும்பொழுது, திருவாதிரை முதல் பத்து நக்ஷத்திரங் களின் வாயிலாக எப்படிச் செல்லுகிறானோ, அவ்வாறே இராமன் ரிஷிகளுடைய ஆச்ரமங்களை முறையே தாண்டி, தென் திசையை நோக்கிச் சென்றான்'' என்று இராமன் தண்ட காரண்யத்தில் செல்லுவதை இச்சுலோகத்தில் சித்திரிப்பதன் மூலம் ஜோதிட சாஸ்திர ரகசியம் தெளிவாய்ப் பேசப்படுகிறது.*

**தக்ஷிணாம் திசமிருக்ஷேஷு**
**வார்ஷி கேஷ்விவ பாஸ்கர:।**

*(22) ''இராமனுடன் ராஜ்யலக்ஷ்மி சேருவதைக் கைகேயி விரும்பவில்லை. சீதையுடன் இராமன் காட்டிற்குச் சென்ற தானது, கைகேயி தடுத்தாலும் அவன் குணத்திற்கு ஆசைப் பட்டு ராஜ்யலக்ஷ்மி இராமனைத் தொடர்ந்து செல்வது போலிருந்தது!'' என்று கூறுகிறார் இச் சுலோகத்தில். நற் குணம் பொருந்தியவனை அரசு தானாகவே வந்து சேரும் என்ற அனைவரும் அறிந்த உண்மையை உபமானத்தின் வாயிலாக அழகாகப் பேசுகிறார் கவி:*

**லக்ஷ்மீரிவ குணோன்முகீ।**

*(23) ''விஷக் கொடிகள் நாற்புறமும் இருக்கையிலும் நடுவிலுள்ள ஒரு மூலிகை அதன் சேர்க்கையினால் தன்*

னுடைய குணம், சகது, அழகு ஆகியவற்றை இழக்காமல இருப்பது போல் இலங்கையில் ராக்ஷஸிகளால் சூழப்பட்ட சீதை, அவர்கள் சேர்க்கையிலும் தன் குணம் மாறா திருந்தாள்'' என்று சீதையின் பெருமையைப் பேசுகிறார்:

**விஷவல்லீபி: பரீதேவ மஹௌஷதி:।**

*(24)* ''நீரலைகளில் கலந்த எண்ணெய் வேகமாய் எங்கும் பரவுவது போல் என்னைப் பற்றிய பழிச்சொல் நாட்டில் எங்கும் பரவிவிட்டது. எனவே சீதையைக் காட்டிற்கனுப்பு வதைத் தவிர வேறு வழியில்லை'' என்று இராமன் முடிவு செய்ததைக் கூறும் இச் சுலோகத்தில்; பழிச்சொல் பரவு வதற்கும் எண்ணெய் பரவுவதற்கும் இங்கு காட்டிய ஒற்றுமை மிகப் பொருத்தமானதென்பதை அனுபவத்தில் ஒவ்வொருவரும் உணர்வார்கள்.

**அபாம் தரங்கைரிவ தைலபிந்தும்:।**

*(25)* ''பூமியினுடைய நிழல் சந்திரன் மீது பட்டு, அதனால் அங்கு தோன்றும் கரு நிறத்தை, அது சந்திரனுடைய களங்க மென்று மக்கள் உண்மைக்கு மாறாகப் பேசி வருகிறார்கள். உண்மைக்கு மாறான விஷயத்தையும் பலர் பேசுவதால் வழியின்றி ஏற்றுக் கொள்வது போல், சீதை புனிதமானவ ளென்று நான் அறிந்தும், பொது ஜனங்களின் அபிப்பிராயத்திற் கிணங்க உண்மைக்கு மாறாக அவளைக் காட்டிற்கு அனுப்ப வேண்டியது தவிர்க்க முடியாதது'' என இராமன் இங்கு பேசுகிறார். இங்கு உபமானப் பொருத்தம் உலகானு பவத்தின் வாயிலாக அப்படியே அமைந்திருப்பதை ஆழ்ந்து ஒவ்வொருவரும் அனுபவிக்க வேண்டும்.

**சாயா ஹி பூமே: சசிநோமலத்வே**
**நாரோபிதா சுத்திமத ப்ரஜாபி:।**

சிறந்த பொருளையே உலகத்தில் உபமானமாகக் கூறுவது வழக்கம். அநேகமாக எல்லா விஷயங்களையும் உபமானம் கூறி விளக்கி வந்த இம்மஹா கவி, சில இடங்களில் முக்கிய விஷயங்களுக்குத் தகுந்த உபமானங்கள் கிடைக்காமையினால், இவை உவமையற்ற பொருள்கள் என்று தனது நூல்களில் பேசியிருக்கிறான்.

1. ''இராமன் இராவணன் இவ்விருவரும் முதல் தடவை யாகச் சந்தித்துப் போர் செய்யும்பொழுது அவ்விருவரும் தங்களுடைய உண்மையான வலிமையைக் காட்டுவதற்குத் தகுந்த சந்தர்ப்பம் கிடைத்ததால் அவ்விருவருடைய போர் மிகப் பயனுள்ளதாக ஆயிற்று'' என்று பேசுமிடத்தில், இராம இராவண யுத்தத்திற்கு மற்றொரு போரை உபமானமாகக் காட்டுவதற்கு முடியாமல் இவ்வாறு பேசியிருக்கிறான் கவி: அதாவது, 'இராம இராவண யுத்தம் இராம இராவண யுத்தம் போலிருந்தது' என்று வால்மீகி கூறிய கருத்தை மனத்தில் கொண்டு, அப்போருக்கு நிகர் அப்போரே தான் என்று சொல்வதில் கவிக்கு நோக்கமென்பது புலனாகிறது.

2. அதே போல் குமார சம்பவத்தில், பார்வதியின் தொடையழகை வருணிக்குமிடத்தில் ''சாதாரணமாக யானை யின் துதிக்கையையும், வாழை மரத்தையும் தொடைக்கு உபமானமாகக் கவிகள் கூறுவது மரபு. யானைத் துதிக்கை கடினமாகவும், வாழைமரம் அதிக சீதளமாகவும் இருப்ப தால், அவற்றைப் பார்வதியின் தொடைக்கு உபமானமாகக் கூறுவது பொருந்தாதாகையால் அவளுடைய தொடைகள் உலகத்தில் உபமானமற்ற பொருள்களாகிவிட்டன'' என்று பேசுகிறார்.

3. விக்ரமோர்வசீயத்தில் ஊர்வசியின் சரீர அழகைப் பற்றி புரூரவஸ் என்ற அரசன் பேசும்பொழுது ''அணிகலங்களுக் கெல்லாம் அணியாகவும் அலங்காரங்களுக்கெல்லாம் அலங்கார

மாகவும் உபமானங்களுக்கு உபமானமாகவும் விளங்குகிறது இவளுடைய உடல்'' என்று பேசுகிறார். ஊர்வசியின் உடலை விட ஒரு சிறந்த பொருளை உலகில் எங்கும் காணாமையால், அவளுடைய உடலுக்கு ஓர் உபமானத்தைத் தேடிக் காணமுடியாமல் கவி அது 'உபமானமற்ற பொருள்' என்று கூறி முடிக்கிறான். உபமானங்களைத் தேடி எல்லா இடத்திலும் வெகுவாகக் கூறிவந்த காளிதாஸனுக்கும் மேற் கூறிய இடங்களில் சொல்வதற்கு உபமானம் கிடைக்க வில்லையென்றால், இதனால் கவியின் திறமை குறைந்து விடாது. அப்பொருள்களின் பெருமையைக் கூறுவதற் காகவே கவி அவ்வாறு சமத்காரமாகப் பேசுகிறான்.

**ஆனந்த விகடன், தீபாவளி மலர், 1964**

# 4. காளிதாசன் கண்ட இராமன்

இராம காதையை முதன் முதலாக உலகிற்கு அளித்த உத்தம புருஷர் வால்மீகி மாமுனிவர். அத்யாத்ம இராமாயணம், ஆனந்த இராமாயணம், பாரதம், பாகவதம், பத்ம புராணம் போன்ற இதிகாச புராணங்களும், இராம காதையை பல்வேறு வகைகளில் விவரிக்கின்றன. சம்ஸ் கிருத மகாகவிகளுள் பிரசித்திபெற்ற பாஸன், காளிதாஸன், திங்நாகன், பவபூதி, முராரி, போஜன் போன்ற மகா கவிகள் காலத்திற்கு ஏற்ப மக்களின் தேவை, ரஸிகத்தன்மை, சுவை ஆகியவற்றுக்குத் தக்கவாறு இராம காதையைப் பல இடங்களில் மாற்றியமைத்தும், கீழ் வரும் நூல்களில் காணப்படும் சில மாறுதல்களை ஆதாரமாகக் கொண்டும் மாபெரும் காவிய நாடகங்களை உலகிற்கு சாசுவதமாய் வழங்கியுள்ளனர். அவற்றுள் காளிதாஸ மகாகவி இயற்றிய இரகுவம்ச மகா காவியம் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. பத்தொன்பது சருக்கங்கள் கொண்டது இக்காவியம்.

குசலவர்கள், வால்மீகி இயற்றிய இராமாயணத்தை இராமனுடைய சபையில் கானம் செய்தனர் என்று கூறும் முதல் நான்கு சருக்கங்களோடு வால்மீகி இராமாயணம் ஆரம்பமாவதுபோல், வேட்டையாடச் சென்ற தசரதன் முனி குமாரனைக் கொன்றதனால் சாபம் பெற்ற செய்தியைக் கூறும் 9-ஆவது சருக்கத்துடன் காளிதாஸ இராமாயணம் ஆரம்பமாகிறது. மரணப் படுக்கையில், இறக்கும் தறுவாயில் உள்ள தசரதன், தன் சாப வரலாற்றைக் கௌசல்யையிடம் கூறியதாக ஆதி காவியத்தில் தெரிய வருகிறது. முனிகுமாரன் நதிக்கரையில் தனது பாணத்திற்கு இரையான பிறகு கண் இழந்த அவனுடைய தாய், தந்தையர்களை தசரதன் அங்கு

அழைத்து வந்ததாக மூலக் கதையிலே உள்ளது. இறக்கும் தறுவாயில் உள்ள முனி குமாரனை தாய் தந்தையிடம் தசரதன் அழைத்துச் சென்ற பிறகு அவன் உயிரிழந்ததாக இங்கு ஒரு சிறு மாறுதல் செய்துள்ளான் காளிதாஸன். தவிர தாய் - தந்தையர்கள் குருடர்கள் என்பதையும் ஏனோ இக் கவி குறிப்பிடவில்லை.

முதலில் 10, 11-ஆவது சருக்கத்தில் காளிதாஸன் செய்துள்ள மாறுதல்களையும், அழகையும் சற்று ஆராய்வோம். புத்திர சோகத்தினால் மரணம் ஏற்படவேண்டும் என்று தசரதன் முனி சாபம் பெற்ற கதையோடு 9-ஆவது சருக்கத்தை முடித்துக் கொண்டு, சாபம் பெற்ற 10,000 ஆண்டுகள் சென்ற பிறகு, பிள்ளைப் பேறு பெற தசரதன் யாகம் செய்ய எண்ணினான் என்ற செய்தியுடன் இராமாயணக் கதை ஆரம்பமாகிறது. 10-ஆவது சருக்கத்தில் அரக்கர்களுடைய கொடுமைக்கு அஞ்சி பாற்கடலை அடைந்து பரமனிடம் தேவர்கள் நேரிடையாக முறையிடும் போது பரமன் அங்கு பாம்பணை மேல் வீற்றிருந்த கோலமும், அவனைப் பல உயர்ந்த வேதாந்தக் கருத்துடன், விரிவாகத் தோத்திரம் செய்யும் முறையும் காளிதாஸனின் கற்பனைக்கு மாபெரும் சான்றாய் விளங்குகிறது. துயரமுற்ற தேவர்கள் தசரதனுடைய யாகத்திற்கு வந்திருந்த பிரும்மதேவரிடம் முறையிட்டதாக ஆதி காவியக் கதையின் போக்கு. தேவர்கள் முதலில் பரமசிவனிடம் சென்று முறையிட அவரும் பிரும்மதேவனுடன் சென்று மஹாவிஷ்ணுவை துதிக்க, மஹாவிஷ்ணு அவர்கள் முன் தோன்றினார் என்பது கம்பனின் கற்பனை. இராவணனுடைய வரலாற்றைத் தானே சுருக்கமாக எடுத்துக் கூறி இராமாவதாரம் செய்து அவனை தான் வெல்லப் போவதாக மஹாவிஷ்ணு தேவர்களிடம் கூறியதாக இங்கு காளிதாஸன் கூறியுள்ளான். இராவணனுடைய கதையைத் தேவர்களே எடுத்துக் கூறி அவனிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என்று

பிரும்மதேவனிடம் முறையிட்டார்கள் என்று மூலத்திலும் கம்ப ராமாயணத்திலும் கதைப் போக்கு அமைந்துள்ளது. ''தசரத புதல்வனாகத் தோன்றி உங்கள் குறையைத் தீர்க் கிறேன்'' என்று மஹாவிஷ்ணு பதில் அளித்ததாகக் கூறும் சம்பவம், காளிதாஸன், கம்பன் இவ்விரண்டிலும் ஒன்றாகவே அமைந்துள்ளது. மூலத்தில் மாத்திரம் அவ்வாறின்றி ''மானிடனாய் புவியில் பிறந்து, அக்காரியத்தை நிறை வேற்றப் போகிறேன்'' என்று வாக்களித்ததாகக் காணப்படு கிறது. கம்பன், வால்மீகி ஆகிய இவ்விரண்டு நூல்களிலும் பிரும்ம தேவன், மகாவிஷ்ணு இவர்கள் கட்டளைப்படி தேவர்கள் பூமியில் வானரர்களாகத் தோன்றினார்கள் என்று கதை ஒன்றாகவே அமைந்துள்ளது. வானரங்களாகப் புவியில் பிறக்க வேண்டும் என்று தேவர்களே கூடி நிச்சயித்துக் கொண்டதாக இங்கு பேசியிருக்கின்றான் காளிதாஸன். தசரதன் தன் மனைவிமார்களுக்குப் பாயஸத்தைப் பகிர்ந்து கொடுத்த விதத்திலும், கம்பன், காளிதாஸன், வால்மீகி ஆகிய இம்மூவருடைய கருத்தும் வெவ்வேறாகவே காணப் படுகின்றன. பாயஸத்தை இரண்டாகப் பிரித்து, ஒரு பகுதியைக் கௌசல்யைக்கும், மற்றப் பகுதியை இரண்டாகப் பிரித்து அதாவது நான்கில் ஒரு பங்கை சுமித்திரைக்கும் மிஞ்சி இருந் ததை இரண்டாகப் பிரித்து அதாவது எட்டில் ஒரு பாகத்தை கைகேயிக்கும் மிச்சம் உள்ள பாகத்தை சுமித்திரைக்கு இரண் டாவது முறையாகவும் அரசன் கொடுத்தான் என்பது வால்மீகி கூறும் மொழி. பாயஸத்தை இரண்டு பாகமாக சரிசமமாகப் பிரித்து கௌசல்யைக்கு ஒரு பாகத்தையும் கைகேயிக்கு மற் றொரு பாகத்தையும் கொடுக்கிறான் அரசன். அம்மனைவிமார் இருவரும் தங்களுக்குக் கிடைத்தவற்றில் பாதி பாகத்தை சுமித்திரைக்குக் கொடுக்கிறார்கள் என்கின்றான் காளிதாசன்.

பத்ம புராணம், அத்யாத்ம இராமாயணம் ஆகிய நூல் களிலும் பாயஸம் பங்கிடும் விஷயத்தில் காளிதாஸன் கூறிய கருத்தை அப்படியே காணலாம்.

மூன்று மனைவிமார்களுக்கும் சமமாகப் பகிர்ந்து கொடுத்து தட்டில் சிந்திக் கிடந்த பாயஸத்தை சுமித்திரைக்கு இரண்டாவது முறையாகக் கொடுத்தான் அரசன் என்று இங்கு கம்பன் எங்கும் இல்லாத புதியதொரு வழியை வகுத்துள்ளான்.

கருவுற்ற அம் மனைவிமார்கள், சங்கம், சக்கரம், கதை தரித்த ஒருவரால் உபசரிக்கப்படுவது போலும், சப்த ரிஷிகளால் கொண்டாடப்பட்டு லக்ஷ்மி தேவியால் கௌரவிக்கப்படுவது போலவும் சொப்பனம் கண்டார்கள் எனக் காளிதாஸன் இங்கு புதியதொரு கற்பனை செய்துள்ளான். ஆனால், லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்கள் சங்கு, சக்கரம், ஆதிசேஷன் இவர்களுடைய அவதாரங்கள் என்று பத்ம புராணம், கம்ப இராமாயணம் ஆகியவற்றில் கூறிய விஷயத்தை மறைமுகமாக இங்கு நினைவுபடுத்துவது போல் அமைந்துள்ளது, இச் சொப்பன வரலாறு. விசுவாமித்திர முனிவருடன் இராம, இலக்ஷ்மணர்கள் காட்டிற்குப் புறப்படும் போது தாய்மார்களை வணங்கினார்கள் எனக் காளிதாஸன் இங்கு கூறிய விஷயம் முக்கியமாய் கவனத்திற் குரியது. அகலிகை சாப வரலாற்றில் அகலிகையை கண்ணுக்குத் தெரியாமல் போகக் கடவது என கௌதமர் சபித்ததாக ஆதி கவி கூறுகிறார். பத்ம புராணத்தை ஆதாரமாகக் கொண்டு அவளைக் கல்லாகப் போகக் கடவது என சபித்ததாக காளிதாஸன் பேசியிருக்கிறான். வேதாந்த தேசிகனும் இவ் விஷயத்தில் காளிதாஸனைத்தான் பின்பற்றியுள்ளார். போஜ மகாகவி மாத்திரம் ஆதிகவி வழியிலே சென்று கண்ணுக்குத் தெரியாமல் போகக் கடவது எனச் சபித்ததாக ''போஜசம்பு'' என்ற நூலில் தெளிவுபடுத்துகிறார்.

தக்க வயது வந்த தனது குமாரர்களுக்குத் திருமணம் செய்ய வேண்டிய விஷயத்தைப் பற்றி தசரதன் பேசிக் கொண்டிருக்கும் போது எதிர்பாராவண்ணம் விசுவாமித்திரர்

அங்கு வந்தார் என்று வால்மீகி கூறியிருப்பது போல், இங்கு ஜனக மகாராஜனால் அனுப்பப்பட்ட அந்தணன், இராமன் வில்லை முறித்த செய்தியை தசரதனுக்குத் தெரிவிக்க அயோத்திக்கு வந்தபோது, தசரதரும் தற்செயலாக தனது குமாரர்களுக்குத் திருமணம் நடத்துவதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார் என்று இங்கு காளிதாஸன் கதையை அமைத்து உள்ளான்.

அடுத்தபடியாக 12-ஆவது சருக்கத்தில் கூறியுள்ள கதையைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். அயோத்தியா காண்டம் முதல் யுத்த காண்டம் வரையில் (அதாவது பட்டாபிஷேகச் செய்தி நீங்கலாக) நடந்த கதை கோவை யாய், இரத்தினச் சுருக்கமாய், பற்பல கற்பனைகளுடன் அழகாகப் பேசப்பட்டுள்ளது. கைகேயி தசரதனிடம் கேட்ட இரண்டு வரங்களுள், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதை முதல் வரமாகவும், இராமனைப் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்கு அனுப்புவதை இரண்டாவது வரமாகவும் கேட்ட தாக ஆதி கவி கூறியுள்ளார். இங்கு வனவாசத்தை முதல் வரமாகவும், பட்டாபிஷேகத்தை இரண்டாவது வரமாகவும், கைகேயி கேட்டதாக வரம் கேட்ட முறையிலும் காளிதாஸன் ஒரு வித்தியாசத்தைத் தருகிறான். இவ் விஷயத்தில் மட்டும் கம்பன் ஆதிகவியின் அடிச் சுவட்டிலேயே சென்றிருக்கிறான். ஆனால், பதினான்கு ஆண்டுகள் என்று குறிப்பாக மூலத்தில் கூறியுள்ள விஷயத்தை மாத்திரம் கம்பன் ஏனோ விட்டு விட்டான்?

காகம், சீதா தேவியைத் தீண்டித் துன்புறுத்திய செய்தி இராமனும், சீதையும் சித்திரக்கூடத்தில் வசித்தபோது நடந்த தாகும். இச்செய்தியை வால்மீகி முனிவர் அயோத்தியா காண்டத்தில் நடந்த இடத்தில் சொல்லாமல், சுந்தர காண்டத்தில் சீதா தேவி, இராமனுக்கு அநுமனிடம் செய்தி சொல்லி அனுப்பும் போது இக்கதையை அடையாளமாகச்

சொல்லியனுப்பியதாகக் கூறியிருக்கிறார். கம்பனும் இங்கு வால்மீகியைத்தான் பின்பற்றியுள்ளான். காளிதாஸன் மாத்திரம் சித்திர கூடத்தில் நடந்த இடத்திலேயே - அதாவது அயோத்தியா காண்டத்திலேயே - இக் கதையை வைத்துப் பேசியிருக்கிறான். காளிதாஸனுடைய இம்மாறுதலுக்குப் பத்ம புராணம் ஆதாரமாய் அமைந்துள்ளது.

13-ஆவது சருக்கக் கதையை அடுத்தபடியாகச் சற்று கவனிப்போம். இராமன் சீதையுடன் வெற்றி வாகை சூடி விமானமேறி அயோத்திக்குப் புறப்பட்டுச் செல்லும்போது இடையிடையே கீழே பல இடங்களைச் சுட்டிக்காட்டி அங்கு முன்பு தனிமையாகவும், சீதையுடன் கூடியும் நிகழ்ந்த பழைய சம்பவங்களை எல்லாம் நினைவுறுத்திக் கொண்டே செல்கிறான். வால்மீகி முனிவரும் தனது நூலில் இச் சம்ப வத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடுகிறார். ஆனால், காளிதாஸன் இதை வெகு விஸ்தாரமாகவும் அழகாகவும் புதிய பற்பல சம்பவங்களுடன் எடுத்துக் காட்டுவதை நன்கு உணரலாம்.

''பஞ்சவடியில் கோதாவரி நதிக்கரையில் முன்பு வேட்டையாடிய களைப்புத் தீருவதற்காக உன் மடியில் படுத்துக் குளிர்ந்த காற்று வீசத் தூங்கிய இடம் இதோ தெரிகிறது பார்!''

''சித்திரகூட மலையருகில் தமால மரத்துளிரை எடுத்து முன்பு உன் கன்னத்தில் அலங்காரமாகச் சூட்டினேனே, அம்மரம் இதோ, தெரிகிறது பார்!''

''இதோ இந்த இடத்தில்தான், அதாவது குகனுடைய பட்டணத்தில் முன்பு நான் தலையில் அணிந்திருந்த ரத்தினத்தைக் களைந்து சடையைப் போட்டுக் கொண்ட போது, அருகில் இருந்த சுமத்திரர் துயரம் தாளாது 'கைகேயி! உனது எண்ணம் நிறைவேறிவிட்டது!' என்று வாய்விட்டுக் கூறிக் கதறிய இடம் இதோ தெரிகிறது பார்!'' என்று

விமானத்தில் சென்றவாறே இராமன் இம்மூன்று சம்பவங்களும் நடந்த இடங்களை சீதாதேவிக்குச் சுட்டிக் காட்டியதாக இங்கு காளிதாஸன் பேசியுள்ளான். ஆனால், அயோத்தியா காண்டத்தில் இச்சம்பவங்கள் நடந்ததாகக் கூறும் இடத்திலேயே இவை நடந்ததாக மூலத்திலோ அல்லது இந் நூலிலோ கவி குறிப்பிடவில்லை.

14-ஆவது சருக்கத்தில் சிறிது கவனம் செலுத்துவோம். இங்கு ஆரம்பத்தில் இராம பட்டாபிஷேகம் இடம் பெற்றுள்ளது. அயோத்தியில் பட்டாபிஷேகம் நடந்ததாகக் கூறியிருக்கும் வால்மீகி இராமாயணக் கதைப் போக்கிற்கு மாறாக அயோத்திக்கு வெளிப்புறத்தில் உள்ள தோட்டத்தில் அபிஷேகம் நடந்ததாகச் சொல்லி கதையை மாற்றி அமைத்துள்ளான் காளிதாஸன். இராமனுடைய கட்டளைப்படி வால்மீகி ஆசிரமத்தின் அருகாமையில் இலக்குமணனால் விடப்பட்டுக் கூவிக் கதறிக் கொண்டிருக்கும் சீதாதேவியின் நிலையை கண்ட அங்குள்ள முனி குமாரர்கள் இதை வால்மீகி முனிவருக்குத் தெரிவிக்க, அம்மாமுனிவர் வந்து சீதையைத் தன் ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்றதாக வால்மீகி இராமாயணத்தில் கதையைக் காண்கிறோம். தர்பம், சமித்து இவற்றைத் தேடிக் காட்டிற்கு வரும் சமயம் தற்செயலாக சீதா தேவியின் கூக்குரலைக் கேட்டு அவளைத் தன் ஆசிரமத்துக்கு அழைத்து வந்ததாகக் காளிதாஸன் இங்கு கதையில் சிறிய மாற்றம் செய்திருக்கிறான்.

15-ஆவது சருக்கத்தைப் பற்றிச் சற்று ஆராய்வோம். இலவணாசுரனை வெல்வதற்கு சத்ருக்னன் அயோத்தியிலிருந்து போகும் வழியில் வால்மீகி ஆசிரமத்தில் ஓரிரவு தங்குகிறான். அதே இரவில் சீதை லவகுசர்களை ஈன்றெடுத்த செய்தியைக் கேட்டு மகிழ்ந்து விடியற்காலையில் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று இலவணாசுரனை வென்று 12 ஆண்டுகள் கழித்து அயோத்திக்குத் திரும்பும் வழியில் மறுபடியும் அதே

ஆசிரமத்தில் தங்குகிறான் சத்ருக்னன். அங்கு லவகுசர்கள் வால்மீகி இயற்றிய இராமாயணத்தை இனிமையாகப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். அதைக் கேட்டு மகிழ்ந்த சத்ருக்னன் மறுநாள் புறப்பட்டு அயோத்தியை அடைந்து, இராமனிடம் தான் இலவணாசுரனை வென்ற வரலாற்றைச் சொல்லி, அதோடு முடித்துக் கொள்கிறான். லவகுசர்களின் பிறப்பு, அவர்கள் இராமாயணம் பாடியது, ஆகியவற்றை இராமனிடம் சொல்லியதாக ஆதிகாவியத்தில் காணவில்லை. வேண்டு மென்று சொல்லாமல் மறைத்து வைத்ததாகவும் குறிப்பிட வில்லை. அயோத்தியை விட்டு சத்ருக்னன் புறப்பட்டுச் செல்லும் வழியில் வால்மீகி ஆசிரமத்தில் ஓரிரவு தங்கியதை மாத்திரம் கூறி, திரும்பும்போது அவ்வாசிரமத்துக்கு வராமல் நேரிடையாக அயோத்திக்கு வந்து, வால்மீகி உத்தரவுப்படி குசலவர்களுடைய பிறப்பைப் பற்றி இராமனிடம், சொல்லா மலேயே மூடி மறைத்து விட்டான் என்று காளிதாஸன் இங்கு சமத்காரமாக கதையில் ஒரு முக்கிய திருப்பம் கொடுத் துள்ளான். குசலவர்களின் பிறப்பு இராமனுக்குத் தெரிந்து விட்டால் வால்மீகியால் திட்டமிட்டிருந்த இராமாயணக் கதையின் போக்கே மாறிவிடும் என்று கருதி, காளிதாஸன் இவ்வாறு கதையை மாற்றினானோ என்றுகூட ஊகிக்க வேண்டியிருக்கிறது.

உண்மையில் சத்ருக்னன் வாயிலாக குசலவ ஜனனத்தை இராமன் முன்னமேயே அறிந்திருந்தால் தன் பிழையை உணர்ந்து அக்குமாரர்களை அழைத்துவர ஏற்பாடு செய்திருப் பான். பிறகு இராமாயணம் இயற்ற வேண்டிய எண்ணமோ, அதை குசலவர்கள் மூலம் பாட வைக்க வேண்டும் என்ற கருத்தோ, வால்மீகிக்குத் தோன்ற அவகாசம் ஏது? தவிர நடந்த இராமாயணக் கதையை நேரிடையாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள கதாநாயகியாகிய சீதாதேவியும், தனது காவியத்தை எங்கும் பாடிப் பறை சாற்ற வல்லமை வாய்ந்த

லவகுசர்களும் தன் அருகாமையில் இருந்ததால்தான் இராமாயணக் காவியத்தை இயற்ற வேண்டிய எண்ணம் வால்மீகி முனிவருக்குத் தோன்றிற்று என்று கூறுவதில் மிக்க பொருத்தம் இருக்கிறதல்லவா? இராமனைப் பிரிந்த சீதை, கணவனுடைய சரிதத்தை தன் புத்தல்வர்கள் மூலம் கேட்டாவது ஆறுதல் அடையட்டும் என்று எண்ணினார் வால்மீகி. அதன் பயனாகத் தோன்றிய புனிதமான இராமாயணம்தான் இன்று நமக்குக் கிடைத்திருக்கிறது.

''தக்க தருணத்தில் லவ, குசர்களை இராமனிடம் அழைத்துச் சென்று கதாநாயகன் முன்னிலையில் தனது காவியத்தை அரங்கேற்ற வேண்டும் என்று எண்ணித்தான் குசலவ ஜனனத்தை இராமனிடம் தெரிவிக்காமல் இருக்க சத்ருக்னனுக்கு வால்மீகி கட்டளையிட்டார்!'' என்று காளிதாஸன் கூறியது கீழ்வரும் கருத்தை ஆமோதிப்பதுபோல் இருக்கிறது.

இராமனுடைய அச்வமேத யாகத்திற்கு குசலவர்களை அழைத்துக் கொண்டு வால்மீகி முனிவர் அங்கு வர குசலவர்களின் இராமாயணக் கானத்தைக் கேட்ட இராமன் அக்குமாரர்களை அழைத்து தன் முன்னிலையிலேயே காவியம் முழுவதையும் பாடும்படி உத்தரவிடுகிறான். அதன் படி அக்குமாரர்கள் நாரத வால்மீகி சம்வாதம் தொடங்கி இராமன் வைகுண்டம் சென்றது வரையில் (தங்களுடைய சரிதத்தையும் சேர்த்து) 24 ஆயிரம் ச்லோகங்கள் கொண்ட இராம காதையைப் பாடக் கேட்ட இராமன், கதா சந்தர்ப் பத்தையொட்டி, லவ, குசர்களை தன் குமாரர்கள் என அறிந்து தூதர்கள் மூலம் சீதையை வரவழைத்து அவளுடைய கற்பைப் பரீட்சை செய்கிறான் என்பது ஆதி காவியத்தில் கூறியுள்ள கதைப் போக்கு. குமாரர்கள் இராமாயணத்தைப் பாடும்போது ''இது யார் இயற்றியது?'' என்று இராமன் கேட்க, ''வால்மீகி முனிவரால் இயற்றப்பட்டது'' என

சிறுவர்கள் சொல்லக் கேட்கின்றான் இராமன். உடனே வால்மீகி முனிவரை அடைந்து, அவர் மூலம் அச்சிறுவர்களே தன் குமாரர்கள் என அறிந்து பிறகு சீதையை வரவழைத்து, அவளுடைய கற்பைப் பரிசோதனை செய்ய ஏற்பாடு செய்தான் என இங்கு காளிதாஸன் கதையில் ஒரு மாற்றம் செய்துள்ளான். வால்மீகி முனிவர் சொன்ன பிறகு தான் அச்சிறுவர்களைத் தனது புதல்வர்கள் என்று இராமனால் தெரிந்து கொள்ள முடிந்தது என்று காளிதாஸன் கூறியிருப்பதைப் பார்த்தால், தானாகவே அவர்களைத் தெரிந்து கொள்ள உதவும் லவ, குசர்களுடைய சரித்திரம் அடங்கிய உத்தரகாண்டப் பகுதியின்றிப் பட்டாபிஷேக செய்தியோடு முடிவடையும் இராமாயணத்தை குமாரர்கள் அசுவமேத யாகத்தில் இராமன் முன்னிலையில் பாடினார்கள் என்று முடிவு செய்ய வேண்டி இருக்கிறது. உத்தரகாண்டம் வால்மீகி இயற்றியதல்ல என வாதம் செய்பவர்களுக்கு இக்கருத்து மிக்க உதவியாய் இருக்கும்.

ஆதி காவியத்திற்கு முகவுரையாக அமைந்திருக்கும் முதல் நான்கு சருக்கங்களின் கடைசியில் லவ, குசர்கள் இராமாயணத்தை ஒருமுறை கானம் செய்தார்கள் என்றும், பிறகு அசுவமேதயாகத்தில் சீதையைப் பிரிந்திருக்கும் இராமன் முன்னிலையில் வால்மீகி முனிவருடன் வந்து இரண்டாம் முறையாக இக்குமாரர்கள் இராமாயணத்தைப் பாடினார்கள் என்றும் இந்நூலின் வாயிலாகத் தெரிய வருகிறது. இங்கு இராமாயணம் எங்கு பாடியது? இவ்விரண்டு இராமாயணங்களுக்கு இடையே ச்லோக எண்ணிக்கை, கதையமைப்பு ஆகியவற்றில் ஏதாவது வேறுபாடு உண்டா? - இப்படிப்பட்ட முக்கியமான பல விஷயங்களை ஆராய்ச்சியாளர்களே முன் வந்து முடிவு கூற வேண்டும்.

**- சுதேசமித்திரன், தீபாவளி மலர் - 1966**

# 5. மூவர் கண்ட முதல் சந்திப்பு

காலம், தேசம், சூழ்நிலை, மக்களின் பழக்க வழக்கங்கள், தேவை, ருசி, கவிகளின் மனோநிலை, எண்ணங்கள் ஆகியவற்றுக்கு ஏற்றவாறுதான் அநேகமாகக் கவிகள் காவியங்களை இயற்றுகின்றனர். புராணக் கதைகளை இயற்றும் போது கீழ்க்காணும் முறையைப் பின்பற்றியே சென்றிருக்கிறார்கள். அவர்கள், புராணக் கதைகளில் (மூலக் கதையிலும் சரி, கிளைக் கதையிலும் சரி) பற்பல மாற்றங்களைச் செய்து மூல நூலுக்கு மெருகு கொடுத்து, புதுமைக்கும் பழைமைக்குமிடையே பாலத்தைப் போட்டு வரும் வழக்கத்தை தொன்று தொட்டுப் பார்த்து வருகிறோம். வால்மீகி இராமாயணத்தைத் தழுவி பற்பல மாற்றங்களுடன் காவியம் இயற்றியவர்களுள் கம்பனும், துளசியும் முக்கியமாக இங்கு குறிப்பிடத் தக்கவர்கள். சீதா விவாக கட்டத்தில் பாத்திரப் படைப்புக்குப் பொருத்த மானதாயும் அக்கால நாகரிகத்திற்கு எடுத்துக்காட்டாயும் கவியின் பெருமைக்கு உகந்ததாயும் பகுத்தறிவுக்கு ஒத்ததாயும் உள்ள சில மாறுதல்களைக் கம்பனும் துளசியும் எவ்வாறு தமது நூல்களில் குறிப்பிடுகிறார்கள் என்பதை க்கட்டுரையில் சிறிது காண்போம்.

## வால்மீகி, கம்பன், துளசி

விசுவாமித்திரர், தனுர் யாகத்தைக் காண இராம, இலட்சுமணருடன் நேரிடையாக மிதிலையில் உள்ள யாக சாலைக்கு வருகிறார். ஜனகரும் புரோகிதரான சதானந்தரும் அவர்களை வரவேற்கின்றனர். அகல்யா சாப விமோசனம் உள்பட இதுவரை இராமன் நிகழ்த்திய வீரச் செயல்களைக் கூறி இராமனை அறிமுகப்படுத்துகிறார் முனிவர். அகல்யையின்

புதல்வரான சதானந்தர் தன் தாயினுடைய சாபவிமோசனம் பற்றிய சில விவரங்களை அறிய ஆவல் கொண்டிருப்பதை உணர்ந்த முனிவர், நடந்தவற்றை சதானந்தருக்கு விரிவாகக் கூறுகிறார். அதைக் கேட்ட சதானந்தர், விசுவாமித்திரருடைய வரலாற்றினை எல்லாம் விரிவாக அங்கு சபையோர்கள், ஜனகன் ஆகியவர்களின் முன்னிலையில் இராமனுக்கு எடுத் துரைக்கிறார். மாலை நேரம் வந்தவுடன் அனைவரும் தங்களது இருக்கைக்குச் சென்று விடுகிறார்கள் என்பது மூல நூலின் கதைப் போக்கு.

இராம, இலட்சுமணருடன் விசுவாமித்திர முனிவர் மிதிலையில் ராஜ வீதியோடு செல்கிறார். அங்கு அந்தப் புரத்து மேல்மாடியில் கன்னி மாடத்தில் நின்ற கோலத்தில் காட்சி அளிக்கும் சீதையும், இராமனும் ஒருவரை ஒருவர் கண்டு காதலிக்கின்றனர். பிறகு முனிவர் வருகையை உணர்ந்த ஜனகர், அவர்களை எதிர்கொண்டு அழைத்து, ஒரு மாளிகையில் அமர்த்திவிட்டுச் சென்று விடுகிறார். பிறகு அங்கு சதானந்தர் வருகிறார். இதுவரை இராமன் நிகழ்த்திய வீரச் செயல்களை (அகல்யா சாப விமோசனம் உள்பட) சதானந்தருக்குக் கூறுகிறார் முனிவர். தன்னுடைய தாயின் வரலாற்றை கேட்பதில் கேள்விக் குறிகள் மூலம் அதிக ஆர்வம் காட்டாமலேயே சதானந்தர் ஏகாந்தத்தில் இரவில் ஜனகர் இல்லாதபோது விசுவாமித்திரருடைய சரித்திரம் அனைத்தையும் இராமனுக்குக் கூறுகிறார். பிறகு அனை வரும் இருக்கைக்குச் சென்று விடுகின்றனர். இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் நினைத்துக் காதல் நோயால் வருந்துகின்றனர் என இங்கு கம்பன் மூலக்கதையை சற்று மாற்றி அமைக்கின்றான்.

வில்லை ஒடித்து வீரத்தைக் காட்டினால் மாத்திரம் பெண்கள் புருஷனை மணக்க இக்காலத்தில் விரும்ப மாட்டார்கள். புருஷனுடைய அழகையும் வெகுவாக

விரும்புகின்றனர். இதை உணர்த்தும் வகையில்தான் கம்பன் திருமணத்திற்கு முன்பு இராமனுக்கும் சீதைக்கும் முதல் சந்திப்பை ஏற்படுத்தி, ஒருவரை ஒருவர் காதலித்ததாகக் கூறுகிறான். துளசியும் இதே கருத்தைக் கொண்டு இருவருக்கும் முதல் சந்திப்பை இவ்வாறே கூறியிருக்கிறார். முனிவர் இராம இலட்சுமணருடன் மிதிலைக்கு அருகாமையிலுள்ள மாந்தோட்டத்தில் வந்து தங்குகிறார். பூஜைக்கு மலர் கொய்வதற்காக அங்கு ஒரு பூந்தோட்டத்தை அடைகிறான் தம்பி இலக்குமணனுடன் இராமன். அங்கு ஒரு குளம். கரையிலே ஒரு பார்வதி கோயில். தாயின் அனுமதியைப் பெற்று அங்கு வந்து நீராடி, பார்வதியை வணங்கச் செல்கிறாள் சீதை. அப்பொழுது இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் கண்டு காதலித்து மணம் செய்து கொள்ள விரும்புகின்றனர். பிறகு, சீதை பார்வதி தேவியை வணங்கி இராமனைக் கணவனாக அடைய அருள் புரிய வேண்டுகிறாள். அவள் முன் தோன்றிய பார்வதி, ''நாரதர் முன்பு உனக்குக் கூறியபடி நீ விரும்பியவனையே கணவனாக அடைவாய்'' எனக் கூறி மறைகிறாள். இங்கு துளசி, முதல் சந்திப்பில் இருவருக்கும் உள்ள மன ஒற்றுமையைக் காட்டுவதோடு தெய்வ அருளையும் புதியதாய் புகுத்தியிருக்கிறார். தாய் தந்தையர்கள் சம்மதத்தை மாத்திரம் வைத்து குழந்தைகளுக்குத் திருமணம் நடத்தும் பழங்கால வழக்கத்தைப் பின்பற்றிய வால்மீகி முனிவர், திருமணத்திற்கு முன்பு இவ்விருவர்களும் சந்தித்ததாகச் சொல்ல விரும்பவில்லை.

## ஏகாந்தத்தில் கம்பன்

அத்துடன் ஜனகருடைய அனுமதியைப் பெற்று புரோகிதரான சதானந்தர் மாத்திரம் இராமருடன் முனிவர் தங்கியிருக்கும் மாந்தோட்டத்துக்குச் சென்று அவர்களை நேரடியாக யாக சாலைக்கு அழைத்து வந்ததாகக் கூறுகிறார் துளசி.

விசுவாமித்திரருடைய வரலாற்றில் வெகுவாக அவர் தோல்வியுற்ற செய்திகள், மேனகையினுடைய குறுக்கீட்டால் தபோபங்கம் ஆகியவை அடங்கியிருப்பதால் இவற்றை பகலில் யாகசாலையில் ஜனகர் போன்ற பெரியவர்களை வைத்துக் கொண்டு விசுவாமித்திரருடைய முன்னிலையில் இதைச் சொல்லி அவரை அறிமுகப்படுத்துவது அவரை அவமானப்படுத்துவதற்கு ஒப்பாகும் என்று கருதிய கம்பர், இரவில் ஏகாந்தத்தில் ஜனகர் இல்லாதபோது, விசுவாமித்திரருடைய வரலாற்றை இராமனிடம் கூறியதாக, கதையை மாற்றி அமைத்திருக்கும் பகுதி ரசிகர்களின் மனத்தைக் கவரும் என்பதில் ஐயமில்லை. தவிர, தன்னுடைய தாய் அகலிகைக்கு ஏற்பட்ட அவமானத்தை யாகசாலையில் முனிவன் சொல்லக் கேட்கும்போது அதில் ஆர்வம் காட்டி அதைப் பலரது கவனத்திற்குக் கொண்டு வருவது சதானந்தருடைய மனத்தைப் புண்படுத்தும் என்று எண்ணித்தான், மாளிகையில் ஏகாந் தத்தில் விசுவாமித்திர முனிவர் அதை சதானந்தருக்குக் கூறிய தாகவும், அதைக் கேட்டு சதானந்தர் அதில் அவ்வளவு அக்கறை காட்ட வில்லை என்றும் கம்பன் சொல்லி ஒரு புதிய மாற்றத்தைப் படைத்திருக்க வேண்டும் என எண்ணத் தோன்றுகிறதல்லவா?

விசுவாமித்திர முனிவர் சதானந்தருக்கு அகலிகை வரலாற்றைக் கூறி இராமனை அறிமுகப்படுத்தியதாகவோ, சதானந்தர் விசுவாமித்திரருடைய சரிதத்தை இராமனிடம் கூறியதாகவோ ஒன்றுமே கூறாமல் துளசி, சாமர்த்தியமாக விவாதத்திற்கு இடமின்றித் தப்பித்துக் கொண்டு விட்டார்.

## துளசியின் புதிய படைப்புகள்

சிவதனுசை எடுத்து நாணேற்றி வளைப்பவருக்குத் தனது மகள் சீதையை திருமணம் செய்து கொடுப்பதாக ஜனகர் பிரதிக்ஞை செய்ததாக கம்பனும் வால்மீகியும்

கூறியிருக்கிறார்கள். நாணேற்றுவதன் மூலம் ஒருவனுடைய வீரத்தைப் புரிந்து கொள்ள முடியாது என்று கருதிய துளசி தாஸர் வில்லை வளைத்து ஒடிப்பவனுக்கு மகளைத் தருகிறேன் என்று ஜனகருடைய பிரதிக்ஞையில் ஒரு திருத்தம் செய்து கதையை அமைத்திருக்கிறார். வளைப்பது சுலபம். ஒடிப்பது கடினம் என்று துளசி கருதியது அனுபவத்துக்கு ஒத்ததாகவே இருக்கிறது.

தந்தையின் உத்தரவுப்படி மாலையும் கையுமாக, சீதை சபா மண்டபத்தை அடைந்து இராமன் வில்லை முறிக்கப் போகும் நிகழ்ச்சியை ஆவலுடன் பார்த்துக் கொண்டு இருந்தாளென்று துளசி, மற்ற இருவரும் கூறாத புதியதொரு விஷயத்தை இங்கு கூறியிருக்கிறார். மணமகனுடைய வீரத்தைப் பிறர் சொல்லிக் கேட்பதைவிட நேரில் கண்டு களிப்பதில் பெண்களுக்கு ஆர்வம் அதிகம் - அத்துடன் புதிய தொரு நம்பிக்கையும் உற்சாகமும் அவர்களுக்கு உண்டாகும் என்ற உலக அனுபவத்தை மேலே கூறிய மாறுதல் மூலம் துளசி எடுத்துரைத்திருப்பது ரசிகர்கள் கவனிக்க வேண்டிய ஒரு முக்கிய விஷயமாகும்.

சிவ வில்லை முறிப்பதற்கும், சீதையின் திருமணத் திற்கும் என்ன சம்பந்தம் என்ற கேள்விக்கு மூலத்திலோ, கம்பனிலோ பதில் காணவில்லை. சீதையின் சிறு பிராயத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறி, இக் கேள்விக்கு பொருத்த மானதொரு பதிலைக் கூறியிருக்கிறார் துளசி தாஸர். ஜனகர் தினந்தோறும் சிவதனுசு வைத்திருக்கும் அறைக்குச் சென்று அதைத் தொழுது வருவது வழக்கம். அவருடைய மனைவி யும் தினந்தோறும் மெழுகிச் சுத்தம் செய்து வருவது வழக்கம். வேறு வேலையினால் தான் போக முடியாமல் தன் மகளான சீதையை அனுப்பி அவள் தனது வேலையை வழக்கம் போல் செய்து வரச் சொல்லுகிறாள். அப்பெரிய வில்லை கையால் தூர எடுத்து வைத்து இதுவரை யாருமே

சுத்தம் செய்யாதிருந்த அடிப் பாகத்தையும் சுத்தம் செய்து வில்லை அதே இடத்தில் எடுத்து வைத்து விட்டு வருகிறாள் சீதை. இச் செய்தியை அறிந்த ஜனகன் அசைக்க முடியாத சிவ தனுஸை சுலபமாய் கையால் எடுத்து வைத்த இவ்வீராங் கனைக்கு, இவ் வில்லை முறிக்க சக்தி வாய்ந்தவனே கணவனாக வரத் தகுதி வாய்ந்தவன் என்று நினைத்து அன்றே இவ்வாறு பிரதிக்ஞை செய்தான்.

இராமன் வில்லை முறித்தவுடன் கையில் இருந்த மாலையை இராமன் கழுத்தில் அணிவிக்கிறாள் சீதை. இதுவும் துளசியின் புதிய கற்பனைதான். முதலில் பூந்தோட்டத் திலும், இரண்டாவதாக வில்லை முறிக்கும் பொழுதும், மணமகன், மணமகள் இருவருக்கும் திருமணம் நடப்பதற்கு முன்பு இருமுறை சந்திப்பு ஏற்படுத்தியிருக்கிறார் துளசிதாசர். தம்பதிகள் பல முறை சந்திப்பதனால் ஒருவருக்கொருவர் அன்பு வளர்ந்து கனிந்து மனம் ஒத்து, திருமணத்தை ஆவ லோடு எதிர் பார்ப்பார்கள் என்ற கருத்தை மனதில் கொண்டு தான் துளசி இவ்வாறு கூறியிருக்கிறார். சிவதனுசு முறிந்த வுடன் அவ்வொலியைக் கேட்டு, பரசுராமர் யாகசாலைக்கு வருகிறார். கோபமுற்ற பரசுராமருக்கும், இராமருக்கும் வாக்குவாதம் நடந்து, முடிவில் பரசுராமர் தோல்வியடை கிறார் என்பது துளசியின் கதைப் போக்கு. விவாகம் நடந்து திருமணக் கோலத்துடன் அயோத்திக்குச் செல்லும் பொழுது நடந்ததாக வால்மீகியும் கம்பனும் கூறியுள்ள இச்சம்ப வத்தைத் திருமணத்துக்கு முன்பு வில்லை முறித்தவுடனே நடந்ததாக துளசி எடுத்துக் கூறுகிறார். வில்லை ஒடித்த இராமனுடைய வீரத்தைக் கண்கூடாகப் பார்த்த ஜனகன், சீதை இவர்களை மறுபடியும் இராமனுடைய வீரத்தைப் பார்க்கச் செய்து இராமனுடைய வீரத்திலே அசைக்க முடியாத ஒரு நம்பிக்கையை அவர்கள் உள்ளத்திலே ஊட்டுவதற்காகத் தான் பரசுராமர் தோல்வியுற்ற பகுதியை துளசி முன்னதாகவே

வைத்துப் பேசி யிருக்கிறார் என்று ஊகிப்பதில் பொருத்தம் இருக்கிறதல்லவா?

## மாப்பிள்ளை அழைப்பு

திருமணச் செய்தி கிட்டியவுடன், தசரதன் மிதிலைக்குத் திருமணத்திற்கு வருகிறார். முதல்நாள் மாலையில் ஊர்வல மாக இராமனைத் தேரில் சபா மண்டபத்திற்கு அழைத்து வருகிறார் ஜனகர். அங்கு ஜனகர், வசிஷ்டர், விசுவாமித்திரர் முதலியோர் கூடியிருக்கிறார்கள். வசிஷ்டரின் உத்தரவுப்படி அலங்காரத்துடன் சீதை அங்கு வருகிறாள். இருவரும் மேடையில் அமருகின்றனர். திருமணம் எப்பொழுது என ஜனகர் விசுவாமித்திரரைக் கேட்க, நாளை என முனிவன் பதில் கூறியதாக கம்ப இராமாயணத்தில் புதியதாய் கூறி யிருப்பதைப் பார்க்கும்பொழுது, தற்காலத்தில் திருமணத் திற்கு முதல் நாள் மாலை மணமகனை ஊர்வலமாக அழைத்து வந்து, மணமகன், மணமகள் இருவரையும் பீடத்தில் அமர்த்தி நிச்சயதார்த்தம் செய்துவரும் ஜானவாசம் என்ற சடங்கை மனதில் கொண்டு கம்பன் இதைப் படைத் திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. கன்னி மாடத்தி லிருந்த சீதையை இராஜ வீதியோடு சென்ற இராமன் முதல் முறையாகப் பார்த்தான். இரண்டாவது முறையாக முதல் நாள் மாலை நிச்சயதார்த்தத்தின் பொழுது இராமன், சீதை இவர்களுடைய சந்திப்பு நடக்கிறது. இராமனுக்கும் சீதைக்கும் திருமணத்திற்கு முன் இரண்டு முறை சந்திப்பை கம்பனும் ஏற்படுத்தியிருக்கிறான். இவ்விஷயத்தில் துளசிதாசர் கம்பனைப் பின்பற்றியிருக்கிறார் என்று சொல்லாமலேயே தெரிய வருகின்றது. அதுபோல் திருமணத்திற்கு முன் ஊருக்கு வெளியே சென்று தசரதனையும் இராமனையும் இராஜ வீதியோடு ஊர்வலமாக ஜனகன் அழைத்து வந்ததாகக் கூறி இதிலும் கம்பனையே பின்பற்றிச் செல்கிறார்.

## மாமனுக்குத் திருமண அழைப்பில்லை

பரதனுடைய தாய் மாமனாகிய யுதாஜித் என்பவன் பரதனை அழைத்துச் செல்வதற்காக அயோத்தி வருகிறான். இராமனுடைய திருமணத்திற்காக அனைவரும் மிதிலைக்குச் சென்றுவிட்ட செய்தி அப்பொழுதுதான் யுதாஜித்திற்குத் தெரிய வருகிறது. நேரிடையாக மிதிலைக்கு வந்து தசரதனைச் சந்தித்து நடந்தவற்றைக் கூறுகிறான் யுதாஜித்து என்று வால்மீகி கூறியிருக்கிறார். இதனால் திருமண அழைப்பு யுதாஜித்திற்குச் செல்லவில்லை என்று தெரிகின்றது. இராமனுடைய திருமணத்திற்காகச் சென்ற இடத்தில் பரதன் முதலியவர்களுக்கு திருமண ஏற்பாடு தற்செயலாக முடிகிறது. முடிவில் திட்டமிட்டது இராமனுடைய திருமணம் தான். அதைக் காண்பதில் அவ்வளவு அக்கறை கொள்ளாதவர்களுக்கு அழைப்பு அனுப்புவது அவசியம் இல்லை என்ற கருத்தினால்தான் தசரதன் அவ்வாறு செய்தான் என்று எண்ணத் தோன்றுகிறது. இப்பகுதியைக் கம்பனும் துளசியும் அறவே நீக்கிவிட்டனர். மைத்துனனுக்குக்கூட அழைப்பு அனுப்பாமல் தசரதன் பிள்ளைகளுக்குத் திருமணம் நடத்தினான் என்று கூறுவது பகுத்தறிவுக்கு எட்டாதது என்று கம்பனும் துளசியும் கருதியிருக்க வேண்டும்.

இராமனும் சீதையும் திருமணக் கோலத்துடன், அக்னி வலம் வந்து, அம்மி மிதித்து அருந்ததியைக் கண்டார்கள் எனக் கம்பன் புதியதாய் கூறிய திருமண முறை தற்காலத்தில் நடந்து வருவதை அப்படியே நினைவுபடுத்துகிறது.

## கம்பன் காட்டிய அருந்ததி

இப்பொழுது புரோகிதர் தம்பதிகளுக்கு ஆகாயத்தில் நட்சத்திர வடிவத்தில் இருக்கும் அருந்ததியைச் சுட்டிக் காண்

பிப்பதைப் பார்த்திருக்கிறோம். இங்கு எதிரில் திருமணத்தை நடத்தி வைப்பதற்காக அமர்ந்து இருக்கும் வஸிஷ்ட முனிவருடைய அருகாமையில் காட்சியளிக்கும் வஸிஷ்டருடைய மனைவியாகிய அருந்ததியை தம்பதிகள் (ஆகாயத்தில் அண்ணாந்து பார்க்காமல்) நேரிடையாக அசல் அருந்ததியைக் கண்டார்கள் என்று கம்பன் ரசமாகப் பேசியிப்பது உள்ளத்தைக் கவருகின்றது.

## சீதையின் தீர்க்க தரிசனம்

திருமணம் முடிந்தவுடன் சீதை, மூத்தவளும் தனக்கு நேரிடையாக மாமியாருமாகிய கௌசல்யையை விட்டு விட்டு, முதலில் கைகேயியை வணங்கிவிட்டு அதற்கடுத்த படியாக கௌசல்யையை வணங்கியதாக மற்றும் இருவரும் கூறாத இப் புதிய கருத்தை கம்பர் வெளியிட்டிருக்கிறார். கைகேயியின் குணத்தை முன்னதாகவே, பிறர் சொல்லியோ, அல்லது தானாகவோ தெரிந்து கொண்டு கைகேயியினால் தனக்கு எதிர்காலத்தில் இடையூறுகள் வராமல் இருப்பதற்காக அவளை திருப்திபடுத்தும் வகையில் முதலில் சீதை அவளை வணங்கினாள் என்ற உட்கருத்தை மனத்தில் கொண்டு கம்பன் இவ்வாறு கூறியிருக்க வேண்டும் என்பது திண்ணம். துளசி இராமாயணப்படி தசரதர் மனைவிமார்களை அயோத்தியிலே விட்டு விட்டு பரிவாரங்களுடன் தான் மாத்திரம் மிதிலைக்கு வந்து திருமணத்தை நடத்திச் சென்றதாகத் தெரிய வருகிறது. மனைவிமார்களை அதிலும் முக்கியமாக கைகேயியை அழைத்துச் சென்றால் என்ன விபரீதம் நடக்குமோ என்று தசரதன் அஞ்சினான் என்பது துளசியின் கருத்தாக இருக்க வேண்டும்.

**தினமணி தீபாவளி இதழ் - 1969**

# 6. எத்தனை இராமன்கள்!

ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்டு, மகாகவி கம்பன் இம் மகா காவியத்தை இயற்றியுள்ளார். இராம பக்தியை உலகில் பரப்புவதுதான் இம்மகாகவியின் முக்கிய நோக்கம். கவி, ஆதியில் தனது நூலுக்கு வைத்த பெயர் யாதென்று திட்டவட்டமாகத் தெரியவில்லை. சிலர் இராமாவதாரம் என்று கவி தன் நூலுக்குப் பெயரிட்டதாகச் சில ஆதாரங்களை காட்டி விளக்குகின்றனர். அது எவ்வாறாயினும் கம்பன் இந்நூலை இயற்றியதால் 'கம்ப ராமாயணம்' என்ற பெயருடன் இதைப் பெருமையோடு அனைவரும் அறிந்து வருகிறார்கள். ''வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயண நூலை ஆதாரமாக வைத்து இந்நூலை வரைகின்றேன்'' என்று கவி ஆதியில் குறிப்பிடுகிறார். ஆனால் வால்மீகி இராமாயணத்தில் உள்ள கதையில் ஆங்காங்கு சில மாறுதல்களைச் செய்தும் புதிய சில விஷயங்களைக் கற்பனை செய்து இடையிடையே சேர்த்தும், இந்நூலை ஆக்கியிருக்கிறார். காண்ட வரிசையில் மாத்திரம் மாறுதல் செய்யவில்லை.

## கதை மாற்றமும், ஆதாரமும்

'வால்மீகியைப் பின்பற்றுகிறேன்' என்று முதலில் பிரதிக்ஞை செய்து, பிறகு இம்மாறுதலைச் செய்ய வேண்டிய அவசியம் என்ன என்று கேட்கலாம். வால்மீகிக்குப் பிறகு வந்த காளிதாஸன் போன்ற எத்தனையோ மகா கவிகள் மூலக் கதையை ஆதாரமாக வைத்து அத்துடன் தமது கற்பனைத்

திறனையும் எடுத்துக் காட்டி காவியங்களை இயற்றி இருக்கி றார்கள். அதே போல் கம்பனும் சிறந்த கவி என்ற முறையில் காலத்திற்கு ஏற்றவாறு ஜனரஞ்சகமாய் கதையில் எங்கெங்கு மாறுதல் செய்ய வேண்டுமோ, அதைச் செய்தால் தான் ஜனங்களால் ரசிக்க முடியும் என்பதை மனத்தில் கொண்டு இதைச் செய்து முடித்தார். இம்மாறுதல்களுக்கு அத்யாத்ம இராமாயணம், ஆனந்த இராமாயணம், மற்று முள்ள புராண இதிகாச நூல்களில் ஆதாரங்கள் இருப்பதாகச் சிலர் கருதுகி றார்கள். இதை முற்றிலும் பொய் என்றும் புறக்கணிக்க முடியவில்லை. ஏனெனில் சாயா சீதையைப் பூமியோடு பெயர்த்து இராவணன் எடுத்துச் சென்றதாகக் கம்பன் கூறிய விஷயம் அத்யாத்ம இராமாயணத்தில் காணப்படுகிறது. இராமன் சிறுபிராயத்தில் குளக்கரையில் விளையாடும்போது தண்ணீர்க் குடம் ஏந்தி வரும் கூனியின் முதுகில் விளையாட் டாக மண்ணுருண்டையினை வில்லில் வைத்துக் கூனியை அடித்தான் என்று கம்பன் கூறிய கதையை, பல ஆழ்வார்கள் முன்னமேயே தமது பிரபந்தங் களில் பேசியிருக்கிறார்கள். பால காண்டத்தில் வாமனாவ தார சரித்திரத்தில் செய்த மாறுதலுக்குப் பாகவதத்தில் ஆதாரம் இருக்கின்றது. தசரத மன்னனின் காதுவரை அடர்ந்து படர்ந்திருந்த நரை முடியைப் பார்த்தால் ''முதுமைப் பருவமானது கைகேயிக்குப் பயந்து அரசனின் செவியில் ரகசியமாக 'இராமனுக்கு முடி சூட்டி விடு' என்று கூறினாற்போல இருந்தது'' என காளிதாஸன் கூறிய கற்பனையைக் கம்பரும் அப்படியே கையாண்டிருக் கிறார். ரகு வம்ச காவியத்தில் இப்படிச் சிற்சிலவற்றில் ஒற்றுமை இருப்பதைக் கொண்டு, எல்லாம் பழைய நூல்களை ஆதாரமாக வைத்து இந்நூல் வரையப்பட்டதென்று சொல்லி விட முடியாது. சுதந்திர மாகத் தோன்றியதைக் கற்பனை செய்யும் விஷயத்தில் ஒவ்வொரு கவிக்கும் சுவாதந்திரியம் உண்டு.

## அவதார இராமனா? மனித இராமனா?

இந்த விசாரத்தில் நாம் அதிகம் இறங்க வேண்டிய அவசியம் இல்லை. ஆராய்ச்சியாளர்களுடைய முடிவுக்கு இதை விட்டு விடுவோம். ஒரு விஷயம் மாத்திரம் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். கம்பனுக்கு இராமன் கடவுளின் அவதாரம் என்று நன்கு தெரியும். கதையைச் சொல்லும்போது ஆங்காங்கு கடவுள் என்ற நினைவு வந்து விடுகிறது கவிக்கு. அச்சமயங்களில் பக்தி உணர்ச்சி வசப்பட்டுப் பிறரை அனுபவிக்க வைப்பது போல் தானும் மெய்ம்மறந்து அனுபவிக்க இறங்கி விடுகிறார் கவி. அச் சமயங்களில் கதை சொல்லிக் கொண்டே இருக்கும்போது 'உலகமெலாம் உண்டவனே! சக்கரம் தரித்த கையில் வில்லைத் தரிப்பவனே! லட்சுமிதேவியின் மணாளனே' என்று பல இடங்களில் வெகுவாக அனேக இடங்களில் அவனது குணங்களைச் சொல்லிச் சொல்லி ஒரு நிமிஷம் தனக்குள் தானே பூரித்துப் போகிறார் கவி. கடவுளுக்குக் கூறிய இந்த அடைமொழிகள் சில சமயம் முனிவர்களின் வாயிலாகவும், அரக்கர்களின் வாயிலாகவும் இப்படி மாறி மாறி வருவதற்குக் காரணம், கவி, தான் எங்கெங்கு மெய்ம் மறந்து அனுபவிக்கத் தொடங்குகிறாரோ அச்சமயம் கதைப் போக்கில் காணப்படும் பாத்திரங்களின் தராதரத்தையும் பக்தி மேலீட்டால் கவனிக்காமல் எல்லாப் பாத்திரங்களின் வாயிலாகவும் பரமனின் குணங்களைச் சொல்லி அனுபவிப்பதே யாகும். வால்மீகி முனிவர் நாரத முனிவரிடமிருந்து சுருக்க மாகக் கேட்ட இராமாயணக் கதையை மனத்தில் கொண்டு பிரும்ம தேவருடைய அனுக்கிரகத்தினால் பகிரங்கமாகவும், இரகசியமாகவும் நடந்தவற்றை எல்லாம் ஒருமுறை மனதுக்குள்ளே சிந்தித்து, நடந்தவற்றை அவ்வாறே எழுதி முடிக்கிறார். உண்மைச் சரித்திரத்தை வெளியிடும் நோக்கம் உடையவராதலால்தான் உணர்ச்சி வசப்பட்டு ஆங்காங்கு

சம்பந்தமில்லாத இடங்களில் கடவுளை அடைமொழிகளால் அனுபவிப்பதில் இறங்காமல் நடந்தவற்றை மாத்திரம் கூறி, காவியத்தை முடிக்கிறார். இராமன் அவதார புருஷன் என்று வால்மீகிக்கும் நன்கு தெரியும். தெரிந்துதான் பாவனமான இராம சரித்திரத்தைக் கொண்ட இந்நூலை இருவரும் இயற்ற முன்வந்தார்கள்.

''கம்பன் இராமனைக் கடவுளாகப் பார்க்கிறான். வால்மீகி முனிவன் மனித பாவனையில் இராமனைப் பேசுகிறான்'' என்றெல்லாம் சிலர் சொல்லுகிறார்கள். கீழ்வரும் உண்மையை நன்கு அறிந்தால் இவ்வாறு பேச வேண்டிய அவசியம் ஏற்படாது. அவர்கள் சொல்வது உண்மை என்று ஏற்றுக் கொண்டே, கம்பன் ஏன் கடவுள் பாவனையில் பேசுகிறான், வால்மீகி ஏன் மனித பாவனையில் பேசுகிறார் என்பதற்கு ஒரு சிறு சமாதானம் கூறுகிறேன்.

கம்பனுடைய காலத்தில் இராமனைக் கடவுளாக எண்ணி கோயில் கட்டி மக்கள் எங்கும் வணங்க ஆரம்பித்து விட்டார்கள். தவிர, எல்லோருடைய உள்ளத்திலும் இராமன் கடவுள் என்ற எண்ணமே ஓங்கி வளர ஆரம்பித்து விட்டது. தவிர, கடவுள் பக்தி குறைந்து நாத்திகம் வளர ஆரம்பித்த காலத்தில் கம்பன் தோன்றியதால் தன் நூலின் வாயிலாகக் கடவுள் பக்தியைப் பரப்ப வேண்டியது தனது கடமையாகி விட்டபடியால், கம்பனுக்கு கடவுள் என்ற உணர்ச்சியோடு காவியம் இயற்ற வேண்டிய அவசியம் ஆகிவிட்டது. இதைக் கருதி கம்பரின் கதைப் போக்கு அவ்வாறாக அமைந்திருக்கிறது. வால்மீகி காலத்தில் எல்லோரும் கடவுள் பக்தி கொண்டிருந்ததால், அதைப் பரப்புவதை விட வாழ்க்கையில் மனிதன் சிறந்தவனாய், லட்சிய புருஷனாய் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்ற விஷயத்தைச் சூழ்நிலைக்கேற்ப ஆதி கவி 'இவ்வுலகில் சிறந்த மனிதன் யார்?' என்று கேள்வி

கேட்டுக் கொண்டு அதற்குப் பதில் கூறும் வகையில் இராமனை இலட்சியப் புருஷனாக்கி, அனைவரும் அவனைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்று சொல்வதையே முக்கியக் கடமையாகக் கொண்டு இத் தொண்டைச் செய்து முடித்தார்.

தவிர, இராமனைக் கடவுள் என்று சொல்லிவிட்டு சத்தியம், தருமம், பிதுருவாக்ய பரிபாலனம், ஏகபத்தினி விரதம் போன்ற சிறந்த நற்குணங்கள் அவனிடம் இருப்ப தாகக் கூறினால், ''கடவுளுக்குத்தான் இக்குணங்கள் இருக்க வேண்டும். நமக்குத் தேவையில்லை'' என்ற எண்ணம் மனிதனுடைய உள்ளத்தில் இடம் பெற்று, அவற்றை அவன் பின்பற்றாமல் போகலாம். இராமனை மனிதனாகக் கூறி மேற்கூறிய சிறந்த குணங்கள் அவனிடம் இருப்பதாகச் சொல்வதால் நாமும் இராமனைப்போல் நற்குணம் பொருந்தி நல்லவர்களாக வாழவேண்டும், இராமனுக்குக் கூறிய குணங்கள் யாவும் மனித சமுதாயத்திற்கு இருக்க வேண்டியவைகளே என்று எண்ணி அக்குணங்களை அனைவரும் பின்பற்ற முன்வருவார்கள்.

தவிர, இராமனைக் கடவுளாகச் சொல்லி இராவண ஸம்ஹாரம் போன்ற சிறந்த காரியங்களை அவன் செய்தான் என்று சொன்னால் கடவுளுக்கு இதைச் செய்வதில் என்ன சிரமம் இருக்கிறது என நினைக்கத் தோன்றுமே தவிர அவற்றின் மூலம் இராமனைச் சிறந்த வீரனாக எண்ணத் தோன்றுவதில்லை. வீர புருஷனான இராமன் ''உட்கார்ந்த இடத்திலேயே அழிக்கும் சக்தி வாய்ந்த கடவுள் நான்'' என்பதையும் அடியோடு மறந்து சாதாரண மனிதன் என்றே தன்னை எண்ணி மாபெரும் வீரச் செயல்களைச் செய்து காட்டினான் என்றால் அவனிடம் நமக்கு அபார கௌரவம் எப்படி ஏற்படாமல் இருக்க முடியும்?

## பாராயண மகிமை

பல ஆண்டுகளாக கம்ப இராமாயணப் பிரசாரம் தொடர்ந்து செய்பவர்கள் தென்னாட்டில் வெகுவாக இருந்து வருகிறார்கள். ஆனால் வால்மீகி இராமாயணத்தைப் போல், பல பலன்களைக் கோரிப் பாராயணம் செய்யும் பழக்கம் கம்பராமாயணத்திற்கு இருப்பதாகத் தெரியவில்லை. தவ வலிமை கொண்ட வால்மீகி முனிவர் கதாநாயகியான சீதை தன் ஆசிரமத்தில் வசிக்கும் சமயம் அவளிடமிருந்து சில விஷயங்களை நேரிடையாகக் கேட்டு தெரிந்து நடந்தவற்றை அவ்வாறே சிறிதும் மாற்றாமல் கதாநாயகனான இராமர் அரசாட்சி செய்யும் காலத்திலேயே உண்மையான இராம கதையைப் போட்டோ பிடிக்கும் கருவி போல் பிடித்துத் தந்திருப்பதாலும், கதாநாயகனின் புதல்வர்களான குசலவர் களைக் கொண்டு இராமனுடைய முன்னிலையில் அதைப் பாடச் செய்து இராமனிடமிருந்து கதை சரியானதென்று அத்தாட்சிப் பத்திரம் பெற்றிருப்பதாலும் வால்மீகி இராமாயணத்திற்குப் பாராயணம் செய்யும் பெருமை ஏற்பட்டுள்ளது. இராமாயணம் நடந்து பல ஆயிரம் ஆண்டுகள் கழித்து பரம்பரையாகச் சொல்லிக் கேட்ட சில கதைகளைச் சேர்த்தும் மூலக்கதையினை மாற்றியும் காவிய நோக்கோடு மாத்திரம் கம்பன் தனது நூலைச் செய்தபடியால் பாராயணம் செய்யும் அளவிற்கு மதிப்பு இந்நூலுக்கு ஏற்படவில்லை என்று சொன்னால் இதை அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள் என்றே நினைக்கிறேன்.

இதே போல்தான் காளிதாசன் சிறந்த கவியாய் இருந்தாலும், அவன் இயற்றிய இராம சரித்திரத்தைக் கூறும் ரகுவம்சத்திற்கும் மேற்கூறிய உயர்வு ஏற்படவில்லை.

## செருகு கவிதைகள்

தவிர, ''இப்போது காணப்படும் பாடல்கள் யாவும் கம்பன் இயற்றியவை அல்ல. பாதி, பாகம்தான் கம்பனுடையது. மற்றவை எல்லாம் செருகு கவிதைகள். வெள்ளியம்பலத் தம்பிரான் போன்ற பிற்காலத்திய கவிகள் தங்கள் கவிகளை ஏராளமாக இத்துடன் சேர்த்து இந்நூலைப் பெரிதாக்கி விட்டார்கள்'' என்று காலஞ் சென்ற டி.கே.சி. போன்ற ஆராய்ச்சியாளர்கள் கூறி, எவை செருகு கவிகள், எவை கம்பனுடைய கவிகள் என்று காட்டியிருக்கிறார்கள். ஆனால் இந்த வித்தியாசத்தைக் கண்டுபிடித்துப் பாகுபாடு காண்பது மிக்க கடினமான காரியம் ஆகும். நடை, கவிதையின் போக்கு, சொற்களின் அமைப்பு இவற்றைக் கொண்டு இது கம்பனுடைய கவிகள்; மற்றவை பிறரால் இயற்றப்பட்டவை என முடிவு செய்வதும் மிக்க கடினம். ஒரே கவி இயற்றிய நூலில் பக்கத்துக்குப் பக்கம் அத்தியாயத்துக்கு அத்தியாயம் பல பேதங்கள் இருப்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அதனால் அந்நூல் பல கவிகளால் இயற்றப்பட்டதென்று சொல்லிவிட முடியுமா? காலம், தேசம், மனோநிலை, சூழ்நிலை, உணர்ச்சி, சுறுசுறுப்பு இவற்றின் காரணமாக ஒரே கவியினுடைய பல செய்யுள்கள் பல விதமாகக் காணப்படுவதைச் சிறந்த காவியங்களிலும் காணலாம். எனவே, இடைச்செருகல் எவை என்று திட்டவட்டமாகத் தீர்மானிக்க முடியா தாகையால், வீணே கஷ்டப்படாமல் பூர்ண நம்பிக்கை யோடு நூலில் காணப்படும் எல்லாம் கம்பனுடைய கவிதைகளே என்று ஒத்துக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.

## எத்தனை இராமன்கள்?

பதினெட்டுப் புராணங்கள், அத்யாத்ம - ஆனந்த இராமாயணங்கள், பாஸன், காளிதாஸன், போன்ற வட மொழிக் கவிகள், கம்பன் ஆகிய எல்லோருமே இராம கதையை வெவ்வேறாகப் பேசியிருக்கிறார்கள். ஆகவே ''ஒவ்வொருவரும் வெவ்வேறு இராமனுடைய கதையைப் பேசினார்களா? அப்படியென்றால் எத்தனை இராமன்கள்?'' என்று கேட்டு விடாதீர்கள். இராமன் ஒருவன்தான். மனோ பாவம், காலப்போக்கு, மக்களின் தேவை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இக்கவிகள் பற்பல கோணங் களில் ஒரே இராமனுடைய கதையை உருவாக்கி, அதைத் தாங்கள் அனுபவித்து நூலின் வாயிலாகத் தங்களுடைய அனுபவத்தை நமக்கு வாரி வழங்கி இருக்கிறார்கள். எனவே, எல்லா நூல்களிலும் குறிக்கப்படும் கதாநாயகனான இராமன் ஒருவனே. அவன்தான் தசரதராமன், சீதாராமன் எல்லாம்.

- தினமணி, தமிழ்ப்புத்தாண்டு, இதழ் 1969

# 7. மொழி பெயர்ப்புக்கு மொழிப் பிரச்சினை

சேரன், சோழன், பாண்டியன் என்ற மூவேந்தர்களின் வரலாறு, அவர்கள் அறநெறி தவறாது அரசாண்ட முறை, தமிழின் வரலாறு, தமிழ்நாட்டின் பண்பாடு, தமிழர்களின் வீரம், பெருமை, வாணிபம், கலையார்வம், கேளிக்கைகள், விழாக்கள், பாட்டு, கூத்து, கற்பின் பெருமை ஆகியவற்றை நவரசங்களுடன் அழகாய் எடுத்துக் கூறும் மகா காவியம் சிலப்பதிகாரம் என்ற தமிழ் நூலாகும். புகார் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்று முப்பிரிவுகள் கொண்ட இந்நூலை இயற்றியவர் இளங்கோ அடிகள். சேர நாட்டு இளவரசராகிய இவர் தவக்கோலம் பூண்ட பிறகு இதை இயற்றினார் என்பது நூலின் வாயிலாகத் தெரிய வருகிறது. இந்நூலில் முதலில் உள்ள பதிகம் கடைசிக் காண்டமாகிய வஞ்சிக் காண்டம், இவ்விரண்டும், அமைப்பில் முறையே வால்மீகி இராமாயணத்திலுள்ள முதல் நான்கு சருக்கங்களையும், உத்தரகாண்டத்தையும் ஒத்திருப்பதை ஆழ்ந்து கவனிக்கும்போது, அக்காலத்தில் வால்மீகி இராமாயணம் இளங்கோ அடிகளின் கருத்தை வெகுவாகக் கவர்ந்திருக்க வேண்டும் என்று சொல்லக்கூடத் துணிவு ஏற்படுகிறது.

நூலாசிரியர் ஜைன மதத்தைச் சார்ந்தவர் என்பது பல அறிஞர்களின் கருத்து. இவருடைய காலம் திட்டவட்டமாகத் தெரியவில்லை. கி.பி. 2-ஆம் நூற்றாண்டு என்று பொதுவாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். தமிழ்நாட்டின் பொருளா தாரம், சரித்திரம், பூகோளம், கலாசாரம், அரசியல், நாகரிகம் ஆகியவற்றை உலக மக்கள் அனைவரும் அறிய வேண்டும்

என்ற பேராவலுடன் இந்நூலை வடமொழியில் ஆக்கி உள்ளேன். தமிழ்த் தாய்க்குச் செய்யும் பெருந்தொண்டாகவே இதை யான் கருதுகின்றேன். மொழி பெயர்ப்பு என்பது நாட்டு மக்களை ஒன்றுபடுத்தவும் ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்கும் ஒரு சாதனமாய் விளங்குகிறது. மொழி பெயர்ப்பு ஒன்றினால்தான், மொழிப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும். தாய் மொழியில் தனக்குள்ள அதிகப் பற்றை, பிறமொழிகளைப் பழிப்பதன் மூலம்தான் காண்பிக்க முடியும் என்று எண்ணுவது முற்றிலும் தவறு. பண்டைய இந்திய கலாசாரத்தைச் சொல்வதை இலட்சியமாகக் கொண்ட எந்த ஓர் இந்திய மொழியைப் பழிப்பதும் தன் தாய்நாடு, தாய்மொழிகளைப் பழிப்பதற்கு ஒப்பாகும்.

## இரு வகை

மொழி பெயர்ப்பு என்பது பொதுவாக இரு வகைப் பட்டது. மூல பாஷையில் உள்ள கருத்தினை மாத்திரம் சுருக்கமாக விளக்குவது ஒன்று. சொல்லுக்குச் சொல் பொருள் கூறுவது மற்றொன்று. இன்று இந்திய மொழிகளி லுள்ள எல்லா நூல்களும் வேத இதிகாச புராணங்களின் முதல் வகை மொழி பெயர்ப்பைச் சேர்ந்தவையே. கருத்தை விளக்குவதிலே வேறுபாட்டைக் காணலாமே ஒழிய அடிப் படைக் கருத்திலே வேறுபாட்டை இவற்றுள் எங்குமே காண முடியாது. இந்திய மொழிகளுள் ஏதாவது ஒன்றில் குறிப்பாக இந்தியில் இரு நூல்களை மொழி பெயர்ப்பது அதிகப் பயனுள்ளதாக இருக்கும் எனப் பலர் கருதலாம். ஆனால், அதன்மூலம் அந்தப் பிராந்தியத்திலுள்ளவர்களால் மாத்திரம் இந்நூல்களின் பொருளைப் புரிந்து கொள்ள முடியும். 14 இந்திய மொழிகளிலும் இந்நூல்களை மொழி பெயர்த்தால் தான் இந்தியர்கள் அனைவரும் இந்நூல்களின் பெருமை யினை அறிந்தவர்களாவார்கள். அதைவிட இந்திய மொழிகள்

அனைத்திற்கும் 30 சதம் முதல் 90 சதவிகிதம் வரை தனது சொற்களைக் கடனாக அளித்து, இந்திய கலாசாரத்தினால் அவற்றை ஒன்றாகக் கட்டிப்பிணைத்து, சரஸ்வதி நதிபோல் அந்தர் வாஹினியாக, அவற்றுள் தெரியாமல் தானும் உட் புகுந்து, அந்தந்த மொழியின் பெயரால் அழைக்கப்பட்டு, அவற்றை எல்லாம் ஆட்சி கொள்ளும் உலக மொழியாகிய சம்ஸ்கிருத மொழியில் இந்நூல்களை ஆக்குவதால் தமிழர் அல்லாத உலக மக்கள் அனைவருமே தமிழ்நாட்டின் பெருமையைப் புரிந்து கொள்வார்கள் என்ற உட்கருத்துடன் வடமொழியில் இதை ஆக்கியுள்ளேன். நாடு முழுதும் தமிழ் மணம் கமழச் செய்ய இது சிறந்த சாதனமாய் விளங்கும் என்பதில் ஐயமில்லை. ''பிற மொழிகளில் இருந்து தாய் மொழிக்குச் சொற்களை எடுத்துக் கொள்வது அவமானம். அது தாய்மொழியை அழித்துவிடும்'' என்றெல்லாம் பலர் தவறாகக் கருதுகின்றார்கள். பண்டமாற்றத்தால் நாடுகள் மேன்மேலும் செழிப்பது போல் சொற்களைப் பரஸ்பரம் பரிமாறிக் கொள்வதால் மொழிகளும் மேலும் வளர்ந்து வருவது திண்ணம். சமஸ்கிருதம், தமிழ் இரண்டையும் ஒன்று சேர்த்து மணிப் பிரவாளம் என்ற ஒரு புதிய வழியை வைணவ ஆசிரியர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே வகுத்து வைத்தனர். இன்றுவரை இவ்விருமொழிகளும் ஒற்றுமையாய் வளர்ந்து வருகின்றன என்பது கண்கூடாகக் கண்ட உண்மை.

மொழி பெயர்ப்பு என்பது மொழிகளுக்குள்ளே போடும் பாலத்திற்கு ஒப்பாகும். பல இந்திய மொழிகளாகிய சிறு நதிகளை மொழிபெயர்ப்பாகிய அணைக்கட்டின் கீழ் ஒன்று திரட்டி, அங்கிருந்து இந்திய கலாசாரம் என்ற நீரைப் பல கால்வாய்கள் வாயிலாக நாடு எங்கும் பாயச்செய்து, நாட்டில் ஒருமைப்பாடாகிய பயிரை வளர்க்கும் பணியில் ஒவ்வோர் இந்தியனும் ஈடுபட வேண்டும். மொழி பெயர்ப்பு என்பது

மிகக் கடினமான காரியம். மனதில் தோன்றும் கருத்துகளை சொந்தமான சொற்களைக் கொண்டு எத்தனை நூல்களை வேண்டுமானாலும் எளிதில் எழுதிவிடலாம். ஒரு பாஷையி லுள்ள கருத்தை மற்றொரு பாஷைக்குக் கொண்டுவரும் பொழுது பல விஷயங்களைக் கவனமாய் கருத்தில் கொள்ள வேண்டும். மூல பாஷையிலுள்ள கருத்தை மனத்தில் நன்கு வாங்கி அந்தந்த பாஷையின் நடைக்கேற்ப மொழி பெயர்க்கும் பொழுது உண்டாகும் சிரமங்களைச் சொல்லி விளக்குவது அவ்வளவு சுலபமல்ல. ஒரு பாஷையிலுள்ள கருத்தை - அந்த பாஷையைப் படித்து அறிவதனால் ஏற்படும் பூர்ண ஆனந்தத்தை - மொழிபெயர்ப்பின் வாயி லாக ஒருக்காலும் பெற முடியாது. இயற்கைப் பார்வையை உடைய ஒருவன் ஒரு பொருளைக் கண்ணால் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கும், பார்வையை இழந்த பிறகு மூக்குக் கண்ணாடி அணிந்து தெரிந்து கொள்வதற்கும் உள்ள வித்தியா சத்தைத்தான் இவ்விஷயத்தில் உதாரணமாகக் காட்ட முடியும். சில இடங்களில் மூல பாஷையில் உள்ள ஒரு சொல்லுக்குச் சரியான சொல்லைத் தேடி அக் கருத்தைப் பிற பாஷையில் அப்படியே பிரதிபலிக்கச் செய்வதில் பூரண வெற்றியை அடைய முடிவதில்லை. இது எனது சொந்த அனுபவம். மற்ற பாஷைகளில் பல சொற்களால் விரிவாகக் கூறியுள்ள கருத்தை ஒரே நீண்ட சொல்லால் இரத்தினச் சுருக்கமாய் சொல்லுவதற்கு சமஸ்கிருதத்தில் ஒரு வழி வகுக்கப்பட்டுள்ளது. அது தான் ''சமாசபதம்'' என்பது. பல பதங்களை சங்கிலிபோல் ஒன்றோடு ஒன்று பிணைத்து நீளமாய் ''சமாசபதம்'' என்ற பெயரால் சொல்லும் பொழுது ஏற்படும் ஆனந்தத்தினை வடமொழி அறிந்தவர்களே அனுப விக்க வல்லவர்கள். மொழி பெயர்ப்பில் ஏற்படும் சிரமங் களைச் சிறிது குறைப்பதற்கு மேற் கூறிய வழி பெரும் உதவியாய் இருந்து வருகிறது.

அரங்கேற்று காதையில் கலாசிரியர்களின் இலக்கணங் களைக் கூறும் பகுதியையும், கானல் வரியிலுள்ள வரிப் பாடல்களையும் மொழி பெயர்ப்பதில் உண்மையிலேயே அதிக கவனம் செலுத்த வேண்டி இருந்தது. பல தமிழ் அறிஞர்களும் இன்றைக்கும் அப்பகுதியின் பொருள்களைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்பகுதிக்குச் சம்பந்தப்பட்ட இலக்கண நூல்கள் நம்மிடைகுன்றிக் காணாமல் போனதுதான் அதற்குக் காரணம். புகார் நகரின் இயற்கை வருணனை, அழகு, இந்திர விழா, வசந்த காலச் சிறப்பு, மதுரை நகரத்திற்குச் செல்லும் வழியின் இயல்பு, ஆகிய பகுதிகளை மொழி பெயர்க்கும் பொழுது உண்மையிலேயே பரவசமடைந்தேன். தமிழ் நூல்களில் உள்ள அழகையும், பெருமையையும் அறிந்து பூரித்துப் போவதோடு இவ்வழகைப் பிறரும் அறியுமாறு செய்யும் இப்பணியில் ஈடுபட்டு இருப்பதை பாக்கிய மாகவே கருதினேன். பல பாஷைகளை யான் கற்றிருப்பதால் அவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்தும் அவற்றில் இல்லாத தனிப்பட்ட சிறப்பை இந்நூலிலிருந்து அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பு ஏற்பட்டது.

தாய் மொழியின் சிறப்பைக் கூற முன் வருபவர்கள் பிற மொழிகளையும் நன்கு படித்து அவற்றோடு இதை ஒத்துப் பார்த்து பிறகு தாய்மொழியின் சிறப்பைக் கூறும் பழக்கத் தினை இனியாவது கைப்பற்றினால் மொழி வெறி, பிற மொழிகளைப் பழித்தல், இந்தியர்களுள் பிளவு என்ற தீய சக்திகளெல்லாம் தலை தூக்காமல் எங்கோ போய் விடும். பல பொருள்களைக் கண்டறிந்த பிறகு அவற்றுள் இது சிறந்தது என்று தேர்ந்தெடுப்பதுதானே உலக இயல்பு. அப்படி இருக்கத் தாய் மொழியினை மாத்திரம் கற்று அதுதான் சிறந்தது என்று சொல்லும் வழக்கத்தை மாற்றிக் கொள்வது தான் சரியான வழி.

சுமார் இருபது ஆண்டுக் காலமாக இம்மொழி பெயர்ப்புத் துறையில் யான் ஈடுபட்டுள்ளேன். திருப்பாவை, திருக்குறள், பாரதியார் பாடல்கள், கம்ப இராமாயணம், சிலப்பதிகாரம், ஔவையார் நீதி நூல்கள், பத்துப்பாட்டு, பரிபாடல், புறநானூறு ஆகிய தமிழ் நூல்களையும் வேமன பத்யம் என்ற தெலுங்கு மொழி நூலையும் வட மொழியில் ஆக்கி உள்ளேன். மேலும் மணிமேகலை, தொல்காப்பியம் போன்ற தமிழ் நூல்களை வடமொழியில் மொழி பெயர்க்கும் பணியில் ஈடுபட்டு வருகிறேன்.

முன்னோர்கள் நூல்களில் இல்லாத ஒரு புதிய விஷயத்தினை எடுத்துக் கூறுவதற்கு நமக்குத் தகுதியில்லாத போது வீணாக அம் முயற்சியில் ஈடுபட்டுத் தோல்வியை அடைவதைக் காட்டிலும், முன்னோர்களின் கருத்துக்களையே பிற பாஷைக்குக் கொணர்ந்து நாடெங்கும் பரவச் செய்வதே நாம் செய்ய வேண்டிய தொண்டு என்பது எனது முடிவான உறுதியான கருத்து.

**தினமணி - தீபாவளி இதழ் - 1968**

# 8. பரிபாடல்

2000 ஆண்டுகளுக்கு முன் மதுரையில் ஒரு சங்கத்தை நிறுவி, பல கவிஞர்களைக் கொண்டு அரசர்கள் தமிழை வளர்த்து வந்தனர். அது மூன்றாவது சங்கமாகும். முதல் இரு சங்கங்களைப் பற்றிய விவரம் அதிகமாகத் தெரியவில்லை. பல தொழில், வகுப்பு, இனத்தைச் சேர்ந்த சுமார் 461 கவிஞர்கள் தமிழ் ஆராய்ச்சி செய்து வந்தனர். இவர்களுள் பெண்பால் புலவரும் பலர் உண்டு. பற்பல சமயங்களில் பற்பல விஷயங்களைப் பற்றி பல்வேறு கவிஞர்களால் இயற்றப்பட்ட கவிதைகள் மொத்தம் 2426 ஆகும். தமிழ் மக்களின் கலாசாரம், தொழில், வாணிபம், ஆட்சிமுறை, போர்த்திறம் போன்ற பல விஷயங்கள் இதில் இடம் பெற்றிருக்கின்றன. சுருங்கச் சொன்னால் இதன் மூலம் தமிழ் நாட்டு விவரங்கள் யாவையும் நன்கு அறியலாம். அக் காலத்தியக் கவிஞர்கள் மக்கள் வாழ்க்கையை அகம், புறம் என இருவகையாகப் பிரித்தனர். அகம் என்பது சிருங் காரத்தையும், புறம் என்பது வீரம் போன்ற இதர ரசங்களை யும் குறிப்பிடும். இதற்கேற்ப இலக்கியங்களையும் அகம், புறம் என இருவகையாகப் பிரித்துக் கவிதைகளை இயற் றினர். அப்படியே சங்கப்புலவர்கள் பாடிய 2426 கவிதை களையும் 8 நூல்களாகத் தொகுத்து எட்டுத்தொகை என்று பிற்காலத்தில் பெயரிட்டனர். இதில் 5 அகத்தைப் பற்றியும், 2 புறத்தைப் பற்றியும், 1 அகம், புறம் இரண்டையும் பற்றியதாகவும் உள்ளன. பரிபாடல் என்ற நூல் மூன்றாம் வகையைச் சார்ந்தது. இது தொகை நூல் வரிசையில் 5-ஆவது ஆகும். இது இசைப்பாடலாலாகிய ஒரு நூல். இசை அமைத்து அக்காலத்தில் இதை ஒரு பக்திப் பாடலாகப் பாடி

வந்தனர். தமிழ் நாட்டில் இசை அமைத்து மெட்டுடன் பாடப்பட்ட முதல் பக்தி நூல் இதுவேயாகும். 22 பாடல்கள் இதில் உள்ளன. 6 மஹாவிஷ்ணுவையும், 8 முருகனையும், 8 வைகை ஆற்றையும் போற்றுகின்றன. 70 பாடல்கள் முதலில் இருந்ததாக ஒரு பழங்காலப் பாடலினால் தெரிய வருகிறது. மற்றவை கால வெள்ளத்தில் சிக்கி, நமக்குக் காண இயல வில்லை. பரி (குதிரை) இதன் நடை கம்பீரமாக குதிரை போல் அமைவதால் இந்நூலுக்கு இப்பெயர் வந்ததென்றும், பலவித பாக்களின் கலப்பை இது சுமந்து வருவதால் இப்பெயர் வந்தது என்றும் பலர் பலவாறு கூறுவர். 25 முதல் 400 வரிகளுக்குள் ஒவ்வொரு பரிபாடல் பாடலும் அமைய வேண்டும் என்பது தமிழ் இலக்கண மரபு. இங்கு 25 முதல் 140 வரிகளுக்குள்ளாகவே எல்லாப் பாடல்களும் அமைந் துள்ளன. பரிபாடல் பற்றிய இலக்கணம் மற்றும் பல விஷயங் களை முதல் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் காணலாம். மஹா விஷ்ணு பற்றிய 6 பாடல்களுள் ஒன்றுக்கு ஆசிரியர் பெயர் காணவில்லை. மற்ற 5இல் 2 பாடல்களை ஒரு கவியும், பாக்கி 3-ஐ மூவர்களும் இயற்றியுள்ளனர். முருகனைப் பற்றிய 8 பாடல்களுள் 6 பாடல்களை முறையே அறுவரும் இரண்டு பாடல்களை ஒருவருமாக ஆக மொத்தம் 8 பேர் இயற்றியுள்ளனர். எட்டு வைகைப் பாடல்களுள் ஒன்றை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. எஞ்சிய வற்றில் 3 பாடல்களை ஒருவரும் நான்கு பாடல்களை நால்வருமாக இயற்றியுள்ளனர். ஒவ்வொரு பாடலுக்கும் மெட்டுடன் அக்காலத்திலேயே இசை வகுத்துள்ளனர். 22 பாடல்களையும் முறையே 13 கவிகள் இயற்றினர். 10 கவிகள் அவற்றுக்கு இசை வகுத்துள்ளனர். 13-ஆவது பாடலுக்கு இசை வகுத்தவர் யார் என்று தெரியவில்லை. மஹா விஷ்ணுவைப் பாடிய கவி முருகனையும், முருகனைப் பாடிய கவி மஹாவிஷ்ணுவையும், வைகையைப் பாடிய கவி முருகனையும் பாடியதோடு சில பாடல்களை இயற்றிய

கவிகளே மற்ற பாடல்களுக்கு இசையையும் வகுத்துள்ளனர். முருகன் பாடலுக்கு இசை வகுத்தவர், விஷ்ணுவின் பாடலுக்கு இசை வகுத்தும் இப்படி சமய வேறுபாடின்றி அக்காலப் புலவர்கள் பக்தி ஒன்றையே கருதி சமய சமரச மார்க்கத்தை நமக்கு வகுத்துத் தந்தனர் என இதனால் புலப் படுகிறது. இதில் கேசவனார் என வைணவப்பேர் பூண்டவர் முருகனைப் பாடி இருக்கிறார். மருத்துவன் நல்லச்சுதனார், முருகன், விஷ்ணு பற்றிய பாடல்களுக்கு இசை வகுத் துள்ளார். கேசவனார், அச்சுதனார் போன்ற வைணவப்பெயா கொண்ட பல கவிஞர்கள் பாடலாசிரியர்களாக இருந்திருக் கிறார்கள். இவ்வாசிரியர்கள் இயற்றிய வேறு சில பாடல் களும் மற்ற தொகை நூல்களில் இடம் பெற்றிருக்கின்றன. சமய ஒற்றுமையோடு கலாசார ஒற்றுமையையும் சங்கப் புலவர்கள் ஏற்படுத்தி இருந்திருக்கிறார்கள். தமிழ் கலாசாரம் தனிப்பட்டதன்று. இந்திய கலாசாரம் எனப்படும் வைதிக கலாசாரத்தினுள் அதுவும் அடங்கியதே.

வேதமும் அவ்வழி செல்லும் இதிகாச, புராண தர்ம சாஸ்திரம் ஆகியவை காட்டிய வழியில் செல்வதுதான் வைதிக வழியாகும். சங்க காலத்தில் தமிழ் மக்களிடையே வைதிக கலாசாரம் ஓங்கி வளர்ந்திருக்கிறது. புராண இதிகாசக் கதைகளை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வேத வாக்கு களைப் பின்பற்றி நடந்தனர். பக்தி உள்ளம் படைத்து, கடவுள்களை வழிபட்டு, வேள்விகளையும் செய்து, வேத நெறிப்படி நடந்து வந்தனர். சங்கப்புலவர்கள் மக்களின் பழக்க வழக்கங்கள், ருசி ஆகியவற்றுக்கு ஏற்ப நீதிகளை மக்களிடையே பரப்பும் நோக்கோடு இலக்கியங்களையும், கவிதைகளையும் படைத்து வந்தனர். மக்களின் பழக்க வழக்கங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக்காட்டுவது அல்லவா கவிகளின் கடமையாகும். தமிழ் அறிவோடு ஸம்ஸ்கிருத அறிவும் பெற்று வேத, புராண, தர்ம சாஸ்திர,

நியாய, வேதாந்த மீமாம்சா சாங்கிய யோகம் போன்ற தரிசனங்களிலேயும் நல்ல அறிவு பெற்று அக்கருத்துக்களைத் தங்கள் நூல்களில் பல இடங்களில் கையாண்டு அவற்றை நாட்டில் பரப்பியும் வந்தனர்.

சம்ஸ்கிருதச் சொற்களையோ, கருத்துக்களையோ கையாள் வதால் தமிழின் வளர்ச்சி ஒருபொழுதும் குன்றிவிடாது: மாறாக அம்மொழி மேன்மேலும் வளரத்தான் செய்யும். இரண்டு மொழிகளுக்கும் அடிப்படைக் கலாசாரம் ஒன்றா யிருக்கும் பொழுது கருத்துப் பரிமாற்றம் ஒரு மொழி மற்றொரு மொழியை வளர்க்கத்தானே பயன்படும். சங்க இலக்கியங்களில் வெகுவாக வேத இதிகாசக் கருத்துக்கள் எங்கும் பரவி இருப்பதைக் காணலாம். அதிலும் பக்தி நூலாகிய பரிபாடலில் வேத, புராண சாத்திரக் கருத்துக்கள் எங்கும் பரவி இருப்பதைக் காணலாம். அதிலும் பக்தி நூலாகிய பரிபாடலில் வேத, புராண சாஸ்திரக் கருத்துக்கள் அதிகம் இடம் பெற்றிருப்பது இயல்பு தானே. எம்மொழி பக்தி நூலும் வேத, சாஸ்திர, புராணக் கருத்தைப் பின் பற்றியே இருக்கும் என்பது உலக நியதி. பக்தி நெறியை பரப்புவதற் கென்றே தோன்றியவை அல்லவா வேத சாஸ்திர புராணங்கள்.

கடவுள் வாழ்த்து, வைகை, மதுரை பற்றிய சிறப்பு, நீர் விளையாட்டு, திருவிழாக்களின் சிறப்பு, தல மகிமை, மூர்த்தி மகிமை, சிருங்கார மகிமை, அலங்காரங்கள் எல்லாம் இதில் இடம் பெற்றிருக்கின்றன. பல நூற்றுக்கணக்கான சம்ஸ்கிருதச் சொற்களை இங்கு கையாண்டிருப்பதைக் காண லாம். பாண்டிய நாட்டிலுள்ள மதுரை, வைகை நதி, மதுரையை அடுத்துள்ள திருமாலிருஞ்சோலை, திருப்பரங்குன்றம், க்ஷேத்திரங்கள், பாண்டிய அரசன் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் மட்டும் இதில் காணப்படுகின்றன. சோழ அரசனையோ, நாட்டையோ, அதிலுள்ள தெய்வத்தையோ இங்கு பேசவே இல்லை. மஹாவிஷ்ணுவைக் கூறும் ஆறு

பாடல்களில் பல வேதக் கருத்துக்கள், புராண இதிகாசக் கதைகள், அவதாரச் சிறப்புகள் பேசப்படுகின்றன. திருமாலிருஞ்சோலை வாழும் கிருஷ்ண, பலராமனை இங்கு இணைத்தே வெகுவாகத் துதிக்கிறார். பலராமனையே கண்ணனாகவும், கண்ணனையே பலராமனாகவும் எண்ணித் துதிக்கும் பல பகுதிகள் இங்கு அடங்கி இருக்கின்றன. திருப்பரங்குன்றத்தில் வாழும் முருகனை மனதில் கொண்டு எட்டுப்பாடல்கள் எழுந்துள்ளன. இவையும் மஹாவிஷ்ணு பாடல்கள் போல் வேத புராணக் கருத்துக்களைக் கொண்டவையாகவே காணப்படுகின்றன. மழை, அதனால் வைகையில் வெள்ளம், அதனழகு, மக்கள், அதில் நீராடிக் களித்தல், வைகையை தேவதையாக வைத்து வரம் வேண்டுதல், ஆடல், பாடல், விழாக்கள் எடுப்பது போன்ற விஷயங்கள் வைகையைப் பற்றிய 8 பாடல்களில் பேசப்பட்டிருக்கிறது.

இந்நூலில் வேத சாஸ்திரக் கருத்துகள், புராணக் கதைகள் எங்கும் இடம் பெறுகின்றன. காலத்திற்கு ஏற்றவாறும் பிற புராண நூல்களை அடிப்படையாகக் கொண்டும் சில முக்கிய புராணக் கதைகளை கவிகள் எவ்வாறு மாற்றி அமைத்திருக்கிறார்கள் என்பதையும் கர்ம சித்தாந்தம், மக்களின் சமூக வழக்கங்கள் எல்லாம் எவ்விதம் கையாளப்பட்டிருக்கின்றன என்பதையும் முறையே காணலாம்.

## (1) வேதநெறி

வேதம் நான்கு வகைப்பட்டது. அது ஒவ்வொன்றும் 6 அங்கங்கள் கொண்டது. அழிவில்லாதது. அதை யாரும் இயற்றவில்லை. எழுதியும் வைக்கவில்லை. அதனால் அபௌருஷேயம் எனப்படும். அனாதிகாலமாய் உபதேச முறையில் காப்பாற்றப்பட்டு வந்திருக்கிறது. ஒருவர் சொல்லி மற்றொருவர் கேட்டு இப்படிக் கேள்வி வழியிலேயே இது

வாழ்ந்து வந்ததால் சுருதி - (கேள்வி) என்ற பெயராலேயே அது பேசப்பட்டு வருகிறது. இதில் எங்கும் பரமன் பேசப் படுகிறான். இதை அந்தணர்கள் தாங்கள் ஓதியும் பிறருக்கு ஓதுவித்தும் அழியாமல் காத்து வந்தனர். இரு பிறப்பாளர் என அவர்களுக்குப் பெயருண்டு. முப்புரிகொண்ட பூணூல் அணிந்திருப்பது அவர்கள் கடமை. இதுதான் வேத சாஸ்திர புராண இதிகாசங்களின் சாரமாகும். இக்கருத்துகள் அனைத்தும் புறநானூறு போன்ற மற்ற சங்க இலக்கியங்களில் இடம் பெற்றிருப்பது போல் இந்நூலிலும் அப்படியே கையாளப் படுகின்றன என்பதை (*13-27; 3-47; 2-57; 9-12; 11-74; 3-66; 3-12, 13; 1-13; 3-14; 1-65; 3-11; 3-42; 2-24; 25;*) பாடல் வரிகளில் தெளிவாகக் காணலாம். வேத நெறிப்படி நடப்ப தோடு அவ்வழியைப் பின்பற்றியே கவிதைகளைச் சங்கப் புலவர்கள் இயற்றினர் என்பதற்கு இங்கு பல சான்றுகள் உண்டு. ''பரமனைத் துதிக்க நேரடியாக 33 தேவரும், முனிவரும் முடியாமல், வேதத்தில் கூறியபடியே அவனைப் பாட முன் வந்தனர். நானும் அவ்வழியே பின்பற்றி அவனைத் துதிக்கிறேன்'' என *3-1-30*, வரிகளிலும் ''வேதங்கள் இவ்வாறு துதிக்கின்றன. அவ்வழி சென்று நானும் உன்னை பக்தியோடு துதிக்கிறேன்'' என *15-54, 56* வரிகளிலும் பேசியிருப்பதைப் பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும். இந்நூலில் உள்ள பரமனின் துதிகள் யாவும் வேத வேதாந்த சாஸ்திர புராண சாரமாய் அமைந்துள்ளன. இம்மைச் சுகங் களை விரும்பாமல் மறுமை இன்பத்திலே இவர்கள் (கவிகளின்) மனம் நாடிச் சென்றது என்பதற்கும் இந்நூலில் பல உதாரணங்கள் உள்ளன. ''பொன்னும், பொருளும், போகமும் நான் வேண்டேன். உன் அன்பும், அருளும், அறனும், எனக்கு வேண்டும்.''

''முத்தியைத் தவிர வேறொன்று வேண்டேன். உன்னுடைய திருவடி சம்பத்தை எனக்கு அளி நீ வாழ் மலை அடியில்

வாழும் வாய்ப்பை எனக்கு அளி'' என்று 5 - 17, 15, 21 பாடல்களில் கவிஞர்கள் மனமுருகி, பக்தி உள்ளத்தோடு பாடியிருப்பது இதற்குச் சான்று. இதனால் இலக்கியச் சுவை யோடு பக்திச் சுவையையும் விசேஷமாக மக்களிடையே பரப்ப வேண்டும் என்ற ஆர்வம் கவிகளின் உள்ளத்திலே பொங்கி எழுந்தது என்பதை நம்மால் உணர முடிகிறது. அக்காலக் கவிஞர்கள் என்றும் இலக்கியத்தை விட ஆன்மிகத் திலும், பக்தியிலும்தான் அதிகம் ஆர்வம் கொண்டிருந்தனர் என்பதை சங்க நூல்கள் மூலம் நன்கு அறியலாம். ''யாகம் செய்வதில் அதிகம் அக்கறை காட்டுகிறாய். மறு பிறவி யிலும் உன்னைத் துதிக்கும் பேறு எனக்குக் கிடைக்க வேண்டும்'', ''உலகம் யாவும் உன்னிடமிருந்தே தோன்றின'' என்பது போன்ற கவிகளின் பக்குவ நிலையை 13-ஆவது பாடலில் காணமுடிகிறது. ''நாங்கள் பந்துமித்திரர்களோடு உன்னை சரண் அடைந்து வேண்டுகிறோம். எங்களுக்கு அருள்வாயாக'' எனக் கவிஞர்கள் தமக்கு வரும் ஆனந்தத்தில் உறவினர்களும் பங்குகொள்ள வேண்டும் என்ற பரந்த மனப் பான்மை கொண்டிருந்தனர் என்பதை 2-9-13-15-17-18-21 பாடல்களின் முடிவுரையில் காண முடிகிறது. தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் சரணாகதிச் சம்பிரதாய சாரம். இது இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. பூமியில் இருந்து முறையே உலகம் அழியும் விதத்தையும், பரமன் முதல் ஆகாயம், வாயு, நெருப்பு, நீர், பூமி என்ற வரிசையில் உலகம் தோன்றும் விதத்தையும் கூறும் 2-ஆவது பாடல் 5-19 வரிகளில் உலகச் சிருஷ்டி பிரளய விவரண பரமான தைத்திரீய சாந்தோக்ய ஐதரேய உபநிஷதங்களின் சாராம்சம் அமைந்துள்ளது. விஷ்ணுவைப் பாடுமிடத்தில் முருகனைக் குறைத்தோ ஏற்றியோ கூறாமல் அவரவர்களைப் போற்றும்பொழுது அவர்கள் பெருமையைச் சொல்வதோடு மாத்திரம் நிறுத்திக் கொண்டு கவிகள் மதசர்ச்சைக்கு இடமின்றிச் செய்து

விட்டனர். இது சைவ - வைணவ சமரச சமய நூலாகும். சமரச பாவத்தை சங்கப்புலவர்கள் இதன் மூலம் தோற்று வித்தனர். குறிப்பிட்ட பெயர் உருவத்தாலன்றி எல்லாப் பெயரும் உருவமும் கொண்டதுதான் பரம்பொருள். அது ஒன்று. இது தான் சங்கப்புலவர் சித்தாந்தம்.

## (2) தர்சனங்கள்

பரம்பொருளை அறிய உதவும் ஆறு தரிசனங்களையும் (சாஸ்திரங்களையும்) கற்று அதன் சாரமறிந்து சங்கப் புலவர்கள் இந்நூலில் அவற்றைக் கையாண்டு இருக் கிறார்கள். இம்மை மறுமைப் பயன்களைப் பெற பற்பல யாகங்கள், அவை இயற்றப்பட வேண்டிய முறை இவற்றை விவரிப்பதுதான் மீமாம்ச சாஸ்திரம். வேத மந்திரர்களும், யாக வேதியில் நாட்டிய யூபஸ்தம்பமும், யாகத்தில் காட்சி தரும் அக்னியும் எல்லாம் பரமனின் உருவமே (2-61-68).

வைகைக் கரையிலே வேதம் ஓதும் அந்தணர்கள் வேத முறைப்படி வேள்விகளை இயற்றினர். அங்கு நீராட வந்த பெண்கள் தங்கள் ஈரத்துணிகளை அதில் உலர்த்திக் கொண் டனர் (11-74). பரமசிவன் வேள்வியில் ஹவிர் பாகத்தை ஏற்றுக் கொண்டான். (5-26-27) - இவை போன்ற கருத்துக்கள் புலவர்களுக்குள்ள மீமாம்ச சாஸ்திர அறிவை நன்கு புலப்படுத்துகின்றன.

25 தத்துவங்கள் சாங்கியமதத்தில் ஒப்புக்கொள்ளப் பட்டன. தனியாக ஈசுவரன் கிடையாது. இது சாங்கிய மதம். சாங்கிய காரிகையில் இது கூறப்பட்டுள்ளது, இங்கு 3-77-80 வரிகளில் 25 தத்துவங்களையும் தனக்கே உரிய தமிழ்ச் சொற்களால் ரத்தினச் சுருக்கமாய் பெயரிட்டு விளக்கிக் கூறி இந்த 25 தத்துவங்களினால் பகவான் மஹாவிஷ்ணு எக் காலத்திலும் அறியப்படுகிறான் எனக் கவி விளக்குகிறார்.

இங்கு கூறிய சாங்கியம் ஈசுவரனை ஒப்புக் கொள்ளும் சாங்கியமாகும். இவ்விதப் பிரிவும் ஒன்று உண்டு. சாங்கிய மதத்தைத் தோற்றுவித்த கபிலரும் சங்ககாலப் புலவர் கபிலரும் ஒன்றெனச் சில அறிஞர்கள் கூறுவது பொருத்த மற்றது. ஆதாரமற்றதும் கூட.

மைத்ரி, கருணா, முதி, தா போன்ற நான்கு பாவனைகளால் மனதைத் தூய்மையாக்கி அதனால் பகவானைக் காண முடியும் என பதஞ்சலி முனிவருடைய யோக சூத்திரம் சமாதி பாதம் 33-ஆவது சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. அதே கருத்தை 4-1-3 வரிகளில் சங்கப்புலவர் இங்கு கையாண்டுள்ளார். இதற்கு சித்த பரிகரம் என்று பெயர். 2 வரிகளில் கரு என்ற சொல்லால் பரமாணுவைக் குறிப்பிட்டு பரமாணுவை அடிப்படையாகக் கொண்ட நியாய வைசேஷிக சாஸ்திரங்களைப் புலவர் இங்கு நமக்கு நினைவூட்டுகிறார். மறுபிறவியில்லை எனக் கூறும் நாத்திகர்களால் பரமனை உணர முடியாது என சார்வாக மதக் கண்டனத்தையும் 5-ஆவது வரிகளில் காணலாம்.

பர, வியூஹ, விபவ, ஹார்த், அர்ச்சா என பரமனின் 5 விரிவான நிலைகளைக் கூறும் பாஞ்சாராத்ர ஆகமக் கருத்தை 13-6-29-2-20-28-3-81-80-14-ஆவது பாடல் போன்ற இடங்களிலும் எடுத்துக்காட்டி உள்ளனர். சாஸ்திர முறைப் படியே சங்ககாலப் புலவர்களும் பரமனை வழிபட்டு அதன் மூலம் சாஸ்திர அறிவையும் நாட்டிற்கு அளித்து வந்தனர்.

## (3) புராண இதிகாசங்கள்

பரமசிவன் திரிபுரத்தை அழித்தவன். நீலகண்டன். ரிஷபவாஹனன். இமயவாசி. கங்கையைத் தரிப்பவன். முக்கண்ணன் என அவனைப் பற்றிய சில கருத்துக்கள் இதிகாச புராணங்களைத் தழுவி இங்கு 1-5-8-9-16-11 காதைகளில் இடம் பெற்றிருக்கின்றன.

முருகன் பிறப்பு, அவன் சூரபத்மனை வென்றது, கிரௌஞ்ச மலையில் பிறந்த வள்ளியை காந்தர்வ முறைப் படியும், தெய்வயானையை வைதிக முறைப்படியும் மணந்தது, வள்ளி தெய்வயானைக்கிடையே சக்களத்திச் சண்டை, இரு தேவிமார்களின் தோழிகளிடையே (கற்பனை) சொற்போர் முதலியவை புராணங்களைத் தழுவி இங்கு 5-8-13-9-14-10,19-21 போன்ற பாடல்களில் பேசப்பட்டுள்ளன. ''வள்ளியும், முருகனும் தமிழ்க்கடவுள், தெய்வயானை முருகன் திருமணம் ஆரியர் தமிழர்களிடையே ஏற்பட்ட கலப்புத் திருமணம்'' எனச் சில ஆராய்ச்சியாளர் கூறுவது அர்த்த மற்றது. எல்லா மொழிகளுக்கும் அப்பாற்பட்டு எல்லா மொழிகளாலும் விளக்கப்படுகிற 'தெய்வ'த்தை ஒரு மொழிக்கு உரிமையாக்குவது பொருத்தமன்று. லவலி பரிணயம் என்ற பெயரில் வள்ளி திருமணம் புராணத்தில் வருவதால் இது தமிழருக்கு மாத்திரம் சொந்தமல்ல.

நரசிம்ம, வாமன, வராஹ, இராமகிருஷ்ண, அவதாரச் சிறப்புகள், அம்சாவதாரம், தேவாசுரயுத்தம், கருடகர்வ பங்கம், கண்ணனின் கேசி, சம்ஹாரய கோபிகா நர்த்தனம் போன்ற மஹாவிஷ்ணு சரித்திரங்களும், பரமனைக் காண 33 தேவர்கள் வந்த வகையும், இங்கு புராணங்களைத் தழுவி 2-13-4-3-15-8 பாடல்களில் பேசியிருப்பதைப் பரக்கக் காணலாம். இங்கு இந்த 5 அவதாரங்களைத் தவிர இராம பரசு ராமாதி மற்ற அவதாரங்களைக் குறிப்பிடாததால் அவை பிற்காலத்தில் சேர்க்கப்பட்டவை, ஆரம்பத்தில் இல்லை எனக் கூறும் நவீன ஆராய்ச்சிக்காரர்களின் போக்கு நகைத்தற்குரியது. தன்னைக் கவருகின்ற அவதாரங்களை மட்டும் சொல்லி ரசிப்பது உலகக் கவிஞர்களின் மரபு. சிலர் சொல்லாத மனதைக் கவர்ந்த அவதாரங்கள் இல்லை என எப்படிச் சொல்ல முடியும். சொல்லாததெல்லாம் இல்லை என்றால் எல்லோரும் எல்லாவற்றையும் எப்படிச் சொல்லி

யிருக்க முடியும். தவிர, ''புராணங்கள் சங்க காலத்திற்குப் பிற்பட்டவை; அங்குள்ள கருத்துகளை சங்ககால நூல்கள் எப்படிக் கையாள முடியும்'' என வீண் வாதம் செய் வோருக்கு சரித்திரம் பதிலளிக்கட்டும்.

முருகனைக் காண விஷ்ணு முதலான தேவர்கள் வந்தார்கள் என்றும், விஷ்ணுவைக் காண சிவன் முதலானோர் வந்தனர் என்றும் அவரவர்கள் இடத்திற்குத் தக்கவாறு இருவருக்கும் சமமான பெருமையளித்துக் கவிஞர்கள் கையாண்டிருக்கும் ஒற்றுமை மனப்பான்மை இங்கு விசேஷமாகக் கவனிக்கத்தக்கது.

## (4) கதை மாற்றங்கள்

புராணக் கதைகளை காலத்திற்கேற்றவாறும் பரம்பரை யாகச் சொல்லக் கேட்டும் கதைகளை சில இடங்களில் மாற்றி அமைத்து ரசிக்கும் பழக்கம் சங்க காலத்திலேயே தொடங்கி விட்டது என்பதை இங்கு கீழே காணலாம். முருகனுடைய (5-ஆவது பாடல் 27-49 வரிகளில்) பிறப்பைக் கூறும் பகுதி வால்மீகி இராமாயணத்தைத் தழுவியது. மகா பாரதத்தில் கூறும் முருக ஜனனக் கதைக்கு மாறுபட்டுள்ளது.

அகலிகையைக் கண்ணுக்கு காணாமல் போகும்படி கௌதமன் சபித்ததாக வால்மீகத்தில் உள்ளது. பத்ம புராணம் ரகுவம்சத்தைத் தழுவி அவளைக் கல்லாகச் சபித்ததாக இங்கு கவி 19-48-47 வரிகளில் குறிப்பிடுகிறார். இந்திரனைப் பீஜமற்றவனாக வேண்டும் என முனிவர்கள் சபித்ததாக வால்மீகம் கூறுகிறது. மற்ற புராணத்தையும் பரம்பரையாகச் சொல்லி வந்த கதையையும் தழுவி அவனுக்கு ஆயிரம் பெண் குறிகள் உடலில் காணவேண்டும் எனச் சபித்து பிறகு அவை ஆயிரம் கண்களாக மாறவேண்டுமென மாற்றம் கூறியதாக உள்ள கதையை 9-8 வரிகளில் ஆயிரம் கண்ணினன் என்ற சொல்லால் கவி குறிப்பிடுகிறார்.

முருகன் கோயிலில் இந்த அகல்யா சாப வரலாற்றைச் சித்திரித்திருப்பதாகக் கூறி சித்திரக் கலை மூலமாகவும் தெய்வ ஒருமைப்பாட்டைக் காட்டியிருப்பது போற்றற் குரியது. முருகனிடம் தோற்றுப்போன இந்திரன் தனது உடலிலிருந்து ஒரு பகுதியை எடுத்து மயிலாக்கி முருகனுக்கு அளித்தான் என்றும் அக்னி பகவான் கோழியையும், யமன் ஆட்டையும் பரிசாக அளித்தான் என்றும் இங்கு (5-57-70) கூறும் பகுதி பாரதத்தில் அனுசாசன பர்வத்தில் கூறியிருக்கும் கதைக்கு மாறாக அமைந்துள்ளது. மயிலை, கருடன் முருகனுக்கு அளித்ததாகவும், சந்திரன் ஆட்டையும், அருணன் கோழியையும் அளித்ததாகவும் அங்குள்ளது. எனவே இங்கு கொடுக்கிறவன், கொடுக்கும் பொருள் இவற்றிடையே செய்திருக்கும் மாற்றம் பரம்பரையாகக் கேட்ட கதையை ஆதாரமாக வைத்துச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது; அல்லது வேறு புராண அடிப்படையிலும் மாற்றம் இருக்கலாம்.

தொழிலுக்குத் தக்கவாறு மக்களை நான்கு வகையாகப் பிரித்து, அவரவர்கள் செய்யும் கடமையைக் கூறி, அக் காலத்திலேயே வர்ண பாகுபாடு இருந்தது என்பதை 1,2,3,4,14,11,8,10-38,39,53,55,28-62,63 ஆகிய பாடல்களில் கவிகள் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். பாடகர்கள் வாழும் தெருக்கள், நடன மாதர்கள் தெரு என 7-31, 32 வரிகளில் கூறியிருப்பதைப் பார்த்தால் தொழிலுக்கேற்றவாறு மக்களின் குடியிருப்புகள் அக்காலத்தில் தனித்தனியாக அமைக்கப் பட்டுப் பாகுபடுத்தப்பட்டிருந்தன எனத் தெரிய வருகிறது.

முற்பிறவியில் செய்த வினைப்பயனாக இப்பிறவியில் நன்மையும், தீமையும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. வினைப்பயனை யாரும் அனுபவித்தே தீர வேண்டும் என்ற கர்மசித்தாந்தத்தில் அக்கால மக்கள் மிக்க நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை மக்களின் அனுபவ வாயிலாக

கவிகள் 11-134, 140, 21-70, 17-53, 13-57, 65; 11-92 ஆகிய பாடல்களில் தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். இந் நூல் தோன்றிச் சுமார் 400 ஆண்டுகள் கழித்துத் தோன்றிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் இப் பரிபாடலை அடிப்படையாகக் கொண்டே திவ்யப்பிரபந்தம், தேவாரம் போன்ற பக்தி நூல்களை இயற்றினர் என்பதை அனைவரும் ஒரு முகமாக ஒப்புக்கொள்கிறார்கள். இதை மறுக்க ஓர் ஆதாரமும் இல்லை. 15-34, 38 வரிகளில் சங்கப்புலவர் திருமாலிருஞ்சோலை பற்றிக் கூறிய கருத்தை நம்மாழ்வார் தமது பாடலில் அப்படியே சொல்லுக்குச் சொல் கையாண்டிருப்பதையும் அதே போல் நாயன்மார்களுடைய பல பாடல்களில் பரிபாடல் கருத்துகள் பல அதே சொற்களோடு இடம் பெற்றிருப்பதையும் அறிஞர்கள் நன்கு அறிவார்கள்.

## 5. சங்க கால மக்கள்

ஆன்மிக அறிவும் பக்தியுள்ளமும் படைத்த ஆதி காலத்து மக்கள் இம்மை இன்பத்திலும் அக்கறை கொண்டவர்களாகவே இருந்தனர். வெகுவாக அக்கால மக்களின் நிலையை வைகையைப் பற்றிய பாடல்களில் விரிவாகக் காணலாம். கேளிக்கைகள், நீர் விளையாடல், மது பானம், பரத்தியர் உறவு, விழாக்களில் பங்கு கொள்ளுதல், ஆடல் பாடல்களைக் கண்டு களிப்பது போன்ற இன்னும் பல விஷயங்கள் மக்களின் மனோ நிலையை எடுத்துக் காட்டுகின்றன. சீக்கிரம் திருமணம் ஆகவேண்டும், கணவன் நல்லபடி ஊர் திரும்ப வேண்டும், அவன் யுத்தத்தில் வெற்றி வாகை சூடவேண்டும் என்றெல்லாம் முருகனிடம் (8-163,168) வரம் வேண்டும் பெண்மணிகள் இருந்த அதே சமயத்தில், எங்களுக்கு அழியாத யௌவனம், இவள் கிழவி என அவச்சொல் கேளாதிருத்தல் வேண்டும். கணவனுடன் பிரியாதிருத்தல் வேண்டும் (11-15, 12 வரிகளில்) என்றெல்லாம்

இம்மைச் சுகம் கோரி வைகை நதி தேவதையிடம் வரம் வேண்டுவோரும் இருந்து வந்திருக்கின்றனர். தாசிகள் உறவு, கள் பருகுதல் போன்ற விஷயங்களை எடுத்து உரைக்கும் இந்நூலில் மற்ற எல்லா சங்க நூல்களிலும் கூறியிருக்கும் புலால் உண்பதை மாத்திரம் எங்கும் குறிப்பிடவில்லை. புனிதமான பக்தி நூலாகிய இதில் அது இடம்பெற வேண்டாம் எனக் கருதியே புலவர்கள் அவ்வாறு செய்திருக்கக் கூடும். 17-18 வரிகளில் முருகனின் எதிரில் கடம்ப மரத்தில் பலி ஆடுகளைப் பூஜாரிகள் கட்டி வைத்திருக்கிறார்கள் எனச் சொல்லி அதோடு நிறுத்திக் கொள்கிறார் கவி. பலி கொடுத்ததாகச் சொல்லி இம்சையைப்பற்றி புனிதமான இந்நூலில் குறிப்பிட அவர்கள் விரும்பவில்லை எனத் தோன்றுகிறது. பொதுவாக அக்காலத்தில் ஆணையிடும்போது தெய்வத்தையும் அதற்குச் சமமான நிலையிலுள்ள ஒருவரையும் சொல்லி ஆணையிடுவது மக்கள் வழக்கம். திருப்பரங்குன்ற மலைச் சாரலையும் அருகில் இருந்த பூந்தோட்டத்தையும் அந்தணர்களையும் பெயர் சொல்லி 'அவர்கள் மீது ஆணையாகச் சொல்கிறேன் நான்' என்று சொல்வது உண்மை என, 8-ஆவது பாடல் 47-89 இடத்தில் கவி கூறியிருப்பதைப் பார்த்தால் அக்காலத்தில் சில வகுப்பினருக்கு கடவுளுக்குச் சமமான உயர்ந்த நிலையை அளித்து வந்தனர் என்பது புலனாகிறது.

**எட்டுத்தொகை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல்**
**முகவுரை - 1977**

# 9. பத்துப்பாட்டு

## திருமுருகாற்றுப்படை

திருமுருகாற்றுப் படை நக்கீரர் இயற்றியது. ஆற்றுப் படை வரிசையில் இதுவே முதல் நூலாகும். இது 317 வரிகளைக் கொண்டது.

பரமனை அடைய எல்லாத் தகுதியும் பெற்றிருந்தும், அவனை அடையாது, தவித்திடும் ஒரு பக்தனைச் சந்தித்து, 'முருகனைத் துதித்து வழிபட்டால், முக்தி பெறலாம்' என இவ்வாறு முருகனை அடைய வழி கூறுகிறான் ஜீவன் முக்த னொருவன். அம்முருகனிடத்தில் போய்ச் சேருமாறு வழி காட்டி அருள் புரிகின்றான் என்பதே இந்நூலின் பொரு ளாகும்.

'ஆற்றுப் படுத்தல்' என்றால், தான் பெற்ற இன்பத்தை மற்றவனும் பெற வேண்டும் என்னும் சீரிய கருத்தோடு மற்றவனுக்கும் வழிகாட்டல் என்பதே.

இந்நூலை இயற்றிய நக்கீரர் சங்க காலத்து வாழ்ந்த புலவர் எனப்படுபவர். கடைச் சங்க காலத்து இருந்த மற்ற புலவர்கட்கெல்லாம் தலைமை தாங்கித் தமிழை ஆய்ந்தவர் என்பது ஒரு சாராரின் கருத்து.

மதுரையில் வாழ்ந்து தமிழ்ப் போதனாசிரியராகப் பணி யாற்றி வந்த மதுரை கணக்காயனார் என்பவரின் புதல்வ ராவார். தருமி என்னும் ஓர் அந்தணனுக்காகப் பரம சிவனார் எழுதிக் கொடுத்த 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலில் இலக்கணக் குற்றம் இருப்பதாக இவர் கூறினார். இதனால்

நக்கீரருக்கும் இறைவனுக்கும் வாதம் உண்டாகியது. இறுதியில், சிவனார் தனது நெற்றிக் கண்ணைத் திறந்து காட்ட அதற்குச் சிறிதும் அஞ்சாமல், 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' எனத் துணிவோடு கூறிய பெருமை இப்புலவர் பெருமானார்க்கே உண்டு. சிவனார் வெஞ்சினத்துக்கு இரையாகி உடல் வெந்து, கீழே விழுந்து வருந்திய அதே நேரம் 'கோபப் பிரசாதம்' என்னும் நூலை இயற்றி அச் சிவபெருமானை இவர் வழிப்பட்டுத் துதித்ததாக வரலாறு காட்டுகிறது.

அடுத்து ஒரு சமயம் குயக்கொண்டான் என்ற குயவன், பட்டி மன்றம் ஏறி, ''வடமொழியே சிறந்தது. தமிழ் தாழ்ந்தது'' என வாதாடினான். அதனைக் கேட்டுச் சினந்த நக்கீரர் ஒரு பாடலைப்பாடி அக் குயவனை இறந்து படச் செய்கிறார். பின்னர் பல கவிஞர்களின் வேண்டுகோளுக் கிணங்க மற்றுமொரு பாடலால் அவனை உயிர் பெற்றெழச் செய்கிறார். இதனைப் பேராசிரியர் தொல்காப்பிய உரையில் விளக்கியுள்ளார்.

சிவனாரை அவமதித்ததன் காரணமாகத் தொழு நோயால் பீடிக்கப்பட வேண்டுமாறு சிவனாரால் சபிக்கப் பெறுகிறார். பிறகு, ''கைலை சென்று வந்தால் இச்சாபம் தீரும்'' என அவரே மாற்றுக் கூற அவ்வாறே ''கைலை'' சென்று ஒரு குளக்கரையின் அருகில் உள்ள ஆலமரத்தடியில் நிட்டையில் அமர்ந்திருக்கிறார். அப்போது அம் மரத்திலிருந்து ஒரு விசித்திரமான இலை கீழே விழுகிறது. அந்த இலையில் மனத்தைச் செலுத்திட நிட்டை கலைந்து விடுகிறது. இது போல் நிட்டை கலைந்த 999 பேரை சிறை வைத்து வந்த ஒரு பூதம் நிட்டை தவறிய நக்கீரரையும் அழைத்துச் சென்று சிறையிலிட, முருகனுடைய பெருமையைக் கூறும் இத்

திருமுருகாற்றுப்படையை இயற்றினார். இதனால் இவருக்கு முருகப் பெருமான் காட்சி தந்து, பூதத்தைக் கொன்று, நக்கீரரோடு மற்றவர்களையும் சிறையிலிருந்து விடுவித்தார் என்று ஒரு கதை, இந்நூல் தோன்றக் காரணமாக வழங்கப் பட்டு வருகின்றது.

## கதைப்போக்கு

முருகனின் திருவருள் பெற்ற ஜீவன் முக்தன் ஒருவன், முருகன் அருள் பெற எல்லாத் தகுதியும் இருந்தும் அதனைப் பெறாது ஏங்கித் தவிக்கும் பக்தன் ஒருவனை நடுவழியில் சந்திக்கிறான். அவனையும் பக்தி நெறியில் செலுத்தி உய்ய வழி வகை செய்ய வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது ஜீவன் முக்தனுக்கு. ''எங்கும் நிறைந்து, தெய்வயானையின் மணாளனாய், கடம்ப மாலை மார்பனாய், பகைவர்களை மாய்க்க வல்லவனாய் விளங்குபவன் முருகப்பெருமான்'' என அவன் புகழினையும் அவனை அடையும் வழியினையும் 1-66 வரிகளில் விளக்குகிறான் ஜீவன் முக்தன்.

''முருகக் கடவுள் காட்சி தரும் திருத்தலங்கள் யாவை'' எனப் பக்தன் வினவ, தமிழ் நாட்டில் ஆறு படை வீடுகள் எனப் புகழ் பெற்று விளங்கும் 'திருப்பரங்குன்றம், திருச் சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோறாடல், பழமுதிர் சோலை' என்னும் ஆறு தெய்விகத் திருத்தலங்களின் சிறப்பையும் ஆங்காங்கு காட்சி தரும் முருகனின் பெருமையையும் அடுத்து வரும் 67-249 வரிகளில் கூறுகிறார்.

மதுரையின் சிறப்பும் அதன் மேற்கே அழகுக் காட்சி தரும் திருப்பரங் குன்றத்தைப் பற்றியும் முதலாவது படை வீட்டிலும்,

யானை மீதேறி ஆறு முகங்களுடனும் பன்னிரு கைக ளுடனும் காட்சி தரும் முருகன் பெருமையை இரண்டாவது படை வீட்டிலும்;

திருமால், சிவன், இந்திரன், மற்றும் தேவர்கள் யாவரும் ஒன்றுகூடி பிரம்ம சாபத்தைத் தீர்க்கக் கோரி முருகனை வேண்டிய செய்தியை மூன்றாம் படை வீட்டிலும்;

அந்தணர்கள் முறைப்படி 'நம ஹகுமாராய' - குமரனுக்கு வணக்கம் - என்று கூறி முருகனை வழிபடும் வழியை நாலாவது படை வீட்டிலும்;

குறமகளிருடன் முருகன் குரவைக் கூத்தாடிய செய்தியை ஐந்தாம் படை வீட்டிலும்;

திருமுருகன் தோன்றும் இடங்கள், அவனைத் துதித்து வழிபடும் முறை, அவன் அருளை பக்தன் பெறல், பழமுதிர் சோ.லை மலைவளம், அருவி வருணனை ஆகியவற்றை ஆறாவது படை வீட்டிலும் இக்கவி முறையே அழகாகக் கூறியிருக்கிறார்.

''இதுவரை கூறிய ஆறு திருத்தலங்களுள் ஏதாவது ஓரிடத்திற்குச் சென்று உன் கருத்தைத் தெரிவித்தால் முருகப் பெருமானின் அடியார்களான பூதகணங்கள் உன் வரவை அம் முருகனிடம் சென்று கூறுவார்கள். அந்தச் சமயம் அப் பெருமான் உன் முன்தோன்றித் தஞ்சமளித்து உன் விருப் பத்தை நிறைவேற்றி வைப்பான்'' என ஜீவன் முக்தன் பக்தனிடம் கூறும் செய்தியை, அடுத்து 250-281 வரிகளில் எடுத்துக் கூறுகின்றார் ஆசிரியர். கடைசியாக 295-317 வரிகளில் முருகப் பெருமானின் இருப்பிடமான பழமுதிர் சோலை மலையில் அழகாகப் பெருகி ஓடும் அருவியின் அழகும் மனங்கவர் காட்சியும் விரிவுபடக் கூறப்பட்டு நூல் முடிவடைகிறது. இதுவே இந்நூலின் கதையம்சம்.

## சிறப்பியல்புகள்

சங்ககால நூல்களுக்கெல்லாம் முற்காலத்தில் தோன்றிய முதல் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் - பொருளதிகாரம் 36-ஆவது சூத்திரத்தில் இவ்வாற்றுப்படைத் துறைக்கு விதி வகுத்திருக்கிறார் தொல்காப்பியனார்.

கூத்தரும், பாடகரும், இசைக்கருவியாளரும், இவருள் பெண் பாலைச் சேர்ந்தவர்களுமாக இந்நால்வரும் தாங்கள் ஒரு வள்ளலிடம் இருந்து பெற்ற பேரின்பத்தைத் தன் வகுப்பைச் சேர்ந்தவர்களும் பெற வேண்டும் என்ற நோக்கோடு அவர்களைத் தனக்குப் பொருள் அளித்த அதே வள்ளலிடம் செல்லுமாறு கூறி வழி காட்டுதல்; அதாவது ஆற்றுப்படுத்தல் எனக் குறிப்பிட்டுக் கூறித் தொடர்ந்தாற் போல் அதை அடுத்து தான் பெற்ற செல்வத்தைப் பிறரும் பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு எதிரே வந்தவர்களிடம் வழி சொல்லி அனுப்புதல் என்ற பொது விதியையும் கூறியுள்ளார்.

இரண்டாவதாகக் கூறிய இப்பொது விதியைத் தழுவித் தான் திருமுருகாற்றுப்படை உட்பட ஆற்றுப்படை நூல்கள் தோன்றியுள்ளன.

ஒரு கலைஞன் மற்றொரு கலைஞனை வள்ளலிடம் ஆற்றுப்படுத்துவதாகக் கூறுவது சூத்திரத்தின் கருத்து. இந்த நூலிலோ அதற்கு நேர்மாறாக ஒரு பக்தன் மற்றொரு பக்தனை முருகப் பெருமானிடம் ஆற்றுப்படுத்துவதாகக் கூறப்பட்டுள்ளது.

ஆற்றுப்படுத்தப் படுபவர்கள் அங்கு மனிதர்கள், இங்கே கடவுளாக இருக்கிறார் என்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும்.

நக்கீரர் வேதம், தரும சாத்திரம், புராணம் ஆகிய எல்லா வடமொழி நூல்களையும் கற்றுணர்ந்தவர். அந்த நூல்களில் உள்ள கருத்துக்களை எல்லாம் தமது தமிழ் நூலில் கையாண்டு இரு மொழிகளுக்கும் ஓர் ஒற்றுமைப் பாலத்தை அமைப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தவர். பல வடமொழி நூல்களின் கருத்துக்களை இவரது நூலில் ஆங்காங்கு காணலாம். எடுத்துக்காட்டாக:

பகவானை அடைய வேண்டிய வழியைக் கூறியிருக்கும் 'கடோபநிஷதம்' 8, 9 மந்திரங்களின் கருத்துக்களைத் தமது நூலில் 62, 64 வரிகளில் அப்படியே மொழிபெயர்ப்பைப் போல விளக்கியிருக்கிறார்.

அந்தணர்களின் ஆறு தொழில்களையும், அவர்கள் 48 ஆண்டு பிரம்மச்சரிய விரதத்தைப் பூண்டு வேதாத்தியயனம் (மறையோதலை) செய்ய வேண்டும் என்ற வழியையும், முப்புரி நூலை அணிய வேண்டும் என்பதையும், நாள் தோறும் அம் மறையோர் செய்ய வேண்டிய முப்பெரு வேள்வி பற்றியும், அந்தணர்களுக்கு 'இரு பிறப்பாளர்' என்னும் பெயர் ஏற்படுவதற்குக் காரணமான விஷயங்கள் பற்றியும் 176-189 வரிகளில் விளக்கியுள்ளார்.

இங்கு கௌதம தர்ம சூத்திரம், வேதம், தரும சாத்திரம் ஆகிய வடமொழி நூற் கருத்துக்களை அப்படியே ஆசிரியர் கையாண்டு விளக்கியுள்ளார்.

சூரபத்மவதம், பிரம்மனின் சாபத்தைத் தீர்ப்பதற்காகத் திருமால், சிவன், இந்திரன் 18 தேவ கணங்கள் ஆக எல்லோருமாகச் சேர்ந்து முருகப் பெருமானிடம் செல்வது, முப்புரம் எரித்தல், இந்திரன் 100 வேள்விகளைச் செய்து முடித்தல், முருகப் பெருமானின் பிறப்பு, பரமசிவனுக்கு முக்கண்ணன் என்ற பெயர் வந்த விதம் ஆகிய விஷயங் களைக் கூறுமிடங்களில் 'மகாபாரதம்', 'இராமாயணம்', பல

புராணம் போன்ற வடமொழி நூல்களிலுள்ள கருத்துக்களை அப்படியே கையாண்டிருப்பதைக் காணலாம்.

மேலும், அறுபடை வீடுகளைப் பற்றிச் சொல்லும் இடங்களில் தல புராணமாகத் தோன்றுகின்றது. அழகிய அருவியின் வருணனையைக் கூறுமிடத்தில் கற்பனைச் செறிவுள்ள காப்பியமாகவும் ஆகிறது. பக்திச் சுவையைப் பற்றி அழகுபடக் காட்டுவதன் வழியாகச் சீரிய பக்தி நூலாகி விடுகிறது. அக்காலத்தில் பெண்டிர் பலியிட்டு விழாக் கொண்டாடி, தெய்வாவேசம் கொண்டு ஆடிக் குறி சொல்லு தலையும், குரவைக் கூத்தாடியதையும், இலைகளாலும் பூங்கொத்துக்களாலும் செய்த ஆடையைக் குறவர்கள் அணிந் தனர் என்பதன் வாயிலாக, அக்காலத் தமிழ் மக்களின் நாகரிகத்தைக் கூறுவதால், தமிழ் நாட்டைப் பற்றிய ஒரு வரலாற்று நூலாகவும் அமைந்திருக்கிறது என்பதை இந் நூலை ஊன்றிப் படிப்பவர்கள் நன்கு அறிவார்கள்.

மேலும், முருகனின் பெருமையையும், குணங்களையும் கூறித் துதி செய்யும் பகுதியைப் பார்க்கையில், வடமொழித் துதி நூல்களை அப்படியே ஒத்திருப்பதையும் நன்கு உணரலாம்.

## மற்ற நூல்கள்

பத்துப்பாட்டில் ஒன்றாகிய 'நெடுநெல்வாடை', இந்த ஆசிரியரால் எழுதப்பட்டதுதான். 'நற்றிணை'யில் 7 பாடல் களும், 'குறுந்தொகை'யில் 8 பாடல்களும், 'அகநானூற்'றில் 17 பாடல்களும், 'புறநானூற்றி'ல் 3 பாடல்களும் ஆக 35 பாடல்கள் நக்கீரரால் இயற்றப்பட்டவை என்பது அந் நூல்களின் வழியாகத் தெரிய வருகிறது. இறையனார் இயற்றிய அகப்பொருள் நூலுக்கு முதன் முதலில் உரை எழுதிய பெருமை நக்கீரரையே சாரும்.

நக்கீரர் வேதம், தரும சாத்திரம், புராணம் ஆகிய எல்லா வடமொழி நூல்களையும் கற்றுணர்ந்தவர். அந்த நூல்களில் உள்ள கருத்துக்களை எல்லாம் தமது தமிழ் நூலில் கையாண்டு இரு மொழிகளுக்கும் ஓர் ஒற்றுமைப் பாலத்தை அமைப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தவர். பல வடமொழி நூல்களின் கருத்துக்களை இவரது நூலில் ஆங்காங்கு காணலாம். எடுத்துக்காட்டாக:

பகவானை அடைய வேண்டிய வழியைக் கூறியிருக்கும் 'கடோபநிஷதம்' 8, 9 மந்திரங்களின் கருத்துக்களைத் தமது நூலில் 62, 64 வரிகளில் அப்படியே மொழிபெயர்ப்பைப் போல விளக்கியிருக்கிறார்.

அந்தணர்களின் ஆறு தொழில்களையும், அவர்கள் 48 ஆண்டு பிரம்மச்சரிய விரதத்தைப் பூண்டு வேதாத்தியயனம் (மறையோதலை) செய்ய வேண்டும் என்ற வழியையும், முப்புரி நூலை அணிய வேண்டும் என்பதையும், நாள் தோறும் அம் மறையோர் செய்ய வேண்டிய முப்பெரு வேள்வி பற்றியும், அந்தணர்களுக்கு 'இரு பிறப்பாளர்' என்னும் பெயர் ஏற்படுவதற்குக் காரணமான விஷயங்கள் பற்றியும் 176-189 வரிகளில் விளக்கியுள்ளார்.

இங்கு கௌதம தர்ம சூத்திரம், வேதம், தரும சாத்திரம் ஆகிய வடமொழி நூற் கருத்துக்களை அப்படியே ஆசிரியர் கையாண்டு விளக்கியுள்ளார்.

சூரபத்மவதம், பிரம்மனின் சாபத்தைத் தீர்ப்பதற்காகத் திருமால், சிவன், இந்திரன் 18 தேவ கணங்கள் ஆக எல்லோருமாகச் சேர்ந்து முருகப் பெருமானிடம் செல்வது, முப்புரம் எரித்தல், இந்திரன் 100 வேள்விகளைச் செய்து முடித்தல், முருகப் பெருமானின் பிறப்பு, பரமசிவனுக்கு முக்கண்ணன் என்ற பெயர் வந்த விதம் ஆகிய விஷயங் களைக் கூறுமிடங்களில் 'மகாபாரதம்', 'இராமாயணம்', பல

புராணம் போன்ற வடமொழி நூல்களிலுள்ள கருத்துக்களை அப்படியே கையாண்டிருப்பதைக் காணலாம்.

மேலும், அறுபடை வீடுகளைப் பற்றிச் சொல்லும் இடங்களில் தல புராணமாகத் தோன்றுகின்றது. அழகிய அருவியின் வருணனையைக் கூறுமிடத்தில் கற்பனைச் செறிவுள்ள காப்பியமாகவும் ஆகிறது. பக்திச் சுவையைப் பற்றி அழகுபடக் காட்டுவதன் வழியாகச் சீரிய பக்தி நூலாகி விடுகிறது. அக்காலத்தில் பெண்டிர் பலியிட்டு விழாக் கொண்டாடி, தெய்வாவேசம் கொண்டு ஆடிக் குறி சொல்லு தலையும், குரவைக் கூத்தாடியதையும், இலைகளாலும் பூங்கொத்துக்களாலும் செய்த ஆடையைக் குறவர்கள் அணிந் தனர் என்பதன் வாயிலாக, அக்காலத் தமிழ் மக்களின் நாகரிகத்தைக் கூறுவதால், தமிழ் நாட்டைப் பற்றிய ஒரு வரலாற்று நூலாகவும் அமைந்திருக்கிறது என்பதை இந் நூலை ஊன்றிப் படிப்பவர்கள் நன்கு அறிவார்கள்.

மேலும், முருகனின் பெருமையையும், குணங்களையும் கூறித் துதி செய்யும் பகுதியைப் பார்க்கையில், வடமொழித் துதி நூல்களை அப்படியே ஒத்திருப்பதையும் நன்கு உணரலாம்.

## மற்ற நூல்கள்

பத்துப்பாட்டில் ஒன்றாகிய 'நெடுநெல்வாடை', இந்த ஆசிரியரால் எழுதப்பட்டதுதான். 'நற்றிணை'யில் 7 பாடல் களும், 'குறுந்தொகை'யில் 8 பாடல்களும், 'அகநானூற்'றில் 17 பாடல்களும், 'புறநானூற்றி'ல் 3 பாடல்களும் ஆக 35 பாடல்கள் நக்கீரரால் இயற்றப்பட்டவை என்பது அந் நூல்களின் வழியாகத் தெரிய வருகிறது. இறையனார் இயற்றிய அகப்பொருள் நூலுக்கு முதன் முதலில் உரை எழுதிய பெருமை நக்கீரரையே சாரும்.

இந்த நூலைச் சைவாகமமாகிய 11-ஆம் திருமுறையில் பிற்காலத்தவர்கள் சேர்த்துள்ளார்கள். கயிலை பாதி - காளத்தி பாதி, அந்தாதி போன்ற 11-ஆம் திருமுறையில் காணும் 9 பிரபந்தங்களையும் நக்கீரர் இயற்றியதாக வரலாறு கூறுகிறது.

நடைப்போக்கு, வடசொல் கலப்பு ஆகியவற்றைக் கொண்டு 11-ஆம் திருமுறையைச் சேர்ந்த 9 பிரபந்தங்களையும் பிற்காலத்தில் வாழ்ந்த 'நக்கீரர் தேவநயினார்' என்பவர் எழுதியிருக்கக் கூடும். கடைச்சங்கப் புலவரான நக்கீரர் எழுதியிருக்க முடியாது என்பது சில ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

எப்படியிருப்பினும் சில நன்மைகளை எண்ணி இந் நூலைப் பக்தியோடும், கடமையோடும் பாராயணம் செய்து வரும் பழக்கத்தை நாம் இன்றும் காண்கிறோம்.

அருணகிரிநாதர் இந்நூலை வேதம் என்றே போற்றிக் கூறுகிறார். வெகுவாக அகம் - புறங்களைப் பற்றியும், உலக இயல்புகளைப் பற்றியும், அரசர்களைப் பற்றியும் விளக்கி வந்த சங்க கால நூல்களுள் இவ்வொன்றே பக்தியைப் பரப்பும் நோக்கத்தோடு இயற்றப்பட்டு, 'சங்கநூல்' என்ற பெயருடனும் வழங்கி வருவது அரும்பெரும் விஷயமாகும். இந்த நூலில் ஏராளமாக வடசொற்கள் கையாளப்பட்டிருக் கின்றன. இந்நூலுக்குப் 'புலவராற்றுப்படை' என்ற பெயரும் உண்டு. நக்கீரருடைய கோயில்களை மதுரையிலும், திருப்பரங்குன்றத்திலும் காணலாம்.

# முல்லைப்பாட்டு

## தமிழ்ச் சங்கங்கள்

அந்நாளிலே வாழ்ந்திருந்த தமிழ் வேந்தர்கள், பல கவிஞர்களின் வாயிலாக பழம்பெரும் மொழியான தமிழை வளர்க்க முச் சங்கங்களை நிறுவிப் பெரிதும் பாடுபட்டு வந்துள்ளனர்.

அவற்றுள் முதற் சங்கம் தென் மதுரையில் ஏறக் குறைய நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நிறுவப்பட்ட தென்றும், இரண்டாவது சங்கம் கபாடபுரத்தில் மூவாயிரம் ஆண்டு கட்கு முன்னர் நிறுவப்பட்ட தென்றும், மூன்றாம் சங்கம் 2200 ஆண்டுகட்கு முன்பு மதுரையில் பாண்டிய மன்னனால் கி.மு. 3-ஆவது நூற்றாண்டில் நிறுவப்பட்டதென்றும், இறையனார் அகப்பொருளுக்கு நக்கீரர் எழுதிய உரையின் வாயிலாகத் தெரிய வருகிறது.

முதலிரு சங்கங்களின் தலைநகர்களைக் கடல் கொண்டு விட்டபடியால், அக்காலத்திய நூல்களையும் வரலாறுகளை யும் பற்றி எவ்விதத் தகவலும் நமக்குக் கிடைக்கவில்லை. கி.மு. மூன்று முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரையுள்ள காலத்தில் இருந்து வந்த கடைச் சங்க கால வரலாறும் நூல்களுந்தான் இப்பொழுது கிடைக்கின்றன என்பது தமிழ் ஆய்வாளர்களின் கருத்து.

அகம் - புறம் - பரிபாடல், கலித்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான நூல்களிலும் நச்சினார்க்கினியர், பேராசிரியர் போன்ற உரையாசியர்களின் நூல்களிலும் சங்கம் ஒன்று இருந்தது என்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் கிடைக் கின்றபடியால், 'ஒரு சங்கமும் தமிழ்நாட்டில் நிறுவப்படவில்லை' என்ற சிலருடைய வாதத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை.

## சங்கப் புலவர்கள்

கி.மு.மூன்று முதல் கி.பி. முதலாவது நூற்றாண்டு வரையாக உள்ள காலம் கடைச்சங்க காலம் எனப்படும். அக்காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராக விளங்கிய மதுரை மாநகர் இச்சங்கத்தின் இருப்பிடமாகும்.

இங்கு சுமார் 461 புலவர்கள் இந்தக் காலத்தில் தமிழ் ஆராய்ச்சி மூலம் இதை வளர்க்கப் பாடுபட்டனர்; இங்கிருந்த புலவர்களுள் நக்கீரர், கபிலர், பரணர், ஔவையார் போன்றவர்கள் மிக முக்கியமானவர்கள். குறிப்பாக அரச வகுப்பைச் சேர்ந்தவர்களும், அந்தணர், வணிகர், வேளாளர் போன்ற பல குலத்தினரும் கணிதம், இசை, மருத்துவம், சோதிடம் ஆகிய பல்வேறு துறையைச் சேர்ந்தவரும், சைவம், ஜைனம், பௌத்தம் போன்ற பல்வேறு சமயத்தவரும், பெண் இனத்தாரும் பாகுபாடு ஏதுமின்றி அந்தக் காலத்தில் கவிதைகளை இயற்றிச் சங்கப்புலவர்கள் என அனைவராலும் அழைக்கப்பட்டு வந்தனர். இவர்கள் ஓரிடத்தையோ, ஒரு காலத்தையோ சேர்ந்தவர்கள் அல்லர்.

பல சந்தர்ப்பங்களில் பல அரசர்களையும், பற்பல விஷயங்களையும் வைத்து சங்கப்புலவர்களால் இயற்றப் பட்ட பாடல்கள் 2426 ஆகும். மூன்று வரிகள் முதற்கொண்டு நாற்பது வரிகள் வரையாக உள்ள பாக்களை முறையே இவர்கள் இயற்றியுள்ளார்கள். பண்டைக் காலத்தில் அகம் - புறம் என மக்களின் வாழ்க்கையை இரு வகையாக வகுத்தனர்.

அகம் என்பது சிருங்காரச் சுவையை முக்கியமாகக் கொண்டுள்ள இல்லறத்தையும்; புறம் என்பது வீரம் முதலிய சுவையை முக்கியமாகக் கொண்ட போர் முதலியவற்றையும் குறிக்கின்றன. அறம் - பொருள் - இன்பம் - வீடு ஆகிய

நான்கு பேறுகளுள், இன்பச்சுவையை அகத்திலும், அறம் - பொருள் - வீட்டைப் புறத்திலும் சேர்த்து நான்கு பேறுகளையும் அகம் - புறம் என இரு கூறுகளாகப் பாகுபடுத்தி அவற்றுள் மனித வாழ்வை அடக்கி இருப்பது போல, எல்லா இலக்கியங்களையும் இவ்விரண்டினுள் அடக்கி விடுகிறார்கள். இப்படியாகச் சங்கப்புலவர் அனைவரும் இயற்றிய பாடல்கள் யாவும் இவ்விரு பிரிவுகளுள் அடங்கி விடுகின்றன.

மேலும் புராணச் செய்தி, பழங்கால வரலாறு, போர், அரசர் வரலாறு, பக்தி, நீதி, தமிழ்நாட்டு நகரங்கள் முதலியவை பற்றிய விவரங்களை இப்பாடல்களில் காணலாம். மேலும் ஐந்து திணைகளைப் பற்றி விளக்கியிருப்பதையும் காணலாம்.

அந்நாளில் வாழ்ந்த மக்களின் ஒழுக்கம், குணம் ஆகியவை அவர்கள் வாழ்ந்த நிலத்திற்குத் தகுந்தவாறு வளர்ச்சியடையும் என்ற தத்துவத்தின் அடிப்படையில் தான், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலப் பாகுபாடு செய்தனர். அவற்றுக்கேற்றபடி ஒழுக வேண்டிய மக்களின் ஒழுக்கங்களையும் ஐந்து திணைகளாகப் பிரித்தனர். இவ்வைந்தும் அகப் பொருளின் உட்பிரிவுகளாகும்.

இதே போல புறப்பொருள்களும் ஏழு பிரிவுகளைக் கொண்டதாகும். பாட்டின் அளவையும், ஐவகைத் திணைகளின் பிரிவையும், பல பொருள்களையும், அரசர்களையும் விளக்கும் 2426 பாடல்களையும், திணை, அடி பொருள்களுக்கேற்ப வரிசைப்படுத்தித் தொகுத்து எட்டுப் பகுதிகளாகப் பிரித்து, ''எட்டுத்தொகை'' என்ற பெயரால் பிற்காலத்தில் வந்தவர்கள் முதன் முதலில் வெளியிட்டனர். எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும் சங்க காலத்தில் தமிழில் தோன்றிய முதல் இலக்கியங்களாகும்.

## எட்டுத் தொகை

ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித் தொகை என்னும் ஐந்து நூல்களும் அகப்பொருள் வகையைச் சேர்ந்தவை. இவை முறையே 500, 400, 400, 400, 149 பாக்களுடன் ஐந்து திணைகளையும் பற்றி விளக்குவன வாகும்.

புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இவ்விரு நூல்களும் 400, 100 பாக்களைக் கொண்டவை. இவை புறத்திணைப் பொருளை விளக்குவதால் புறப்பொருள் வரிசையைச் சேர்ந்தவையாகும்.

பரிபாடல் என்ற நூலோ 22 பாக்களைக் கொண்டதாகும். இது இருவகைத் திணைகளைப் பற்றியும், விளக்குவதால், அகம் புறம் என்ற வகுப்பைச் சேரும்.

## பத்துப்பாட்டு

இதன் வரிசையில் 10 நூல்கள் அடங்கும். திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப் படை, பெரும் பாணாற்றுப் படை, கூத்தராற்றுப்படை (மலைபடு கடாம்) என்னும் 5 நூல்களும் ஆற்றுப்படை வகுப்பைச் சேர்ந்தவையாகும்.

குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, பட்டினப் பாலை, என்பன குறிஞ்சி, முல்லை, பாலை முதலிய திணை களை விளக்கும் அகப்பொருள் வரிசையைச் சார்ந்தவை யாம்.

'நெடுநல்வாடை, மதுரைக் காஞ்சி', ஆகியவை புறப் பொருள் வரிசையைச் சாரும். இத்தகைய பத்து நூல்களையும் எட்டுக் கவிஞர் பெருமக்கள் ஆக்கியுள்ளனர்.

நக்கீரர் இருநூல்களையும், உருத்திரங்கண்ணனார் இரு நூல்களையும், மற்ற 6 நூல்களை முறையே 6 கவிஞர்களும் ஆக்கியுள்ளனர்.

இந்நூல்களில் பயின்று வரும் பாக்கள், ஆசிரியப்பா வகையினவாகும். வரிக்கணக்கில் ஒவ்வொரு நூலும், பாகு படுத்தப்பட்டுத் தொகுக்கப்பட்டுள்ளன. இந்தப் பத்து நூல் களும் 3552 வரிகளில் அடங்கியிருக்கின்றன. இந்நூல்களுக்கு விரிவாக நச்சினார்க்கினியர் உரை எழுதியிருக்கின்றார்.

## முல்லைப் பாட்டு நப்பூதனார்

இந்த முல்லைப்பாட்டு என்னும் நூல் ஆசிரியப்பாவில் அமைந்துள்ளது. 103 வரிகளைக் கொண்டது. போருக்குச் சென்றுள்ள தலைவனைப் பிரிந்து வருந்துகின்ற ஒரு தலைவியைப் பற்றிய கதையை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டதொரு கற்பனைக் காப்பியமாகும். இதனை ஆக்கியவர் நப்பூதனாரென்னும் புலவராவார்.

பத்துப்பாட்டு வரிசையில் இந்நூல் ஐந்தாவது இடத்தை வகிக்கின்றது.

காவிரிப்பூம்பட்டினத்தில் பொன் வியாபாரம் செய்து வந்த 'காவிரிப் பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார்' மகனாவார் இவர்.

### கதைச் சுருக்கம்

போருக்குச் சென்ற தலைவன் ''கார் காலத்தில் போரை முடித்துத் திரும்பி வருகிறேன்'' என்று தனது தலைவியி னிடத்துக் கூறிச் செல்கிறான். கார் காலம் வந்ததும் தான் சொன்னபடி தன் தலைவன் வராததால் ஏங்கி வருந்திக் கண்ணீர் உகுக்கிறாள் தலைவி.

இந்நிலையைக் கண்டு மனந்தாளாது அவ்வூரிலுள்ள முது பெரும் பெண்டிர் நகருக்கு வெளியே சென்று அக் காலத்திய சம்பிரதாயப்படி சகுனம் பார்த்து வந்து சீக்கிரமே தலைவன் திரும்பி வருவான் என்று கூறி ஆறுதல் சொல்கின்றனர்.

போருக்குச் சென்ற தலைவன் காட்டில் படைவீடு அமைத்திடச் செய்து, அங்கு தனக்கோர் அரண்மனையையும் சமைத்து, பல வீரர்களாலும் வாளேந்திய பெண்மணிகளாலும், வயது முதிர்ந்த காவற்காரர்களாலும் சூழப் பெற்றுத் தன் அரண்மனையில் மிகுந்த கவலையோடு இராக் காலத்தைக் கழிக்கிறான். போரில் உயிர் இழந்த வீர மறவர்களின் நினைவுகள் அலைமோதுகின்றன.

போரை முடித்துக்கொண்டு வெற்றியுடன் தலைவியைக் காணத் தலைவன் விரைந்து வருகிறான். அவன் ஏறி வரும் தேரின் ஒலி தலைவியின் செவிகளில் விழுகிறது. களிப்பை யூட்டுகிறது. இதுவே கதை.

## நூலின் பெயர்

அக ஒழுக்கத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய முல்லை ஒழுக்கத்தையும், முல்லைத் திணையையும் அடிப்படையாக வைத்து இந்நூல் உருவாக்கப்பட்ட படியால் 'முல்லை' என்ற பெயராலேயே இந்நூல் வழங்கப்பட்டு வருகிறது.

'முல்லை' என்பதற்குப் 'பொறுத்திருத்தல்' என்று ஒரு பொருளும் உண்டு. பிரிந்த தலைவன் திரும்பி வரும்வரை பொறுமையுடன் தலைவி காத்திருந்து கற்பைக் காத்துக் கொள்ளுதலால் இதற்கு முல்லை எனப் பெயர் வந்தது எனக் கூறுவாருமுளர்.

போருக்காகத் தலைவன் சென்ற பொழுது, தலைவி இருக்கும் நிலையை விளக்குவதே முல்லை ஒழுக்கத்தின் இலக்கணமாகும்.

முல்லைத் திணைக்குரிய கார்காலம், அந்நிலத்திற்குரிய தெய்வமாகிய திருமால், அந்நிலத்துக் கருப் பொருளாகிய கன்றுகள் முதலியவற்றையும் பற்றி இந்நூலில் கூறி, முல்லைக்குரிய திணையின் இலக்கணத்தை முழுமையாகக் கையாண்டிருக்கிறார் இந்நூலாசிரியர்.

## பழங்காலத்துப் பழக்கம்

இந்த நூலில் முதுபெரும் பெண்டிர் சகுனம் பார்க்கும் வழக்கம், படைவீட்டு அமைப்பு, அதனுள் பள்ளியறை அமைப்பு, யானைகளைப் பழக்கும் முறை, வீர மங்கையர், நாழிகைக் கணக்கர், மெய்க் காப்பாளர் ஆகியோரின் தொழில் பற்றியும், தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரம், கார்காலத்தில் காட்டு வழியின் காட்சி முதலியவை பற்றியும் அழகுபடச் சொல்லப்பட்டுள்ளன.

அக்காலத்தில் அரசர்கள் தாம் பள்ளி அறையில் ஊமைகளைக் காவலாக வைத்தனர். பெண்கள் இரவு நேரத்தில் வாளேந்தி அரசனைக் காத்து வந்தனர். யானைகளை வட மொழிச் சொற்களால் பழக்கி வந்தனர். நாழிகை வட்டிலைக் கையாண்டு நேரத்தைக் கணக்கிட்டு வந்தனர். இவ்வாறு முன்பு பழக்கத்திலிருந்த பல செய்திகளையும் இந்நூலின் வாயிலாக நாம் அறியலாம்.

மேலும், இந்த நூல் கற்பனைக் களஞ்சியமாகவும், வருணனைக்கு நிலைக்களனாகவும், பழங்கால நாகரிகத்தை எடுத்துக் கூறும் வரலாறாகவும் அமைந்துள்ளது.

நிற்க: வடசொற்களைச் சொல்லி யானைப் பாகர்கள் யானையை உணவருந்தச் செய்கின்றனர் என்பதனை 36-37ஆம் வரிகளிலும்,

சங்கு - சக்கரக் கோலத்துடன் காட்சி தரும் திருமாலை 1-3 ஆம் வரிகளிலும்,

காவியுடுத்து, முக் கோலேந்திய அந்தணத் துறவிகளை உவமை வழியாக 37-38ஆம் வரிகளாலும் அறிமுகப் படுத்துகிறார் ஆசிரியர்.

இதிலிருந்து அந்நாளில் வடமொழிப் பிரசாரம், வருணா சிரம தர்மத்தில் நம்பிக்கை, புராணக் கதைகளில் நம்பிக்கை யாவும் வெகுவாகப் பரவியிருந்தன என்பதை அறியலாம்.

இந்த நூலில் ஒரு தலைவன், ஒரு தலைவி எனப் பொதுப்படக் கூறியிருக்கிறார்; அவர்களின் பெயர் யாதெனக் குறிப்பிட்டுக் கூறவில்லை.

# 10. ஔவையார் கண்ட ஒருமைப்பாடு

சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் அரசியல் ஆலோசகராகவும், அவைப் புலவராகவும், தூதுவராகவும், சிறந்த இராஜ தந்திரியாகவும், ஆன்ம ஞானம், அரசியல் குணம், தெய்வ ஞானம் படைத்தவராகவும், ஆண்டி முதல் அரசன் வரை அனைவரிடமும் மிக்க செல்வாக்குப் படைத்த வராகவும் ஒரு கவியரசி இருந்தாள் என்றால் அது தமிழ் நாட்டிற்கு மட்டுமின்றி பெண் குலத்துக்கே பெரும் புகழைக் கொடுக்கும் விஷயம் என்பதில் ஐயமில்லை.

உலக சரித்திரத்திலேயே எல்லாத் திறமைகளும் ஒருங்கே அமையப் பெற்ற ஒரு பெண்மணி கவியரசியாக இருந் திருப்பது இதுதான் முதலாவதாகும். இக் கவியரசி யார் என்ற கேள்விக்கு ''ஔவைப்பாட்டி'' என்று அனைவரும் ஒருமுக மாகப் பதில் கூறுவார்கள். கடைச்சங்க காலம் என்று சொல்லப்படும் கி.மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த 90 பெண்பால் புலவர்களுள் முதன்மையாய் விளங்கியவர் இந்த ஔவைப்பாட்டியார். பற்பல விஷயங்களைக் கூறும் 59 பாடல்கள் இவரால் இயற்றப்பட்டன. சங்ககால இலக்கியங் களுள் முறையே நற்றிணையில் 7, குறுந்தொகையில் 15, அகநானூறில் 4, புறநானூறில் 33 செய்யுள்களும் இடம் பெற்று இருக்கின்றன.

சிருங்காரம், வீரம், அன்பு, அறிவு ஆகிய பல விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இப்பாடல் தம்மில் ஒருவகைத் தொடர்புமின்றி ஒவ்வொன்றும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் பாடப்பட்டவையாகும். 1000 ஆண்டு காலமாக இன்று வரை 'ஔவை' என்ற சொல் நம் நாட்டில் பிரசித்தமாய் வழங்கி

வருகிறது. இந்த ஔவையாருக்குப் பெற்றோர் இட்ட பெயர், பிறப்பு, வளர்ப்பு, யாது என்பதைப் பற்றி சங்ககாலப் பாடல்களைக் கொண்டு தெரிந்து கொள்ள ஒரு வித ஆதாரமும் இல்லை. 'ஔவை' என்ற சொல்லுக்கு தமிழ் இலக்கியப்படி ''அன்னை'' என்று பொருள். தெலுங்கு, தமிழ், கன்னடம் போன்ற மொழிகளில் இச் சொல்லுக்கு கிழவி, பாட்டி என்ற பொருள்கள் அனுபவத்தில் இருந்து வருகின்றன. அனுபவம், அறிவு, தோற்றம் இவற்றால் முதுமை பெற்ற இவ்வம்மை யார் அன்று முதல் இன்று வரை நாட்டு மக்களுக்கு நல் லுபதேசங்களைச் செய்து ஔவைப்பாட்டி என அனை வராலும் அன்போடு அழைக்கப்பட்டிருக்கிறார். இளமை யிலேயே முதுமையை பகவானிடம் வேண்டி அதைப் பெற்று உருவத்தால் அனைவருக்கும் பாட்டியாகக் காட்சி தந்து, நாடு முழுவதும் பாத யாத்திரை செய்து, பல் நீதி உபதேசங்களாலும் உலக மக்களை உய்வித்து வந்திருக் கிறார் என நூலின் வாயிலாகத் தெரிய வருகிறது. பாமர மக்க ளோடும், அரசர்களோடும் தொடர்பு கொண்டு அவர்களுக்குத் தக்க சமயத்தில் நல்லுபதேசம் செய்து அவர்களால் போற்றப் பட்டும் இருக்கிறாள்.

சேரநாட்டின் ஒரு பகுதியான தகடூரை ஆண்ட அதியமான் என்ற அரசனிடம் ஆலோசனைக்காகவும், அவைப் புலவ ராகவும் இருந்து அவ்வரசனின் அளவிலா நட்பைப் பெற்று போர்க்களம் செல்லும் அவ்வரசனை உற்சாகப்படுத்தி அனுப்பி வந்திருக்கிறாள். நீண்ட ஆயுள் அளிக்கவல்ல ஒரு நெல்லிக்கனியை அந்த அரசனிடமிருந்து பெற்று நீண்ட காலம் வாழ்ந்திருக்கிறாள். தொண்டைமானுக்கும், அதிய மானுக்கும் போர் மூண்ட போது அதியமானால் தூதுவராக அனுப்பப்பட்டு தொண்டைமானிடம் சென்று சாமர்த்திய மாகப் பேசி சிறந்த ராஜ தந்திரத்தைக் கையாண்டு, முதிர்ந்த

அரசியல் ஞானத்தைப் பயன்படுத்தி போரைத் தடுத்து நிறுத்தியிருக்கிறாள். என்றுமே பகை கொண்டிருந்த சேர, சோழ, பாண்டிய அரசர்கள் ஒருங்கே கூடியிருந்ததைக் கண்டு உள்ளம் பூரித்து ''என்றும் ஒற்றுமையாய் வாழவேண்டும்'' என்று அவர்களை ஆசீர்வதித்தாள்.

பாணர் என்ற சங்க காலப் புலவர்க்கு ஆருயிர் நண்பராக இருந்தாள், அதியமான் மரணத்திற்குப் பிறகு அவ்வரசனின் புதல்வனுக்கும், ஆலோசகராகவும், அவைப் புலவராகவும் இருந்து அறிவுரை ஆற்றிவந்தாள் என்று ஔவையாரைப் பற்றிய கீழ்வரும் வரலாற்றுக் குறிப்புகளை சங்க கால இலக்கியங்களிலுள்ள ஔவையார் பாடல்களைக் கொண்டு தெளிவாய்த் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் ஔவை யாரின் பிறப்பு வளர்ப்பு பற்றியோ, தாய் தந்தையரைப் பற்றியோ இப்பாடல்களைக் கொண்டு அறிய முடிய வில்லை. சங்ககால நூல்களிலுள்ள 59 பாடல்களுள், 23 பாடல்கள் தன்னை ஆதரித்த அதியமான் நெடுமான் அஞ்சி என்ற சிற்றரசனுடைய புகழ், வீரம், குணம் போன்ற பெருமைகளை எடுத்து உரைக்கின்றன.

## தனிப்பாடல்கள்

சங்ககாலப் பாடல்களைத் தவிர 100க்கும் அதிகமான தனிப்பாடல்கள் ஔவையின் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன. இவற்றை இரண்டு விதமாகப் பிரிக்கலாம்.

1. பொதுவாய் நீதியை விளக்கக் கூடியவை.

2. தனது வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்களை விளக்கக் கூடியவை.

## பிறப்பு வளர்ப்பு

மாடு மேய்க்கும் சிறுவன் ஔவைக்கு நாவல் பழ விருந்தளித்தான். கோரைக்கால் ஆழ்வார் என்ற பிரபு தானம் தருவதாகச் சொல்லி ஔவையை பல முறை வரச் சொல்லி கடைசியில் ஏமாற்றி விடுகிறான். ஓர் ஏழைக் குடியான வனின் மனைவி, ஔவையாருக்கு மரியாதைக் குறைவாக விருந்தளித்தாள் என்பது பிரசித்தமாய் வழங்கி வரும் கதை. ஔவையாரின் வாழ்க்கைக் குறிப்புக்களை சில தனிப் பாடல்கள் மூலம் தெரிந்து கொள்ளலாம். ''ஆதி என்ற புலைச்சிக்கும், பகவன் என்ற அந்தணனுக்கும்'' ஔவையார் மகளாகத் தோன்றினாள். அதியமான், வள்ளுவர், உப்பை, உருவை, வெள்ளி என்ற இவர்கள் ஐவரும் ஔவைக்குக் கூடப் பிறந்தவர்கள். இவ்வறுவருள் ஔவை என்பவள் இளமையிலேயே தந்தையைப் பிரிந்து பாணர் சேரியிலே வளர்க்கப்பட்டு வந்தாள் என ஔவையாரின் வரலாற்றைப் பற்றிக் கபிலர், 138 வரிகள் கொண்ட ''கபிலர் அகவல்'' என்ற நூலில் தானே தெளிவாக எடுத்துரைக்கின்றார். ''ஞான அமிர்தம்'', ''திருவள்ளுவர் கதை'', ''புலவர் புராணம்'', ''விநோத ரச மஞ்சரி'' போன்ற சில பிற்காலத்திய நூல்களும் கபிலர் அகவல் நூலைத் தழுவியே ஔவையின் வரலாற்றை விவரிக்கின்றன.

தன்னை ஆதரித்து வந்த அதியமானைத் தவிர மற்ற அரசர்களை, கோடிப் பொன் கொட்டிக் கொடுத்தாலும் புகழாமல், கவி பாடாமல் ஒரு விரதம் பூண்டிருந்தார் ஔவைப் பாட்டி. ஒரு பெண், அதிலும் கவியரசி, வயதான மூதாட்டி, அரசனுக்காக தூது சென்ற நிகழ்ச்சியை, உலக மகா இலக்கியங்களில் எங்கும் காண முடியாது. இதுதான் தமிழ் நாட்டுக்கு ஔவையால் கிடைத்த மாபெரும் பெருமை.

## நீதி நூல்கள்

சங்ககாலப் பாடல்கள், தனிப் பாடல்கள் நீங்கலாக ஔவையின் பெயரால் இருந்து வரும் மற்ற நூல்களை நீதி நூல்கள், பிரபந்தங்கள், சமய நூல்கள் என மூன்று வகை யாகப் பிரிக்கலாம்.

அசதிக் கோவை, பந்தநந்தாதி, பெட்டகம் என இம் மூன்றும் பிரபந்த வகையைச் சேர்ந்தவை.

இரண்டாவது வகையைச் சார்ந்த ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல் வழி, கல்வி ஒழுக்கம் என்ற ஐந்து நூல்களுள் முறையே நான்கு நூல்களும் பெரும்புகழ் பெற்று சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரை அனைவராலும் பழமொழிகளாகப் பேசப்பட்டும், கல்வித் தொடக்கத் தில் பாடப் புத்தகங்களாகப் போதிக்கப்பட்டும் வந்திருக் கின்றன.

ஆத்திசூடியில் சூத்திர வடிவில் 108 வாக்கியங்கள் உள்ளன. இவை அகர வரிசையில் முறையே ஆக்கப்பட் டுள்ளன. இரண்டாவதான கொன்றை வேந்தன், இரண்டு வாக்கியங்களைக் கொண்ட 91 வரிகளில் நீதி போதனை செய்பவையாக அமைந்துள்ளன. மூதுரை என்ற மூன்றாவது நூலில் 30 வெண்பாப் பாடல்கள் அடங்கியுள்ளன.

40 வெண்பாப் பாடல்களால் ஆக்கப்பட்டது நல்வழி என்ற நான்காவது நூல். ஒரு வாக்கியம், இரு வரி, வெண்பா இப்படிப் படிப்படியாய் அமைந்துள்ள இந்நான்கு நூல்களும் 300 ஆண்டு காலமாக அனைவராலும் முதல் வகுப்பிலிருந்து படிக்கப்பட்டு வருகின்றன என்பது ஒன்றே இவற்றின் பெருமைக்குப் போதுமான சான்றாகும். இரண்டு வரிகளில்

வள்ளுவர் கூறும் அதே கருத்தை ஔவையார் ஒரே வரியில் சுருங்கச் சொன்னார் என்பது கொன்றை வேந்தன் 28,74,2,26,19 வாக்கியங்களைப் படிப்பவர்களுக்கு நன்கு புலனாகும்.

திருக்குறளை விட ஒரு விதத்தில் இந் நீதிநூல்கள் சிறந்தவை எனக் கூறலாம்.

Reeene Dr. James Beart, Sir John போன்ற ஆங்கிலேயர்கள் 150 ஆண்டுகளுக்கு முன்பு ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து இந்நூல்களை வெளியிட்டார்கள். ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி ஆகிய நான்கு நூல் களுக்கும் Persival என்ற ஆங்கிலேயரால் ஆக்கப்பட்ட ஆங்கில மொழி பெயர்ப்பு இன்றைக்கும் நமக்குக் கிடைக் கின்றன. Dr.P.V. Pope தனது நூல் ஒன்றில் ஆத்திசூடியை வெகுவாகப் போற்றியிருக்கிறார்.

எல்லாத் துறைகளிலும் அறிவை வளர்ப்பதற்கு வேண்டிய எல்லா அம்சங்களையும் ஔவையார் இந்நூலில் விளக்கி யுள்ளார். உதாரணமாக வாழ்க்கையில் மிக அவசியமான உணவு, ஒழுக்கம், உறக்கம், கல்வி, போர் முதலிய விஷயங் களைப் பற்றி (கொ) 33,7 (ஆ) 2,6,11 அழகாக எடுத்துரைக் கிறார். அதே போல் கைத்தொழில், வாணிபம், உழவு ஆகிய வற்றின் பெருமையைப் பற்றி (கொ) 29,39 வாக்கியங்களில் விவரித்துள்ளார். அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய வற்றில் அம்மையாருக்குள்ள புலமையை இந்நூலின் வாயி லாக நன்கு உணரலாம். சைவ, வைஷ்ணவ, சமரசம், ஆலய வழிபாடு, அகிம்சா நோன்பு, மோட்சம், பழைமை யிலே பற்று ஆகியவற்றில் ஔவையாருக்கு இருந்த அயராத நம்பிக்கைக்கு (கொ) 28,38,3,58 (ஆ) 56,60,101,63 (நல்) 1,17 ஆகிய பாடல்களே சிறந்த சான்றுகளாகும்.

## சமய நூல்கள்

ஔவையாரின் நாலாவது பிரிவைச் சேர்ந்த சமய நூல்களுள், ஞானக்குறள் என்ற நூல் முதலிடம் பெறுகிறது. இதற்கு ஔவைக் குறள், திருக்குறள், என்ற பெயரும் உண்டு. வள்ளுவர் குறளில் சொல்லாமல் விட்டு வைத் திருந்த மோட்சத்தைப் பற்றி இந்நூலில் விளக்கி வள்ளுவரின் குறளுக்குப் பூரணத்துவம் அளித்திருக்கிறார் ஔவையார். ஞானத்தின் மூலமாகத்தான் முக்தி பெற முடியும் என்ற கருத்தை வற்புறுத்துவதால் இந்நூலுக்கு ஞானக்குறள் என்று பெயர் வந்தது. இது ஒரு சிறந்த ஆன்மிக நூல், முப்பால், 31 அதிகாரங்கள் 310 குறட்பாக்கள் கொண்டது இந்நூல். வள்ளுவருடைய குறட்பா வடிவத்திலேயே இது அமைந் துள்ளது. ''விநாயகரகவல்'', கணபதி ஆசிரிய விருத்தம், உயர் ஞானசரநூல் சரிதம் என்ற மற்ற சமய நூல்களும், பக்தி, யோகம் முதலியவற்றை விளக்கும் விதத்தில் அமைந்துள்ளன.

## மூன்று ஔவை

ஒன்று சங்க காலத்தில் வாழ்ந்து 59 தனிப்பாடல்களை இயற்றிய ஔவையார். கி.பி 10-ஆவது நூற்றாண்டில் வாழ்ந்து நீதி நூல்களை இயற்றியவர் இரண்டாவது ஔவையார். சமீப காலத்தில் தோன்றிய மூன்றாவது ஔவையாரால் சமய நூல்கள் இயற்றப்பட்டன என ஆராய்ச்சியாளர்கள் கூறு கிறார்கள்.

## ஒருமைப்பாடு

தர்ம சாத்திரம், நியாயம், வேதாந்தம், மீமாம்சா என பல பிரிவுகள் கொண்ட நூல்கள் சம்ஸ்கிருதத்தில் ஆதியில் சூத்திர வடிவத்தில் ஆரம்பமாகி பிறகு முறையே பாஷ்யம்,

விரிவுரை என்று படிப்படியாக வளர்ந்து வந்திருக்கின்றன. ஆனால் நீதிகளைப் போதிக்கும் விஷயத்தில் சம்ஸ்கிருத மொழியில் சூத்திர வடிவத்தில் நூல்கள் தோன்றவில்லை. அக்குறையைத் தீர்க்கும் வகையில் முதன் முதலாகத் தமிழில் சூத்திர வடிவத்திலேயே நீதியை போதிக்க ஔவையார் முன் வந்துள்ளார். நீதியை மட்டுமின்றி, வேதாந்தம், தத்துவ ஞானம், உலகானுபவம் போன்றவற்றையும் நீதிகளோடு சேர்த்து ஒரே சூத்திர வடிவில் ஆக்கி உலகுக்களித்து தமிழுக்கும் சம்ஸ்கிருதத்துக்கும் இணைப்புப் பாலத்தைப் போட்டு ஒருமைப்பாட்டை வளர்த்துள்ளார். சுருங்கச் சொன்னால் உபய வேதாந்த சித்தாந்தத்தை இவ்வம்மையார் இச்சிறிய நூல்களின் வாயிலாக ஸ்தாபித்துள்ளார் என்றுதான் சொல்ல வேண்டும். அடிப்படை நீதிகளைக் கூறுவதில் எல்லா மொழிகளுக்கும் இடையில் ஒற்றுமை காண முடியும். வடமொழி நூலில் உள்ள கருத்துக்களையெல்லாம் ஔவை நூலில் அப்படியே காணமுடிகிறது.

**தினமணி சுடர் - 1973**

# 11. திருக்குறளும் ஸம்ஸ்கிருத இலக்கியமும்

## 1. ஜைனம் முதலிய சமயங்கள்

எல்லா சமயத்தினரும் தங்களுடையது என உரிமை கொண்டாடும்படி திருக்குறள் அமைந்திருப்பது வள்ளுவரின் பெருமைக்கு எடுத்துக்காட்டாகும். அடிப்படை உண்மைகள் எல்லா சமயத்திலும் ஒன்றாக இருப்பதால் அவ்வுண்மை களை விளக்குவதையே முக்கிய நோக்காகக் கொண்ட இந்நூலில் எல்லா சமயத்தினரும் உரிமை கொண்டாடுவதில் வியப்பு என்ன இருக்கிறது? அடிப்படைக் கொள்கைகளில் எண்பது சதவிகிதம் எல்லா சமயங்களோடும் இந்நூல் ஒத்து இருக்கிறது என்பதை இதனால் அறியலாம். திருக்குறள் ஜைன சமய நூல் என ஜைனர்கள்தான் அதிகம் உரிமை கொண்டாடுகிறார்கள்.

மலர்மிசை யேகினான், ஆதிபகவன், எண் குணத்தான் என்று முதலதிகாரத்தில் வரும் சொற்களையும் முதல் நான்கு அதிகாரங்களின் அமைப்பு முறையையும், அஹிம்சை, புலால் உண்ணாமை இவற்றை வற்புறுத்திக் கூறி இருப் பதையும் ஆதாரமாக வைத்துக்கொண்டு, குறளை ஜைன சமய நூல் என அவர்கள் வாதாடுகிறார்கள். ஜைன குரு வாகிய குந்த குந்தர் என்ற ஏலாச்சாரியரால் திருக்குறள் மலையில் இயற்றப்பட்டு மதுரையில் அரங்கேற்றப்பட்டது என்பது ஜைனரின் வாதமாகும். நீலகேசி உரையாசிரியர் சமய திவாகர முனிவர் திருக்குறளை ஜைன வேதமெனப் பெருமையோடு தனது உரையில் குறிப்பிட்டு இருக்கிறார்.

ஜைன நூலாகிய மேரு மந்திர புராணத்தோடு ஒவ்வொரு குறளுக்கும் உள்ள கருத்து ஒற்றுமையை சக்கரவர்த்தி நாயனார் என்பவர் எடுத்துக் காட்டுகிறார். திருக்குறளின் சார மாய் அமைந்த நாலடியார் நூல் பல ஜைனர்களால் இயற்றப் பட்டதால் முதல் நூலாகிய குறளும் ஜைன சமயத்தைச் சார்ந்ததே என்று சாதிக்க அவர்கள் முன் வருகிறார்கள். ஆனால் இதில் ஓர் உண்மையும் உண்டு. சங்கம் மருவிய காலம் தொடங்கி பக்தி நூல்கள் தோன்றும் வரையாக உள்ள இடைக் காலத்தில், எழுதப்பட்ட பதினெண்கீழ்கணக்கு, ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காவியங்கள் போன்ற தமிழ் இலக்கிய நூல்கள் யாவும் வெகுவாக ஜைனர்களால் இயற்றப்பட்டவை என்பது மறுக்க முடியாத உண்மை. அதனால் அதனுள் அடங்கிய குறளும் ஜைன சமய நூல் என்பதை அவர்கள் தீர்மானிக்கிறார்கள். எஸ். வையாபுரிப் பிள்ளை, திரு.வி. கல்யாண சுந்தர முதலியார் போன்ற தமிழ் மூதறிஞர்களும் குறள் ஜைன நூல் என்பதையே ஆதாரத் தோடு விளக்கி இருக்கிறார்கள்.

தனது மனைவி அகலிகையை கௌதம முனிவர் கல்லாகச் சபித்த புராண வரலாறு 25-ஆவது குறளில் வரு கிறது. ஜைன சமயத்தில் முனிவருக்கு மனைவி இருக்க முடி யாது. அவருக்கு கோபமும் வரக்கூடாது. வந்தாலும் சபிக்கவும் மாட்டார். ஆகையால் ஜைன சமயத்திற்குப் புறம்பான இக் கதைகளைக் கூறும் குறளை ஜைன சமய நூல் எனச் சொல்ல முடியாது என்று போப் என்ற ஆங்கிலேயர் கூறுகிறார்.

புத்த பகவானைக் குறிப்பிடும் அறவாழ் அந்தணன், மலர்மிசை ஏகினான், தனக்குவமை இல்லாதான் போன்ற சொற்களை வைத்து இது பௌத்த சமய நூல் என, சிலர் கருதுகின்றனர். Dr.B.C. Law என்பவர் புத்த சமயத்தின் புனித நூலாகிய தம்மபதத்தில் உள்ள ஒவ்வொரு சுலோகத்

திற்கும் முறையே ஒவ்வொரு குறளோடு உள்ள கருத்து ஒற்றுமையை 253 இடங்களில் தெளிவாகக் காண்பித் திருக்கிறார். பௌத்த மதத்தில் ஜீவன் கிடையாது - பிறவியும் கிடையாது. இவ்விரு கருத்துக்களையும் வலியுறுத்திக் கூறும் குறளை பௌத்த நூல் என்று எவ்வாறு கூற முடியும்?

மலர்மிசையேகினான் என்ற சொல்லுக்கு விளக்கம் தருவது போல் உள்ள ''பூவேறு நான்முகன் - ஏறியாய தாமரைபோல் ஏகினானும்'' என்ற திருவாசக தேவாரச் சொற்களைக் காட்டி குறளை சைவ நூல் எனச் சொல்லி வள்ளுவருக்கு நாயனார் பட்டமளித்து அவரைத் தமிழ் அடியார்களுள் ஒருவராக்கி சிலர் பெருமைப்படுகிறார்கள். இக் கூற்றிலும் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை.

''தாமரைக் கண்ணினான் உலகு'' (திருமாலின் உலகம்) என்ற சொல்லால் உவமையின் வாயிலாக வைகுந்த லோகத்தை 111-ஆவது அதிகாரம் 3-ஆவது குறள் குறிப்பிடுவதாக ஆசிரியர் பேசுகிறார். அதைப் போல் 61-ஆவது அதிகாரம் 10-ஆவது குறளில் மகாவிஷ்ணுவின் திருவிக்கிரம, வாமன அவதாரங்களை வள்ளுவர் காண்பித்து இருக்கிறார். பின் வந்த பல வைணவ ஆசிரியர்கள் பல குறள்களைத் தங்கள் உரைகளிலே கையாண்டு இருக்கின்றனர். மேலே கூறிய காரணங்களால் வைணவர்களும் குறளிலே தங்களுக்குள்ள உரிமையை நிலை நாட்டப் பார்க்கிறார்கள். தாமரைக் கண்ணினான் என்ற சொல்லை கம்பன் பல இடங்களில் இந்திரன் என்ற பொருளில் பயன்படுத்தி இருப்பதால் இது திருமால் ஒருவரையே எவ்வாறு குறிப்பிட முடியும் என்பது மற்றொரு சாராரின் கருத்து, மயிலையில் தோன்றிய வள்ளுவர் அக்காலத்தில் சென்னைக்கு வந்த S.T தாமஸ் என்ற ஆங்கிலேய மதகுருவிடமிருந்து பைபிளைப் பயின்று அக்கருத்துக்களை வள்ளுவர் குறளின் வாயிலாக விளக்கினார் என்று சொல்வாரும் உண்டு.

## 2. வைதிகமதம்

"வேதம், மறைமொழி, நிறைமொழி எனப் பெயர் பெற்று எவராலும் இயற்றப்படாமல் வெகு காலமாக பிரசாரத்தில் தொடர்ந்து இருந்து வருகிறது. ஜாதி நான்கு வகைப்பட்டது. ஆசிரமங்களும் நான்கு விதமாகப் பிரிக்கப் பட்டுள்ளன. முதல் வகுப்பைச் சேர்ந்த அந்தணர்கள் வேதத்தை ஓதியும் காத்தும் வருகின்றனர். அந்தணர் காக்கும் வேத வழி சென்று அரசன் நாட்டை ஆள வேண்டும். ஓதல், ஓதுவித்தல், தானம் செய்தல், தானம் வாங்குதல் போன்ற ஆறுவித தொழில்கள் அந்தணருக்கு வேதத்தால் வகுக்கப்பட் டிருக்கின்றன. அந்தணன் ஒழுக்கம் தவறக் கூடாது. கற்று மறந்த வேதத்தை அவன் மறுபடியும் பயின்று ஒரு வேளை உணர்ந்தாலும் உணரலாம்; ஒழுக்கம் தவறிய பிராமணனுக்கு பிராமணியம் மட்டும் மறுபடி கிட்டாது. நான்கு வகுப்பைச் சார்ந்தவர்கள் நிறைந்திருக்கும் ஒரு நாட்டையே நாடு எனச் சொல்லலாம்'' என இக் கருத்துக்களைக் கொண்ட 133, 134, 543, 560, 741 போன்ற குறள்களால் வள்ளுவர் காலத்தில் வைதிக மதம் தமிழ் நாட்டில் பரவி இருந்தது என்றும், வள்ளுவரும் அதைப் பின்பற்றி வந்தார் என்றும் புலன் ஆகிறது.

ஆசிரமங்கள் நான்கு வகைப்பட்டன. முதல் ஆசிரமத்தைச் சேர்ந்த பிரஹ்மசாரி என்பவன் குருகுலவாசம் செய்து கல்வி கற்க வேண்டும். இல்லறத்தான் மற்ற மூன்று ஆசிரமத் தாருக்கும் உதவியாக இருந்து அவர்களைக் காக்க வேண்டும். விருந்தினரை உபசரித்து இறந்த முன்னோர்களுக்கு தர்ப் பணம், சிராத்தம் செய்து, தேவதைகளை வணங்கி, துறவி களுக்கு அன்னமளித்து, ஐந்து விதமான கடமைகளைச் செய்து மக்களையும் பெற்று வாழவேண்டும் என்று வேதத்தில் கூறிய முதல் இரண்டு ஆசிரமத்தாருடைய

கடமைகளை இல்லறவியலில் 41, 42, 43, 61, 62, 67, 69 குறள் களில் நினைவுபடுத்துகிறார் நூலாசிரியர். 13 அதிகாரங்கள் கொண்ட துறவறவியலில் 241, 252, 261, 314, 332, 358, 370 எண்ணுள்ள குறள்களில் சந்நியாசம், வானப்பிரஸ்தம் என்ற மற்ற இரு ஆசிரமத்தார் கடமைகளை வள்ளுவர் விரிவாக விளக்குகிறார்.

குலத்தினால் வரும் ஏற்றத் தாழ்வுகள், நற்குடிப் பிறந்த வர்களின் பெருமை, அவர்களிடம் உள்ள நற்பண்புகள், அவர்கள் பேச்சைக் கொண்டு அவர்களை அறியும் வகை ஆகியவற்றை 'குடிமை' என்ற 96-ஆவது அதிகாரம் 10 குறள் களாலும் விளக்குகிறார் ஆசிரியர். பிறப்பினால் அனைவரும் ஒன்றே. செய்யும் தொழிலுக்கேற்ப குலத்தால் ஏற்றத் தாழ்வுகள் மக்களிடம் உண்டாகின்றன. (அதி 88 குறள் 2) மேற்குடியில் பிறந்தும் மேன்மையான குணமற்றவர்கள் மேன்மை பெற மாட்டார்கள். கீழ்க்குடியில் பிறந்தும் மேன்மையான குணமுள்ளவர்கள் மேலானவர்கள் (அதி.98 குறள் 3) இவ்விரண்டும் குணத்தால் வரும் ஏற்றத் தாழ்வு களை எடுத்துக்காட்டுகின்றன.

## 3. கர்ம சித்தாந்தம் - மறுபிறப்பு

பரமனின் திருவடியைப் பற்றியவர்கள் பிறவிக் கடலைத் தாண்டுவார்கள், புலனடக்கத்தால் ஏழு பிறவி களிலும் தன்னைக் காத்துக் கொள்ளும் சக்தி வருகிறது. மரணம் தூங்குவதற்குச் சமம், பிறவி தூங்கி எழுதலுக்குச் சமமானது, அஞ்ஞானத்தினால் இழிவான பிறவி கிட்டு கிறது, மெய் ஞானத்தினால் முக்தி பெறலாம், பற்றின்மை யினால் பிறப்பின்மையைப் பெறலாம், ஒரு பிறவியில் கற்ற கல்வி ஏழுபிறவிகளிலும் தொடர்ந்து அவனுக்குப் பலனளிக் கிறது, இப்பிறவியில் பிரியமாட்டேன் என நான் சொல்ல,

அடுத்த பிறவியில் பிரிந்து விடுவோமோ எனப் பயந்து காதலி கண்ணீர் விட்டாள் என்பது போன்ற கருத்துக்களைக் கூறும் 10, 126, 339, 351, 356, 358, 362, 398, 1315 எண்ணுள்ள குறள்களைக் கவனிக்கும் பொழுது வைதிக நெறியின் அடிப்படையான மறுபிறவியிலே வள்ளுவர் அசையாத நம்பிக்கை வைத்திருந்தார் என்பது புலனாகிறது. 62, 107, 126, 398, 538, 835 ஆகிய குறள்களில் எழுபிறவி என்ற சொல்லை ஆறு முறை திரும்பத் திரும்பக் கூறி ஒருவன் செய்யும் நல்வினையோ தீவினையோ ஏழு பிறவிகள் வரை அவனைத் தொடர்ந்து சென்று பயனளிக்கும் என்ற வைதிக மதத்தின் உயிர் நாடியாகிய வினையின் மகிமையை அழுத்தம் திருத்த மாக எடுத்துக் காட்டுகிறார் வள்ளுவர். ''இறந்த பிறகும் ஒருவனுக்கு நல்வினை துணையாய் நின்று உதவுகிறது. பல்லக்கைச் சுமப்பவன், அதில் வீற்றிருப்பவன் இவ்விரு வரையுங் கண்டு நல்வினை, தீவினை இவ்விரண்டும் உண்டு என்பதை நாம் கண்கூடாக உணரும் போது இதை அறிய சாஸ்திரம் எதற்கு?'' எனக் கூறும் 36, 37 குறள்களால் இரு வினைகளும் வாழ்க்கையில் மனிதனுக்கு இன்றியமை யாதவை என்பதை உணர முடிகின்றது.

(தென்புலத்தார் என்றால் தென் திக்கில் வாழும் பித்ரு தேவதைகள் என்பது பொருள். 43-ஆவது குறளில் வரும் இச் சொல்லினால் வள்ளுவர் காலத்தில் பித்ரு தேவதைகளைக் குறித்து சிரார்த்தம் செய்யும் வழக்கம் இருந்து அதில் வள்ளுவர் நம்பிக்கை கொண்டிருந்தார் என்றும் தெரிய வருகிறது. பறவை கூட்டை விட்டு வெளியேறிய பிறகு கூண்டிற்கும் பறவைக்கும் உள்ள உறவைப் போன்றது உடலுக்கும் உயிருக்கும் உள்ள உறவு என்ற கருத்துக் கொண்ட 338-ஆவது குறளினால் ஆன்மிகத்தில் வள்ளுவர் கொண்டிருந்த பற்று நன்கு புலனாகிறது. தீயில் ஹவிசைப் போட்டுச் செய்யும் ஆயிரம் யாகங்களைக் காட்டிலும் புலால்

உண்ணாமையே அதிக பயனைத் தரவல்லது எனக்கூறும் 259-ஆவது குறள் அக் காலத்தில் யாகம் நடந்து வந்ததையும் அதனால் உண்டாகும் நற்பயனையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

## 4. விதி

விதியை யாராலும் வெல்ல முடியாது. அதன்படிதான் எதுவும் நடக்கும். நாம் அதன் அடிமைகள். விதியின் பயன் ஏதாகினும் அதை ஏற்பதே முறை. அதை யாராலும் எப்பொழுதும் எங்கும் வெல்ல முடியாது. என்றோ செய்து வைத்த அது இன்று பயனைத் தருகிறது. ஒருவன் செல்வம் படைத்திருப்பதும், கல்வி படைத்திருப்பதும் அதன் பயனே. அது நமக்கு அனுகூலமானால் எக்காலத்திலும் செல்வத்தைப் பெறலாம். பிரதிகூலமானால் தக்க காலத்தில் பெறாமலும் போகலாம். நாம் சேர்த்து வைத்த செல்வம் நிற்பதும் அழிவதும் அதன் பயனே. விதியின் பயனாக எவ்வளவு கிடைக்க வேண்டுமோ அவ்வளவுதான் கிடைக்கும். மனிதனுடைய முயற்சியை அடியோடு அழித்து விதி ஒன்றே தலை தூக்கி நின்று செயல் புரிகிறது என விதியின் வலிமையைப் பலவாறு ஊழ் என்ற அதிகாரத்தில் 10 குறள்களாலும் எடுத்துக் கூறுகிறார் ஆசிரியர்.

## 5. சொர்க்க நரகங்கள்

அறவழியில் நடப்பவன் சுவர்க்கம் எய்துவான். விருந்தாளிகளை உபசரிப்பவன் தேவலோகம் செல்லுவான். நாம் உதவாமலேயே தானாக வந்து நமக்கு உதவி செய்கிறவனுக்கு இரண்டு உலகத்தை அளித்தும் கடனைத் தீர்த்துக் கொள்ள முடியாது என்ற கருத்துக்களைக் கூறும் 50, 86, 101

குறள்கள் சுவர்க்கலோகம் உண்டு, புண்ணியம் செய்தால் அது கிடைக்கும் என்ற முடிவைப் பறை சாற்றுகின்றன. புத்தேள் நாடு, புத்தேளிர் வாழும் உலகம், மேல் உலகம், வானுலகம், விசும்பு என்ற சொற்களால் சுவர்க்கலோகத்தை ஆசிரியர் ஆங்காங்கு குறிப்பிடுகிறார். இரக்கமுள்ளவர்கள் எழு பிறவி வரை நரகம் புகமாட்டார்கள். நரகம் வந்திடினும் தானம் செய்வதை விடக்கூடாது. பல பிறவி எடுத்து அனுப விக்க வேண்டிய பாபத்தை அறிவில்லாதவன் இப்பிறவியிலேயே செய்து விடுகிறான். தாசிகளின் தோள் அறிவில்லாதவன் அடையும் நரகத்திற்கு ஒப்பானது. இக் கருத்துக்களைக் கூறும் 222, 243, 835, 917 குறள்களில் பாவத்தின் பயன் நரகம் என்ற கர்ம சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளை விளக்குகிறார் ஆசிரியர். அளறு, ஆறிருள், இருள் சேர்ந்த இன்னா உலகம் என்ற சொற்களால் நரகத்தைக் குறிப்பிடு கிறார் ஆசிரியர்.

தபசிகள் யமனிடமிருந்து பயப்படுவதில்லை. கொல்லா விரதம் பூண்டவனை யமன் அண்டுவதில்லை. வலிவுளன் ஒருவனைப் பகைத்துக் கொள்வது யமனை வா என்று அழைப்பதற்கு ஒப்பாகும் என்ற பொருள் கொண்ட 269, 326, 394 போன்ற குறள்கள், பாவம் செய்தால் யமனிடம் பயப்பட வேண்டும், அதிலிருந்து தப்ப முடியாது என்று புராண இதி காசங்கள் கூறியுள்ள வைதிக அடிப்படைக் கொள்கைகளை விளக்குகின்றன. ஸ்ரீதேவி, மூதேவி, மோகினி, பிசாசு போன்றவற்றில் வள்ளுவர் நம்பிக்கை கொண்டிருந்தா என்பதை 565, 617, 850 போன்ற குறள்கள் நமக்குத் தெளிவ படுத்துகின்றன.

சொர்க்கத்தைவிட முக்தி மேலானது. முடிவில் ஒருவ அடைய வேண்டியதும் அதுவே. அது அழிவற்றது. மாறுத அற்றது. ஆசையைக் கடந்தவர்களால் அதை அடை

முடியும் என்ற வேதாந்தக் கருத்துக்களை 3, 346, 353, 370 ஆகிய குறள்கள் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

''என்ப'' என்ற சொல் இந்நூலில் பல இடங்களில் பயன் படுத்தப்படுகின்றது. பெரியோர்கள் இவ்வாறு கூறுவார்கள் என்பது இதன் பொருள். குறளில் கூறிய முக்கியமான கருத்துக்கள் யாவும் முன்னோர்களின் நூலில் இருந்து எடுத்துக் கையாளப்பட்டவை என்பது இதனால் புலனாகிறது அல்லவா? சம்ஸ்கிருத நூலில் உள்ள கருத்துக்களையே வள்ளுவர் பல இடங்களில் கையாண்டிருக்கிறார் எனக் கூறுவோரின் கருத்தை இது பலப்படுத்துவதுபோல் அமைந் துள்ளது.

('சம்ஸ்கிருத நூல்களில் உள்ள கருத்துக்களையோ சொற் களையோ வள்ளுவர் சிறிதளவும் எடுத்துக் கையாளவில்லை. தமிழ்க் கலாசாரத்தையே வள்ளுவர் இங்கு கூறுகிறார். தமிழ் கலாசாரம் வைதிக கலாசாரம் அன்று. அது தனிமை வாய்ந்தது' எனக் கூறுவோரின் வாதத்தில் உண்மை சிறிதளவும் இல்லை என்பதை மேற்கூறிய பகுதியைப் படித்தவர்கள் நன்கு உணர்வார்கள்.)

ஜைனர்கள் நாத்திகர்கள். அவர்கள் இயற்றிய ஏராளமான தமிழ் இலக்கியங்களையும் அதோடு கலந்தளித்த ஜைன சமயக் கொள்கைகளையும் ஆஸ்திகர்களாகிய தமிழர்கள் பெருமையோடு ஏற்றுத் தலைமீது வைத்துக் கொண்டாடும் பொழுது தமிழ் நாட்டிலே தமிழோடு கூட, பின்னிப் பிணைந்து வளர்ந்து வந்த வைதிக கலாசாரத்தை ஏற்றுக் கொள்ளுவதில் தயக்கம் காட்டுவானேன்? ஜைனக் கொள்கை களையும் அவர்கள் இயற்றிய தமிழ் இலக்கியங்களையும் ஏற்றுக் கொள்வதில் காட்டும் பெருந்தன்மை வைதிக கலாசாரத்தை ஏற்றுக் கொள்வதில் மட்டும் ஏன் சுருங்கி விடுகிறது?

## 6. அறிஞர்களின் கருத்து

திரு.V.R. இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் தமது நூலில் இராமாயணம், மஹாபாரதம், பராசர சம்ஹிதை, பாகவதம், ரிக்வேதம் இவற்றோடு அறத்துப்பாலுக்கு உள்ள கருத்து ஒற்றுமையையும், காமந்தக நீதி, அர்த்த சாஸ்திரம், சுக்ர நீதி, போதாயன ஸ்மிருதி ஆகியவற்றோடு பொருட்பாலுக்கு உள்ள கருத்து ஒற்றுமையையும், வாத்ஸ்யாயனரின் காம சூத்திரத்தோடு காமத்துப்பாலுக்கு உள்ள கருத்து ஒற்றுமை யையும் விரிவாக ஆதாரத்தோடு எடுத்து விளக்கியிருக்கிறார். 25க்கு மேலான சுத்த சமஸ்கிருத பதங்களை வள்ளுவர் கையாண்டு இருப்பதால் கருத்துக்களில் மாத்திரமின்றி சமஸ்கிருதச் சொற்களையும் குறளில் காண முடிகிறது என வையாபுரிப்பிள்ளை அவர்கள் விளக்கி இருக்கிறார்கள். இந்நூல் A.D 6ஆவது நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்ற புதிய கருத்தையும் துணிந்து கூறியிருக்கிறார் அவர். அறன், இயல்பு, ஒற்றர், தூதர் ஆகிய அதிகாரங்கள் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தைப் பின்பற்றி வந்தவை என்ற கருத்தையும் வையாபுரிப்பிள்ளை அவர்கள் உறுதிப்படுத்துகிறார். அதிகாரங் களின் அமைப்பு, அவற்றில் உள்ள குறளின் எண்ணிக்கை, அதிகார வரிசை ஆகியவை வள்ளுவராலேயே ஆரம்பத்தில் அமைக்கப்பட்டன. அதிக பாடபேதமின்றி இந்நூல் இன்று வரை காக்கப்பட்டு வந்திருக்கிறது. 1831-ஆம் ஆண்டில் எல்லிஸ் என்ற ஆங்கிலேயர் முதல் முதலாகக் குறளை பண்டிதர்களின் உதவியைக் கொண்டு வெளியிட்டார்.

## 7. எனது வேண்டுகோள்

இந்திய கலாசாரம் எனச் சொல்லப்படும் வைதிக கலாசாரத்தை தமிழ் நாட்டிற்கு மாத்திரமின்றி உலக முழுவதும் பரப்ப இந்நூலை இயற்றினார் வள்ளுவர்.

தன்னைத் தமிழன் என்று சொல்லிக் கொள்வதை விட இந்தியன் என்று சொல்லிக் கொள்வதில் மிக ஆர்வம் கொண்டிருந்தார். சங்கப் புலவர்கள் தமிழ் மக்களின் வரலாறு, கலாசாரம், பண்பாடு, தமிழ் அரசர்களின் சரிதம் ஆகியவற்றைச் சங்க நூல்களிலே பேசியிருப்பது போல வள்ளுவர் தனது நூலில் அது பற்றி பிரஸ்தாபிக்கவேயில்லை. தமிழ் என்ற சொல்லோ, தமிழன் என்ற சொல்லோ, சேர, சோழ, பாண்டியர்கள் போன்ற தமிழ் மன்னர்களின் பெயர், வரலாறு போன்றவைகளோ, தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களையோ மருந்துக்குக்கூட குறிப்பிடாதது இங்கு ஆராய்ச்சியாளர்கள் கவனிக்கத்தக்க விஷயமாகும்.

**திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்புநூல்**
**முகவுரை - 1979**

# 12. கம்பனும் வால்மீகியும்

## பாலகாண்டம்

கதைப் போக்கில் கம்ப இராமாயணத்திற்கும் வால்மீகி இராமாயணத்திற்கும் இடையே ஆங்காங்கு வெகு வாகக் காணப்படும் மாறுதல்களையும், புதிய கற்பனை களையும் முறையே படல வாரியாகக் கீழே எடுத்துக் காட்டுகின்றேன்.

### 1. ஆற்றுப்படலம்

இருபது பாடல்களைக் கொண்ட இப்படலத்தில் சரயூ நதியின் சிறப்பும், அழகும் நன்கு பேசப்படுகின்றன. வால்மீகி இராமாயணத்தில் சரயூ நதியைப் பற்றிக் குறிப்பிடு கிறார். ஆனால் அதன் பெருமை அங்கு தனியாகப் பேசப்பட வில்லை. சரயூ நதிக்கரையில் அயோத்தியா நகரம் அமைந் திருக்கிறது என்பதோடு நிறுத்திக் கொள்கிறார். எனவே இப்படலம் கம்பனின் புதிய படைப்பாகும்.

### 2. நாட்டுப்படலம்

அறுபத்தொரு விருத்தங்களைக் கொண்ட இப்படலம் கோசல நாட்டின் பெருமையைப் பேசுகிறது. வால்மீகி இராமாயணம் ஐந்தாவது சருக்கம், ஐந்தாவது சுலோகத்தில் ''செல்வம், தானியம் ஆகியவை நிறைந்த கோசல நாடு சரயூ நதிக்கரையில் அமைக்கப்பட்டுள்ளது'' என்று ஒரு சுலோகத் தினால் வால்மீகி இராமாயணத்தில் கூறிய கோசல நாட்டின் பெருமையை இங்கு கம்பன் அறுபத்தொரு பாக்களால் வித

விதமாகவும், அழகாகவும் பலவாறு கற்பனை செய்தும் கூறுகிறார். எனவே இதுவும் கம்பனின் புதிய படைப் பென்றே சொல்லலாம்.

## 3. நகரப்படலம்

எழுபத்தைந்து பாடல்கள் கொண்ட இப்படலத்தில் தசரத சக்கரவர்த்தி ஆண்டு வந்த அயோத்தி மாநகரின் சிறப்பும், பெருமையும், அங்குள்ள ஜனங்களின் தன்மையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. வால்மீகி இராமாயணம் ஐந்தாவது ஸர்க்கம் ஆறாவது சுலோகம் முதல் அந்த ஸர்க்கம் முழுவதும், அதாவது பதினெட்டு சுலோகங்களால் அயோத்தி மாநகரின் பெருமையை வால்மீகி முனிவரும் எடுத்துக் கூறியிருக்கிறார் என்றாலும், கம்பன் தனக்கென தனிப் பாணியில் அழகாகவும், அற்புதமாகவும், விசேஷமாகவும், விரிவாகவும் நகரப் பெருமையை எடுத்துக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. இப்படலத்தில் புதியதாக - அதாவது வால்மீகியில் இல்லாத - ஒரு புதிய விஷயத்தைக் கம்பன், படைத்தான் என்று சொல்லுவதற்கில்லை.

## 4. அரசியல் படலம்

தசரத சக்கரவர்த்தி நீதியுடனும், நேர்மையுடனும் அரசாண்ட விதம் பன்னிரண்டு பாடல்கள் கொண்ட இப் படலத்தில் பேசப்பட்டிருக்கிறது. வால்மீகி இராமாயணம் ஆறு, ஏழு ஸர்க்கங்களில் விரிவாகப் பேசிய தசரதனுடைய அரசாட்சிப் பெருமையை இங்கு சுருக்கிக் கூறுகிறான் கம்பன். எனினும் கருத்திலும், கற்பனையிலும் இரண் டிற்கும் உள்ள வேறுபாட்டை வாசகர்கள் அறியலாம். ஜனங் களின் பெருமை, பட்டணத்தின் சிறப்பு, அமைச்சர்களின் நேர்மையான அரசாட்சி ஆகியவற்றைக் கூறுவதன் மூலம்

தசரதனுடைய செங்கோல் ஆட்சியின் பெருமை மூலத்தில் இரண்டு ஸர்க்கங்களில் கூறப்பட்டிருக்கிறது.

வால்மீகி இராமாயணம் எவ்வாறு பிறந்தது, அது உலகில் எவ்வாறு பரவியது அதன் கதைச் சுருக்கம் என்ன, அது இராமனுடைய சபையில் லவகுசர்களால் பாடப் பெற்று கதாநாயகனாகிய இராமனால் கேட்கப்பட்டுக் கொண்டாடப்பட்ட விதம் ஆகிய அம்சங்கள் கொண்ட முதல் நான்கு ஸர்க்கங்கள் வால்மீகி இராமாயணத்திற்கே அசாதாரணமாக அமைந்துள்ளதால் அதைப் பற்றிக் கம்பன் தனது நூலில் குறிப்பிடவில்லை.

## 5. திருஅவதாரப்படலம்

*137 பாடல்கள் கொண்டது இது. புத்திர பாக்கியம் இன்றி வருந்திய தசரதன் தன் குறையைத் தனது குல குருவாகிய வசிஷ்டரிடம் தெரிவிக்க, ஒரு சமயம் இராவணனுடைய தொல்லைக்குள்ளாகிய தேவர்கள் பரமனைச் சரணம் அடைந்து, பரமன் அவர்களுக்கு அபயமளித்த முன் வரலாற்றை ஒரு முறை நினைத்துப் பார்த்த அவர் தசரதனை நோக்கி, ரிஷிய சிருங்க முனிவரை வரவழைத்து, ''அசுவமேத யாகம் செய் தால் உமது குறை நீங்கும்'' என உபாயம் கூறி ரிஷியசிருங்க முனிவரின் சரித்திரத்தையும் சொல்லி முடிக்கிறார். அரசனும் அவ்வாறே செய்து புதல்வர்களைப் பெறுகிறான் என்பது இப் படலத்தின் கதாசாரம். வால்மீகி இராமாயணம் எட்டாவது ஸர்க்கம் முதல் பதினெட்டாவது ஸர்க்கம், 36-ஆவது சுலோகம் வரை யாகம் பற்றி விரிவாய்ச் சொல்லி இருக்கும் கதையைத் தழுவி, அதிலே சில மாறுதல்களைச் செய்து, இப்படலம் சுருக்கமாகக் கம்பனால் அமைக்கப்பட்டுள்ளது.*

*1. பிள்ளைப்பேறு பெறுவதற்கு அசுவமேத யாகம் செய்ய வேண்டும் என்று தானாகவே முடிவு செய்த அரசன்*

சுமந்திரர் மூலம் வசிஷ்டர் முதலியோரை வரவழைத்து தன் முடிவைத் தெரிவிக்கிறார். அவர்களும் அதை ஆமோதித்துச் செல்கிறார்கள். இதைக் கேட்ட சுமந்திரர் அரசனைத் தனி யாக அழைத்து இரகசியமாக, ஒரு காலத்தில் சனத்குமாரர் என்ற முனிவர் ரிஷிகளிடம், ''ரிஷியசிருங்கர் என்ற ஒரு முனிவர் உலகில் தோன்றப் போகிறார்; தசரத சக்கரவர்த்தி புத்திர பாக்கியம் பெறுவதற்காக அம்முனிவரை வர வழைத்து யாகம் செய்து நான்கு புத்திரர்களைப் பெறப் போகிறான்'' என்று சொன்னதைத்தான் நேரிலேயே கேட் டிருந்ததாக அரசனிடம் கூறி, ரிஷியசிருங்கருடைய சரித்திரத் தையும் தான் கேட்டபடியே விரிவாக எடுத்துச் சொல்கிறார் சுமந்திரர். அதன்படி தேவ இரகசியத்தை அறிந்த அரசன் தனக்கு நான்கு பிள்ளைகள் பிறக்கப் போகிறார்கள் என்ற உண்மையையும், அதன் மூலம் அறிந்து, யாகம் செய்கிறான் என்று வால்மீகி இராமாயணத்தால் தெரிய வருகிறது. சரணம் அடைந்த தேவர்களுக்கு மஹாவிஷ்ணு அபயம் அளித்த செய்தியை வசிஷ்ட முனிவன் தன் மனதில் நினைத்துத் தேவ இரகசியத்தை அரசனிடம் சொல்லாமல் ரிஷிய சிருங்கருடைய சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறி அரசனை யாகம் செய்யத் தூண்டுகிறார். இங்கு நான்கு புதல்வர்கள் பிறக்கப் போகி றார்கள் என்ற தேவ இரகசியமோ விஷ்ணு தனக்குப் புதல்வ னாகப் பிறக்கப் போகிறான் என்ற உண்மையோ அரசனுக்குத் தெரியவில்லை என்று கம்ப இராமாயணத்தின்படி தெரிய வருகிறது.

2. வசிஷ்ட முனிவர் நினைத்துப் பார்த்ததாகக் கூறப் படும் 'தேவர்கள் விஷ்ணுவிடம் செய்த சரணாகதிச் செய்தி' கம்பனின் படல ஆரம்பத்திலேயே சொல்லப்படுகிறது. இது நேரிடையாக நிகழ்ந்ததல்ல. முன்பு நடந்ததை முனிவன் நினைத்துப் பார்த்துச் சொன்னதாகும். வால்மீகி இராமாயணத்தின்

படி அரசன் ரிஷியசிருங்க முனிவரை வரவழைத்து அசுவமேத யாகத்தை இயற்றி, கடைசியாக முனிவனைக் கொண்டு புத்திரகாமேஷ்டி யாகம் இயற்றும் சமயம் பிரும்மாவுடன் தேவர்கள் அவிஸ்ஸை ஏற்றுக் கொள்வதற்காக அங்கு கூடியபொழுது மஹாவிஷ்ணுவிடம் தேவர்கள் சரணாகதி, பரமன் வாக்களித்தல் ஆகியவைகள் யாக பூமியில் நேரிடை யாக நடந்ததாகத் தெரிகிறது. ஆனால் தசரதனோ அல்லது அங்குள்ளவர்களோ இச் சம்பவத்தை உணர்ந்தார்கள் என்று சொல்வதற்கில்லை.

3. தேவ விஷ்ணு சம்வாதத்திலும் இரண்டு நூல்களுக்கு மிடையே வேறுபாடு காணப்படுகிறது. தேவர்கள் யாகத்தில் அவிஸ்ஸை ஏற்க வந்தபொழுது பிரும்மனிடம் அரக்க ருடைய தொல்லையைத் தாளாது முறையிட, அதற்கு ஆவன செய்வதாக பிரும்மதேவன் வாக்களிக்கும் சமயம், மஹா விஷ்ணு அவர்கள் முன் தோன்றுகிறார். தசரதருக்கு நான்கு பிள்ளைகளாகத் தோன்றி தங்கள் குறையைத் தீர்க்க வேண்டும் என்று தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட, தான் மனிதனாக பூமியில் வந்து 11000 ஆண்டுகள் அங்கு வசித்து அவர்கள் துயரத்தைத் தீர்ப்பதாகக் கூறுகிறார் விஷ்ணு. ஆனால் தான் தசரதருக்கு மகனாகப் பிறக்கப் போகிறேன் என்ற உண்மையை தேவர்களுக்கு அவர் உரைக்கவில்லை. மஹா விஷ்ணு மறைந்த பிறகு பிரும்ம தேவன் தேவர் களைப் பூலோகத்தில் வானரர்களாகப் பிறக்குமாறு கட்டளை யிடுகிறார். பிறகு எல்லோரும் அவிஸ்ஸை ஏற்றுக் கொண்டு சென்று விடுகிறார்கள். இதுவே மூலத்திலுள்ள கதைப் போக்கு. இது சற்று விரிவாகவும் அமைந்திருக்கிறது. கம்ப இராமாயணத்தில் இங்கு அமைந்திருக்கும் கதையின் போக்கு பின்வருமாறு-

தேவர்கள் பரமசிவனிடம் முறையிட, அவன் பிரும்ம தேவனை அடைந்து இருவரும் மஹாவிஷ்ணுவைத் துதிக்க, கருடன் மீதேறி அவர்கள் முன் தோன்றி, தேவர்களுக்கு அபயமளித்து தான் தசரதருக்குப் புதல்வனாகவும் தன்னுடன் சங்கத்தினுடைய அம்சமாகிய சத்ருக்னனும், சக்ர அம்ச மாகிய பரதனும், ஆதிசேஷனின் அம்சமான லக்ஷ்மணனும் தன்னுடன் கூடப் பிறக்கப் போவதாகவும் தேவர்களுக்குக் கூறி அவர்களை பூமியில் வானரங்களாகப் பிறந்து தனக்கு உதவி செய்யுமாறும் மஹாவிஷ்ணு நேரிடையாகவே தேவர்களுக்குக் கட்டளையிடுவதாகக் காணப்படுகிறது.

4. யாகத்தில் அக்னி குண்டத்திலிருந்து ஒரு பூதம் கிளம்பி வெள்ளி மூடியினால் மூடப்பட்ட ஒரு சுவர்ணப் பாத்திரத்தில் பாயசத்தை ஏந்தி வந்து அதை அரசனிடம் கொடுத்து மனைவிமார்களுக்குக் கொடுக்குமாறு அரசனுக்குக் கட்டளையிட்டுச் சென்று விடுகிறது, என்பது மூலத்தின் கதைப் போக்கு.

சுவர்ணப் பாத்திரத்தில் அமிர்தத்துக்கு நிகரான பிண்டத்தை ஏந்தி அப்பூதம் நெருப்பில் இருந்து வெளி வந்து அரசன் எதிரில் ஒன்றும் பேசாமல் மௌனமாய் அதை வைத்து விட்டுச் சென்று விடுகிறது. பிறகு அதை மனைவிமார்கள் மூவருக்கும் வயசுக்கிரமமாக பரிந்து அளிக்கும்படி ரிஷிய சிருங்கர் அரசனுக்குக் கட்டளை இடுவதாகக் கம்ப இராமாயணத்தின் கதைப்போக்கு.

5. முதலில் கௌசல்யை, இரண்டாவது சுமித்திரை, மூன் றாவதாகக் கைகேயிக்கு முறையே அப் பாயசத்தின் அரை பாகம், நான்கில் ஒரு பங்கு, எட்டில் ஒரு பங்கு, மறு படியும் எட்டில் ஒரு பங்கு என அரசன் தன் தேவிமார்களுக்கு பாயசத்தைப் பிரித்து அளித்ததாக வால்மீகத்தில் காணப் படுகிறது.

6. முதலில் கௌசல்யை, இரண்டாவது கைகேயி, மூன்றாவது சுமித்திரை என்ற முறைப்படி மூவருக்கும் அமிர்தபிண்டத்தை சமமாகப் பிரித்து அரசன் அவர்களுக்கு அளித்ததாகவும் பிறகு தட்டில் சிந்தி இருந்த பாகத்தை இரண்டாவது முறையாக சுமித்திரைக்கு அளித்ததாகவும் இங்கு கம்பனின் கதைப்போக்கு.

7. பன்னிரண்டாவது மாதம் நவமி, சித்திரையில் இராம ஜனனம் என்று மூலத்தில் தெளிவாக இருக்கிறது. கம்பனில் இது பேசப்படவில்லை.

8. இராமன், பரதன் இவ்விருவர்களுடைய ஜென்ம நட்சத்திரம், லக்னம் ஆகியவை கம்பனிலும் மூலத்திலும் ஒன்றாகவே பேசப்பட்டிருக்கிறது. ஆனால் லக்ஷ்மண, சத்ருக்கர்களுடைய நட்சத்திரம், லக்னம் ஆகியவற்றில் மூலத்திற்கும், கம்பனுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. ஆயில்ய நட்சத்திரம், கடக லக்னம் லக்ஷ்மணனுடைய ஜனன காலம். மகாநட்சத்திரம், சிம்ம ராசி சத்ருக்னனுடைய ஜனன காலம் என்று கம்பனில் உள்ளது.

9. இவ்விருவரும் ஆயில்ய நட்சத்திரம், கடக லக்னத்தில் தோன்றியதாக மூலத்தில் காணப்படுகிறது.

10. தாதியர் மூலம் புதல்வர்கள் தோன்றிய செய்தியை அறிந்த அரசன், உடனே நல்ல ஜோதிடர்களை வரவழைத்து நான்கு புதல்வர்களுக்கும் ஜாதகம் தயாரிக்குமாறு கூறியதாக கம்பனில் உள்ள செய்தி, வால்மீகி இராமாயணத்தில் காணப் படவில்லை.

11. நான்கு புதல்வர்களுக்கும் வசிஷ்ட முனிவர் சௌள உபனேனம் முதலியவற்றைச் செய்வித்து சாஸ்திரங்களையும் கற்பிக்கிறார். இராமன் லஷ்மணனுடன் தினந்தோறும் மாலையில் முனிவர்களுடைய ஆசிரமங்களுக்குச் சென்று

அவர்களை வணங்கித் திரும்பி வரும்போது ஜனங்களை நலம் விசாரித்தல் ஆகியவை மூலத்தில் குறிப்பிடாதவைகள். கம்பனில் விசேஷமாய்க் காணப்படுகின்றன.

## 6. கையடைப் படலம்

தசரதன் தனது குமாரர்களாகிய இராம, இலஷ்மணர்களை விசுவாமித்திர முனிவரிடம் அடைக்கலமாக ஒப்புவித்த செய்தியைக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. அரக்கர்கள் இடையூறு செய்வதால் யாகம் ஈடேறாமல் வருந்தி, விசுவாமித்திரர் அரசனிடம் வந்து அவனை வாயாரப் புகழ்கிறார். அதனால் களிப்படைந்த அரசன் தங்களுக்கு வேண்டியது யாதென வினவ அரக்கர்களுடைய இடையூற்றைப் போக்கி வேள்வியைக் காக்க மூத்த குமார னாகிய இராமனைத் தன்னுடன் அனுப்ப வேண்டும் என்று முனிவன் கேட்க, அரசன் வருந்துகிறான். வசிஷ்டர் குறுக் கிட்டுப் புதல்வர்களை முனிவருடன் அனுப்பும்படி அரசனிடம் கூறுகிறார். அரச குமாரர்களுடன் விசுவாமித்திரர் புறப்பட்டு சரயூ நதிக்கரையை அடைந்து, அங்கு இரவு தங்கிவிட்டு மறுநாள் காலை அந் நதியைக் கடந்து சென்ற போது, அங்கு ஒரு சோலையைக் கண்ட இராமன் இது யாது என முனிவனைக் கேட்கிறான் என்று 24 பாடல்கள் கொண்ட இப்படலத்தில் சொல்லப்படுகிறது.

வால்மீகி இராமாயணம் பதினெட்டாவது ஸர்க்கம் முப்பேத்தேழாவது சுலோகம் முதல், இருபத்து மூன்றாவது ஸர்க்கம் எட்டாவது சுலோகம் வரை கூறியுள்ள கதையைத் தழுவி கம்பன் சுருக்கமாக இப்படலத்தை அமைத்துள்ளார்.

1. அரசன் ஆசனத்தில் அமர்ந்து பந்துக்கள், புரோகிதர்க ளுடன் தனது புதல்வர்களுக்குத் திருமணம் செய்யும் விஷ யத்தைப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது விசுவாமித்திர

முனிவர் அங்கு வந்ததாக மூலத்தில் காணப்படுகிறது. கம்பனில் அவ்வாறில்லை.

2. இராமனைத் தன்னுடன் அனுப்பும்படி விசுவாமித்திரர் கேட்கும்பொழுது அரசன் முதலில் வருந்தித் தானே நேரில் வந்து போர் புரிவதாகச் சொல்லி பிறகு அவ்வரக்கர்களின் பெயர், அவர்களுடைய பலம் முதலிய வற்றை வினவ, முனிவன் சுருக்கமாக இரவாணனுடைய பெருமையைக் கூறி அவனால் ஏவப்பட்ட சுபாகு, மாரீசர்கள் வேள்விக்கு இடையூறு செய்வதாகவும் கூறுகிறார் என்று மூலத்தில் காணப்படுகிறது. கம்பனில் பொதுவாக அரக்கர்கள் வேள்விக்கு இடையூறு செய்வதால் இராமனை அனுப்ப வேண்டும் என்று கேட்பதாக மாத்திரம் காணப்படுகிறது. இங்கு அரக்கர்களைப் பற்றிய அரசனுடைய கேள்வியோ அதற்கு விடையாக இராவணன், சுபாகு, மாரீசர்களுடைய சரித்திரமோ பேசப்படவில்லை.

3. முனிவர் அரசனைக் காணும் போது முனிவரை வெகுவாகப் புகழ்ந்து தங்களுக்கு ஆவன செய்ய சித்தமாகக் காத்திருப்பதாக அரசன் தானாகவே கூறுகிறார் வால்மீகியில். அரசனைப் பலவாறு முனிவன் துதித்த பிறகு தங்களுக்கு ஆக வேண்டியது யாது கூறவேண்டும் என்று மாத்திரம் சொல்லி நிறுத்துகிறார் கம்பன். மூலத்தில்போல் அளவு மீறி அரசன் வாக்களித்ததாக இங்கு காணப்படவில்லை.

4. சுபாகு மாரீசர்களுடைய பெயர்களைக் குறிப்பிட்டு அவர்களை வெல்லுவதற்காக இராமனை அனுப்ப வேண்டும் என்று முனிவன் அரசனிடம் கேட்பதாக மூலத்தில் சொல்லியிருக்கும் முறை.

அரக்கர்களுடைய பெயரைக் குறிப்பிடாமல் பொதுவாக அரக்கர்களை வெல்ல இராமனை அனுப்பும்படி முனிவர்

அரசனைக் கேட்டதாக மட்டும் கம்பனில் செய்தி காணப் படுகிறது.

5. அரசனிடம் சபையில் முனிவன் வந்து கேட்பதும் அதற்கு அரசன் வருந்திக் கூறும் பதிலும் வெகு விரிவாக நான்கு ஸர்க்கங்கள் மூலத்தில் விவரிக்கப்பட்டிருப்பதைக் கம்பன் இரண்டு பாடல்களிலேயே சுருக்கமாய்க் கூறி முடித்து விடுகிறான்.

6. வசிஷ்டர், விசுவாமித்திரருடைய பெருமையை விளக்கி தைரியமாகப் புலவர்களை அனுப்பும்படி அரச னிடம் கூறியதாக மூலக்கதை. புதல்வர்களை முனிவனுடன் அனுப்புவதால் அவர்களுக்கு நன்மை ஏற்படும் என்று முனிவன் அரசனிடம் கூறுவதோடு கம்பன் நிறுத்திக் கொள் கிறார். விசுவாமித்திரருடைய பெருமையை வசிஷ்டன் கூறியதாகக் காணப்படவில்லை.

7. விசுவாமித்திரர் அரச புதல்வர்களை அழைத்துக் கொண்டு சென்றபொழுது முதலில் விசுவாமித்திரர், பிறகு இராமன், அதன்பின் லக்ஷ்மணன் என்ற முறைப்படி சென்ற தாக மூலத்தில் கூறிய விவரம் கம்பனில் காணவில்லை. முனிவனைத் தொடர்ந்து இராம, இலஷ்மணர்கள் சென்றார்கள் என்று பொதுவாகவே கம்பன் பேசியிருக்கிறான்.

8. முனிவன் அரச குமாரர்களுடன் சரயூ நதிக்கரையை அடைந்து இரவு அங்கு தங்கி மறுநாள் காலை சரயூ கங்கா சங்கமத்தைக் கண்டு அங்குள்ள ஓர் ஆசிரமத்தைப் பார்த்து (கங்கையைத் தாண்டுவதற்கு முன்பே) இது யாருடைய ஆச்ரமம் என இராமன் வினவுகிறான். அதற்கு விடை யளிக்கும் வகையில் காமாசிரம சரித்திரத்தை முனிவன் பிறகு பேசுகிறான் என்பது மூலத்தின் கதைப்போக்கு. சரயூ நதிக்கரையில் இரவைக் கழித்து மறுநாள் காலை கங்கா

நதியைக் கடந்த பிறகு அங்கோர் சோலையைக் கண்டு இது யாதென இராமன் வினவ, அதற்குப் பதில் கூறும் வகையில் காமாசிரம சரித்திரத்தை அடுத்த படலத்தில் கூறுவதாக கதை அமைந்துள்ளது கம்பனில்.

இது முதல் அகலிகைப் படலம் கடைசி வரையாக மூலத்தைப் போல் கம்பனிலும் பல கிளைக்கதைகளைக் காணலாம். ஆனால் மூலக்கதையின் போக்கு கிளைக் கதைகள் சொல்லும் கிரமம், அவை சொல்லுமிடம், விசுவாமித்திர முனிவன் இராமனுடன் தனது ஆச்ரமத்தை நோக்கிச் செல்லும் பாதை, ஆகியவற்றில் உள்ள மாறுதல் களை வாசகர்கள் படிக்கும் போது நன்குணர்வார்கள். அவற்றை முறையே யான் எடுத்துக் கூறுகின்றேன்.

## 7. தாடகை வதைப் படலம்

தாடகையைக் கொன்று இராமன் விசுவாமித்திர முனிவனுடைய வேள்வியைக் காத்த செய்தியைக் கூறும் படலம் இது. பரமசிவன் மன்மதனை நெற்றிக் கண்ணால் சாம்பலாக்கிய இடம் இதுதான் என்று அச் சோலையின் கதையை இராமனுக்கு முனிவன் கூறி, இரவு அங்கு தங்கி மறுநாள் மூவரும் ஓர் பாலைவனத்தை அடைகிறார்கள். அங்கு அவ்வெப்பத்தினால் இராமனுக்கு வருத்தம் ஏற் படாமல் இருக்கும் பொருட்டு இராமனுக்கு பலா, அதிபலா என்ற இரு மந்திரங்களை முனிவன் உபதேசிக்கிறான். பாலைவனத்தின் வரலாற்றையும் அதை அழித்த தாடகை யின் சரித்திரத்தையும் சுருக்கமாகக் கூறி அவளை சம்ஹாரம் செய்யும்படி முனிவன் ஏவ, இராமனும் அவ்வாறே செய்து முடிக்கிறான் என்ற கதை இங்கு 76 பாக்களால் சொல்லப்படு கிறது. (23 ஸர்க்கம் 9 சுலோகம் முதல் 26-ஆம் ஸர்க்கம்

வரையிலுள்ள மூலத்தில் கூறிய கதையைத் தழுவி இப் படலம் வரையப்பட்டது.)

1. இங்கு முனிவன் கூறிய காமாசிரம சரித்திரம் கங்கா நதியைத் தாண்டுவதற்கு முன்னால் நிகழ்ந்ததாக மூலத்திலும் கங்கா நதி கடந்த பிறகு கூறியதாகக் கம்பனிலும் வெவ்வேறாகக் காணப்படுகின்றன.

2. அயோத்தியிலிருந்து புறப்பட்டு ஒன்றரை யோஜனம் கடந்து சென்று சரயூ நதிக்கரையை அடைந்து அங்கு இராம, லக்ஷ்மணர்களுக்கு எல்லாவித நன்மையும் ஏற்படுவதற்காக புறப்பட்ட முதல் தினம் மாலை பலா, அதிபலா என்ற மந்திரங்களை விசுவாமித்திரர் உபதேசித்ததாக வால்மீகம் கூறுகிறது. சரயூ நதியைக் கடந்து காமாசிரம விருத்தாந் தத்தைக் கூறி மறுநாள் தாடகாவனத்தைக் கிட்டி அங்கு அம் மந்திரங்களை முனிவன் அவ் வெப்பத்தினால் இராமனுக்குத் துயரம் ஏற்படாமல் இருக்க உபதேசித்ததாக கம்பன் கூறு கிறான். அதாவது முதல் நாள் இரவு சரயூ நதிக்கரை, இரண்டாம் நாள் இரவு காமாசிரமம், மூன்றாம் நாள், அதாவது அவர்கள் அயோத்தியை விட்டுப் புறப்பட்ட மூன்றாம் நாள் காலை முனிவன் மந்திரோபதேசம் செய்ததாக கம்பனால் புலனாகிறது.

3. தாடகாவனத்தின் பழைய வரலாற்றை முனிவன் கூறுமிடத்தில் இந்திரன் தமது சாப விமோசனத்தினால் களிப்படைந்து இவ்விடத்துக்கு மலதம், கருசம் எனப் பெயரிட்டதாகவும் அதனால் இக்காடு மிகச் செழிப்புடன் இருந்து பிறகு தாடகையினால் பாலைவனம் ஆக்கப் பெற்ற வனத்திற்களித்த வரம் ஆகிய சரித்திரத்தைக் குறிப்பிடாமல் செழிப்பான இவ்வனத்தைத் தாடகை இவ்வாறு அழித்து விட்டாள் என்று மாத்திரம் இங்கு கம்பன் கூறுகிறான்.

4. தாடகையினுடைய சரித்திரத்திலும் இவ்விரு நூல்களுக்கு மிடையே வேறுபாடுகள் பல உள்ளன. மூலத்தில் இருப தாவது ஸர்க்கத்தில் 25, 26 சுலோகங்கள் 25-ஆவது ஸர்க்கம் 8, 9 சுலோகங்கள் ஆகியவற்றைப் பார்க்கும் போது தாடகைக்கு சுந்தனிடம் மாரீசன் ஒருவனே புதல்வனாகத் தோன்றினான் என்றும், சுபாகு என்பவன் உபசுந்தனுடைய புதல்வன் என்றும் நமக்குத் தெரிய வருகிறது. கம்பன் தனது நூலில் இவ்விருவர்களையும் தாடகையின் புதல்வர்கள் என்று தெளிவாகக் கூறியிருக்கிறான்.

5. அகஸ்திய முனிவரைச் சுந்தன் என்பவன் துன்புறுத்த முனிவரால் அவன் கொல்லப்பட்டான். பிறகு தாடகை தனது இரு புதல்வர்களுடன் சென்று அகத்திய முனிவரைத் துன் புறுத்த அவரால் இம்மூவரும் இராட்சசர்களாகச் சபிக்கப்பட் டார்கள் என்று தாடகையின் சாப வரலாறு கம்பனில் விரி வாகக் காணப்படுகிறது. மூலத்தில் சுந்தன் அகஸ்தியரால் கொல்லப்பட்ட கதை காணப்படவில்லை. அகஸ்திய முனிவர், தாடகை, மாரீசன் இவ்விருவர்களை மாத்திரம் இராட்சசர் களாக ஆகும்படி சபித்ததாக மாத்திரம் கூறப்படுகிறது.

6. சுபாகு, மாரீசர்கள் இராவணனுடைய மாமனாராகிய சுமாலி என்பவனை அடைந்து சிநேகம் கொண்டு இராவண னால் தனது மாமன்மார்களென இவர்கள் கொண்டாடப் பட்டதாகக் கம்பனில் காணப்படுகிறது. மூலத்தில் இச் செய்தியைக் காணோம்.

7. தாடகையை இராமன் போர் செய்து கொன்றதாகக் கம்பன் பேசுகிறான். இலக்ஷ்மணனைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. மூலத்தில் இராமன் அரக்கியின் இருகரங் களை அறுத்ததாகவும், இலக்குமணன் காது, மூக்கு இவற்றை அறுத்ததாகவும் கூறுவதால் இருவரும் அரக்கியுடன் போர் செய்தார்கள் என்று புலனாகிறது.

8. பெண் என்று அஞ்சி தாடகையை இராமன் கொல்லாமல் இருப்பதை உணர்ந்து முனிவன், ''பெண் என்று இரங்க வேண்டாம், இவளை நீ கொல்ல வேண்டும்'' என்று சொன்னதாகக் கம்பன் கூறுகிறான். மூலத்தில் தாடகையினுடைய சரித்திரத்தைக் கூறி பெண் என்று பார்க்காமல் அவளைக் கொல்ல வேண்டும் என்று தானாகவே முனிவன் இராமனுக்குக் கூறுகிறான்.

9. இராமனுடைய நாண் ஓசையைக் கேட்டுக் குகையிலிருந்து தாடகை வந்து இராமன் முன் தோன்றினாள் என மூலக்கதை காட்டுகிறது. தாடகையிருக்குமிடம் யாதென இராமன் முனிவனை வினவ, சமீபத்தில் உள்ள மலையைக் காட்டி அதுதான் அவளுடைய இருப்பிடம் என்று முனிவன் சொல்லி முடிப்பதற்குள் அரக்கி வந்தாளெனக் கம்பன் கூறுகிறான்.

10. மாலை வேளையில் அரக்கர்களுக்கு பலம் அதிகம் ஆகி விடும். எனவே, மாலை வருவதற்குள்ளாக அரக்கியை வெல்லும்படி இராமனுக்கு முனிவன் உபாயம் கூறினான் என்று மூலத்தில் உள்ள இப்பகுதி கம்பனில் காணவில்லை.

11. அரக்கியை வென்ற பிறகு திவ்யாஸ்திரங்களை இராமனுக்கு அளிக்குமாறு தேவர்கள் முனிவரிடம் பொதுவாகக் கூறினார்கள் என்று கம்பன் கூறுகிறான். பிரசாசுவர் என்ற முனிவருடைய புதல்வர்களாகத் தோன்றிய அஸ்திரங்களை இராமனுக்கு அளிக்கும்படி தேவர்கள் சொன்னதாக ஒரு விசேஷம் மூலத்தில் காணப்படுகிறது.

12. இராமனுக்கு அஸ்திர மந்திரங்களை உபதேசம் செய்வதற்கு முன், தடாகவனத்தில் இம்மூவரும் ஓர் இரவைக் கழித்தார்கள் என்று மூலத்தினால் தெரிய வருகிறது. கம்பனில் இரவு அங்கு கழிக்காமல் தொடர்ந்து மேலும் சென்றதாகவே கூறப்படுகிறது.

## 8. வேள்விப் படலம்

அரக்கர்களைக் கொன்று விசுவாமித்திரருடைய வேள்வியை இராமன் காத்த செய்தியைக் கூறும் படலம் இது. 59 பாடல்கள் இதில் இடம் பெற்றிருக்கின்றன. விசுவாமித்திர முனிவன் இராமனுக்கு பல அஸ்திர மந்திரங்களை உபதேசம் செய்து, மூவரும் இரண்டு காத தூரம் நடந்து செல்ல, அங்கு ஓர் ஒலியைக் கேட்டு இது யாதென இராமன் வினவ, சரயூ நதி கோமதி நதியுடன் கலக்குமிடத்திலிருந்து உண்டான ஒலி இதென விசுவாமித்திரர் பதில் கூற, மூவரும் சிறிது தூரம் சென்று கௌசிகை நதிக்கரையை அடைகிறார்கள். அங்கு முனிவன் தனது வரலாற்றைச் சுருக்கமாய்க் கூறி தனது சகோதரி கௌசிகை, நதி வடிவத்தில் காட்சி தருகிறாள் எனக் கூறி முடிக்கிறான். அங்கிருக்கும் சோலையின் வரலாற்றை இராமன் வினவ, வாமனாவதார சரித்திரத்தைக் கூறி அது இங்குதான் நடந்ததென்றும் மஹாவிஷ்ணு இங்கு தவம் செய்து சித்தி பெற்றதால் இதற்கு சித்தாஸ்ரமம் எனப் பெயர் வந்ததாகவும் முனிவன் கூறி அங்குள்ள தனது ஆச்ரமத்திற்கு இராம, இலக்ஷ்மணர்களை அழைத்துச் சென்று அவர் களுக்குக் காவல் புரிய ஏவி வேள்வி செய்கிறான். இராமன் அரக்கர்களைக் கொன்று முனிவனின் யாகத்தை இடையூ றின்றி நடத்தி வைக்கிறான். மிதிலா நகரில் ஜனகன் செய்யும் வேள்வியைக் காண்பதற்காக இராம இலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு முனிவன் புறப்படுகிறான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

ஆதி காவியம் இருபத்தேழாவது ஸர்க்கம் முதல் முப்பத்தொன்றாவது ஸர்க்கம் வரை உள்ள கதையைத் தழுவிச் சுருக்கமாக இப்படலம் அமைக்கப்பட்டுள்ளது.

1. பல அஸ்திரங்களின் பெயர்களைக் கூறி அம் மந்திரங் களை முனிவன் இராமனுக்கு உபதேசிக்கிறான். அவை

இராமன் முன் காட்சியளிக்கின்றன். தனக்குத் தேவையான சமயத்தில் வந்து உதவி புரியும்படி சொல்லி அவற்றை இராமன் அனுப்பி விடுகிறான். பிறகு சம்ஹார அஸ்திரங் களைத் தனக்கு உபதேசிக்குமாறு இராமன் முனிவனைக் கேட்க, முனிவனும் அவ்வாறே உபதேசிக்கிறான் என்ற கதை ஆதி காவியத்தில் இரண்டு ஸர்க்கங்களால் விரிவாக விவரிக்கப்பட்டிருக்கிறது. இதைக் கம்பன் இரண்டே பாட்டு களால் சுருக்கிக் கூறுவதோடு சம்ஹாராஸ்திரங்களை இராமன் உபதேசிக்கும் படி கேட்டான் என்ற செய்தியையும் குறிப்பிடவில்லை தனது நூலில்.

2. இராமன் விசுவாமித்திரருடைய அனுமதியைப் பெற்று, தான் பெற்ற அஸ்திர வித்தைகளை இலக்ஷ்மணனுக்கு உபதேசித்ததாக மூலத்தில் கூறியிருக்கும் பகுதி கம்பனில் காணப்படவில்லை.

3. மூவரும் இரண்டு காத தூரம் சென்று, கௌசிகை நதியைக் கிட்டி இராமன் ஓர் ஒலியைக் கேட்டு, இது யாதென வினவ, சரயூ கோமதி நதிகளின் சங்கமத்தில் உண்டாகும் குடில் இது என விசுவாமித்திரர் விடையளித்த தாகக் கம்பனின் கதைப் போக்கு. இக்கதை மூலத்தில் தாடகா வதைக்கு முன்னால், கங்கையை மூவரும் தாண்டும் பொழுது ஆற்றின் நடுவில் இராமன் கேட்ட கேள்வியும் அதற்கு முனிவன் உரைத்த பதிலும் நிகழ்ந்ததாகக் காணப்படு கிறது. தவிர சரயூநதி கங்காநதியுடன் சேருவதனால் உண் டாகும் ஒலி இதென முனிவன் கூறிய பதிலில் மூலத்தில் வேறுபாடு காணப்படுகிறது.

4. கௌசிகை நதிக்கரையில் முனிவன் தனது வரலாற்றை யும் அந்நதியினுடைய வரலாற்றையும் தனது ஆச்ரமத்தை அடைவதற்கு முன்னால் சுருக்கமாக இராமனுக்குக் கூறிய தாகக் கம்பன் கூறியிருக்கிறான். தனது நூலில் விசுவாமித்திர

முனிவன் தனது ஆச்ரமத்தை அடைந்து தனது வேள்வியை முடித்து இராம, இலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு மிதிலா நகருக்குப் போகும் வழியில் சோணா நதிக்கரையை அடைந்து, அங்கு இச்சோலை யாதென இராமன் கேட்ட கேள்விக்குப் பதில் கூறும் வகையில் கௌசிகை நதியின் வரலாற்றைக் கூறுவதாக ஆதிகாவியத்தில் காணப்படுகிறது.

5. வாமனாவதார சரித்திரத்திலும் இரு நூல்களுக்கு மிடையே பல மாறுதல்கள் காணப்படுகின்றன. காசியப முனிவர் திதி என்ற தனது மனைவியுடன் பிள்ளைப் பேறு பெற விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்ய, அதனால் சந்தோஷம் அடைந்த பகவான் அவர்களுக்கு புதல்வராகத் தோன்றுகிறேன் என்று வரமளித்தார் என்றும், இந்த இடத்தில் மஹாவிஷ்ணு தவம் செய்து சித்தி பெற்றதனால் இந்த இடம் ''சித்தாஸ்ரமம்'' என்ற பெயருடன் விளங்க வேண்டும் என்று காசியப முனிவர் கூறியதாகவும் ஆதிகாவி யத்தில் கூறியுள்ளவை கம்பனில் காணப்படவில்லை. வாமனாவதார சரித்திரத்தைச் சொல்லுவதோடு மாத்திரம் நிறுத்திக் கொள்கிறான் கம்பன். அதற்கு மூல காரணமாகிய இக் காசியப முனிவருடைய சரித்திரம் பேசப்படவில்லை.

6. பலிச்சக்கரவர்த்தி தனது வேள்வியில் எல்லாவற்றை யும் வருகிறவர்களுக்குத் தானமாக அளிக்கிறான். எனவே தாங்கள் அவனிடம் சென்று கேட்டு எங்களுடைய காரி யத்தை நிறைவேற்ற வேண்டும் என்று தேவர்கள் விஷ்ணு விடம் உபாயம் கூற பரமனும் அவ்வாறே செய்து முடிப்ப தாக இங்கு மூலக்கதைப் போக்கு. இச்சம்பவம் கம்பனில் காணப்படவில்லை. வாமனனுக்கும், பலிச்சக்கரவர்த்திக்கும் நடந்த சம்வாதம் கம்பனில் விரிவாகப் பேசப்பட்டிருக்கிறது. வால்மீகி முனிவன் இதை ஒரு சுலோகத்தில் அடக்கி விடுகிறார்.

7. பலிச்சக்கரவர்த்தி வாமனனுக்கு உலகம் முழுவதையும் தானமாக அளிக்கும் சமயம், அசுர குருவாகிய சுக்கிராச்சாரியார் அங்கு வந்து இது ஈசுவர மாயை, இதற்கு ஏமாந்து விடாதே; கபட வேடம் பூண்டு விஷ்ணுவே வந்திருக்கிறார் எனக் கூறி, தானம் செய்ய வேண்டாம் என்று பலியைத் தடுக்க, அதைக் கேளாதவராய் பலிச் சக்கரவர்த்தி ஏழு பாடல்களில் நீ சொல்வது தவறு என சுக்கிராச்சாரியாருக்கு ஞானோபதேசம் செய்கிறார் என்று வால்மீகத்தில் கூறாத இப்புதிய அம்சம் கம்பனில் அதிகமாய் காணப்படுகின்றது. (ஸ்ரீ பாகவதத்தைத் தழுவி இவ்வம்சம் இங்கு புதியதாய்ச் சேர்க்கப்பட்டுள்ளது).

8. சித்தாஸ்ரமத்தை அடைந்த பிறகு விசுவாமித்திர முனிவர் மௌன விரதம் பூண்டு ஆசனத்தில் வீற்றிருக்கிறார். ராட்சசர்கள் எப்பொழுது வேள்வியை அழிப்பதற்கு வருவார்கள் என்று இராமன் முனியைப் பார்த்து வினவ, பதில் உரைக்கவில்லை, முனிவன். சமீபத்தில் இருந்த முனிவர்கள் ''விசுவாமித்திரர் மௌன விரதம் பூண்டிருக்கிறார். யாகம் ஆறு நாட்கள் நடக்கும் அதுவரை நீ ஜாக்கிரதையாகக் காக்க வேண்டும்'' என இராமனிடம் கூறுகிறார்கள். வேள்வியைக் கண்ணுங் கருத்துமாய் இராமன் காத்து வரும் போது, ஆறாவது தினத்தன்று பல அரக்கர்களுடன், சுபாகு, மாரீசர்கள் அங்கு வந்தார்கள் என்பதே ஆதி காவ்யத்தின் கதைப் போக்கு. அரக்கர்கள் எப்பொழுது வருவார்கள் என இராமன் கேட்ட கேள்விக்கு விசுவாமித்திர முனிவரோ, மற்றங்குள்ள முனிவர்களோ பதில் கூறாமல் இருக்க, இராமன் ஆச்ரமத்தை விட்டு வெளியே வந்து ஆகாயத்தைப் பார்க்கிறான். அப்போது அரக்கர்கள் நெருப்பையும், பாணங்களையும், கற்களையும், இரத்தத்தையும் பொழிந்து கொண்டிருக்கிறார்கள் என்பது கம்பனின் கதைப்போக்கு.

விசுவாமித்திர முனிவன் மௌன விரதம் பூண்ட அடுத்த கணமே, அதாவது, வேள்வி ஆரம்பித்த முதல் தினத்தன்றே அரக்கர்கள் போர் செய்ய வந்து விட்டார்கள் என்பது கம்ப இராமாயணத்தால் தெரிய வருகிறது. வேள்வி ஆரம்பித்த ஐந்து தினங்கள் வரை ஒன்றும் நடக்கவில்லை. கடைசி நாளாகிய ஆறாவது தினத்தன்று அரக்கர்கள் போர் செய்ய வந்தார்கள் என்று ஆதி காவியத்தால் தெரிய வருகிறது.

9. அப்பொழுது அரக்கர்களைக் கண்டு பயந்து அங்குள்ள முனிவர்கள் இராமனைச் சரண் அடைகிறார்கள். பிறகு இராமன் அரக்கர்களை அழிக்கிறான் என்ற முனிவர்கள் இராமனிடம் செய்த சரணாகதிச் செய்தி மூலத்தில் மாத்திரமே காணப்படுகிறது; கம்பனில் இல்லை.

10. அரக்கர்கள் இரத்தத்தை நெருப்பில் பொழிய, அதனால் யாக வேதியிலுள்ள நெருப்பு அதிகமாக ஒளிவிட்டு எரிய ஆரம்பித்தது என்று ஆதி காவியத்தில் ஹோமாக் கினியில் நேரிடையாக இரத்தத்தைப் பொழிந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அரக்கர்கள் இரத்தத்தை ஹோமாக்கினியில் கொட்டி எங்கு அசுத்தம் செய்து விடுவார்களோ என்ற முன்னெச்சரிக்கையுடன் அவ்வாறு நிகழாமல் இருப்பதற்காக முன் கூட்டியே இராமன் தனது பாணங்களால் ஓர் பந்தலையே யாக வேதிகைக்கு மேல்பாகத்தில் அமைத்து விடுகிறான் என்று கம்பன் வெகு சாதுரியமாக இங்கு கதையை மாற்றியிருக்கிறான்.

11. யாகம் முடிந்த பிறகு இராமனைப் பார்த்து விசுவாமித்திர முனிவன் ''நீ குருவினுடைய உத்தரவை நிறைவேற்றிவிட்டாய். எனது காரியம் உன்னால் இனிது நிறைவேறியது. இந்த ஆச்ரமத்திற்கு சித்தாஸ்ரமம் என்ற பெயரை உண்மையாகச் செய்துவிட்டாய்'' என ஒரு மனிதன் மற்றொருவனுக்குச் செய்யும் உதவிபோல் அதை எண்ணி,

பரமனை மனித வேஷத்தில் வைத்துப் பேசுகிறார் முனிவர். 'உலகம் யாவையும் விழுங்கிய உனக்கு, என்னுடைய யாகத்தைப் பூர்த்தி செய்வது என்பது ஒரு பிரமாத காரியம் அல்ல. இது உனக்கு ஒரு வியாஜ மாத்திரமே, என்று விசுவாமித்திர முனிவர் இராமனைக் கடவுளாக எண்ணி அனுபவிக்கிறார் கம்பனில்.

## 9. அகலிகைப் படலம்

விசுவாமித்திரர் இராம, இலக்ஷ்மணர்களுடன் நடந்து சென்று சோணா நதிக்கரையை அடைந்து அங்குள்ள ஓர் சோலையில் இரவைக் கழிக்க, அச்சோலையின் கதை யாதென இராமன் வினவ, முனிவன் சமுத்திர மதன விருத்தாந்தத்தையும், காசியப முனிவருடைய மனைவி திதி அங்கு தவம் கிடந்த செய்தியையும் கூறி, பிறகு அங்கு ஓர் பொய்கையைக் காட்டி இதுதான் முருகக் கடவுள் வளர்ந்த இடம் என இராமனுக்குக் கூறி, அப்படியே கங்கா நதிக் கரையை அடைந்து, கங்கையின் வரலாற்றை இராமனுக்கு எடுத்துரைத்து, பிறகு கங்கையைக் கடந்து விசால நகரத்தை அடைந்து அங்குள்ள அரசனால் உபசரிக்கப்பட்டு மிதிலா நகரத்தின் எல்லையை அடைகிறான் முனிவன். அங்கு இராமனால் அகலிகை சாபம் நீங்கி சுய உருவம் பெறு கிறாள். இராமன் அகலிகையை கௌதம முனிவரிடம் ஒப்படைத்து விட்டு, விசுவாமித்திரருடன் அங்கிருந்து புறப்பட்டு அழகிய மிதிலா நகரைப் பார்க்கிறான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம். எண்பத்தாறு பாடல்களைக் கொண்டது இப்படலம். ஆதிகாவியத்தில் முப்பத்திரண் டாவது ஸர்க்கம் முதல் நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் வரையாக விரிவாகக் கூறியுள்ள கதையைத் தழுவி இப் படலம் கம்பனால் அமைக்கப்பட்டுள்ளது.

1. கங்கையைக் கடந்து விசால நகரத்தை அடைவதற்கு முன்னால் இரவில் சோணா நதிக்கரையில் இராமனுக்கு முனிவன் கதை சொல்லும் வகையில் சமுத்திர மதன விருத்தாந்தத்தையும், திதி தவம் செய்த கதை ஆகிய வற்றையும் கூறியதாகக் கம்பனின் கதைப் போக்கு உள்ளது. கங்கா நதியைக் கடந்து விசால நகரத்தை அடைந்தபோது அந்நகரத்தைப் பற்றிய வரலாற்றை இராமன் கேட்டபோது, அதற்குப் பதில் உரைக்கும் வகையில் சமுத்திர மதன விருத்தாந்தத்தையும், திதி தவம் செய்த கதையையும், கூறி, திதியினுடைய தவத்தை இந்திரன் கூட இருந்து அழித்தது இந்த இடத்தில்தான் என்று முனிவன் கூறியதாக உள்ளது ஆதி காவியத்தின் கதைப் போக்கு.

2. துர்வாச முனிவருடைய சாபத்தினால் இந்திரனுடைய செல்வங்கள் எல்லாம் சமுத்திரத்தில் சென்று மறைய அதைத் திரும்பப் பெறுவதற்காக தேவர்கள் கடலைக் கடைந்தார்கள் என்று கம்பனில் கதை ஒரு மாதிரி அமைந்திருக்கிறது. தேவர் களும், அசுரர்களும் அமரர்களாக ஆவதற்காக அமிர்தத்தை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒன்றுகூடி கடலைக் கடைந்தார்கள் என்று, இக் கதையை வால்மீகி முனிவன் வேறு விதமாகக் கூறுகிறான். கம்பன் இங்கு ஸ்ரீ பாகவதத்தைத் தழுவி மாற்றினான்.

3. இச் சம்பவம் கிருதயுகத்தில் நடந்ததாக ஆதிகாவி யத்தில் தெளிவாகப் பேசப்பட்டிருக்கிறது; கம்பனில் காண வில்லை.

4. பிறகு முனிவன் கங்கா நதிக்கரையை அடைந்து இராமனுடைய கேள்விக்குப் பதிலாக முருகக்கடவுள் தோன்றிய வரலாற்றை வெகு விரிவாக எடுத்துரைத்ததாக ஆதிகாவியம் பேசுகிறது. இங்கு சோணா நதிக்கரையில்

சமுத்திர மதன விருத்தாந்தத்தை இராமனுக்குக் கூறி பிறகு அதாவது கங்கைக் கரையை அடைவதற்கு முன்னால், இதுதான் முருகக் கடவுள் வளர்ந்த சரவணப்பொய்கை என்று முனிவன் இராமனுக்குக் காட்டுகிறான் என்பதோடு கம்பன் நிறுத்திக் கொள்கிறான். முருகக் கடவுள் பற்றி கம்பனில் பேசப்படவில்லை.

5. மூவரும் விசால நகரத்தை அடைந்த போது முனிவன் அந்நகரத்தின் வரலாற்றையும் அதை ஆண்டு வந்த அரசனுடைய பரம்பரையையும் கூறுகிறான் இராமனுக்கு. அரசன் இம்மூவரையும் நன்கு உபசரித்து இராம, இலக்ஷ்மணர்களைப் பார்த்து இவர்கள் யாரென முனிவனைக் கேட்க, சித்தாஸ்ரமத்தில் இராமன் போர் செய்து அரக்கர் களை வென்ற செய்தியை முனிவன் அரசனுக்குக் கூறினான் என்பது மூலத்தின் கதைப்போக்கு. இவ்விடத்தில் கம்பன் இவை எல்லாவற்றையும் குறிப்பிடாமல் அரசன் இவர்களை நன்கு உபசரித்ததாக மாத்திரம் கூறிக் கதையை முடித்துக் கொள்கிறான்.

6. விசால நகரத்தில் இம்மூவரும் இரவைக் கழித்தார்கள் என்று வால்மீகி சொல்லியிருப்பது கம்பனில் காணவில்லை.

7. அகலிகை சாப விருத்தாந்தத்திலும் இரண்டு நூல்களுக்குமிடையே ஆங்காங்கு பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. மிதிலா நகரை அடுத்த ஓர் பொட்டல் காட்டில் உயர்ந்த இடத்தில் ஓர் கல்லை இம்மூவரும் கண்ட தாகக் கம்பன் கூறுகிறான். மிதிலா நகரின் அடுத்தாற்போல் உள்ள சோலையில் இம்மூவரும் ஒரு ஜன சஞ்சாரமற்ற ஆச்ரமத்தைக் கண்டதாக மூலம் பேசுகிறது.

8. ஒரு சோலையில் ஜன சஞ்சாரமற்ற ஆச்ரமத்தைக் கண்ட இராமன் அதற்குக் காரணம் யாதென முனிவனை

வினவ, கௌதம முனிவனால் அகலிகை சபிக்கப்பட்டதை இராமனுக்குக் கூறி இராமனை அவ்வாச்ரமத்திற்கு அழைத்துச் சென்று அவளை சாபத்திலிருந்து விடுவிக்குமாறு முனிவன் இராமனிடம் கூறியதாக மூலத்தில் உள்ளது.

9. முனிவனுடன் இராமன் அவ்வழியே நடந்து செல்ல இராமனுடைய பாத தூளி கல்லில்பட்டு அகலிகை சாபம் நீங்கி சுய உருவம் பெறுகிறாள். இவள்தான் அகலிகை என்று, முனிவன் இராமனுக்குக் கூற இவளுக்கு இக்கதி ஏற்படுவதற்குக் காரணம் யாதென இராமன் வினவ, பிறகு முனிவனின் சாபம் நிகழ்ந்த வரலாற்றைக் கூறுகிறான் இங்கு என்பது கம்பனின் கதைப்போக்கு.

10. தந்திரமாக வழிவகுத்து இந்திரன் கௌதம முனிவரை ஆச்ரமத்திலிருந்து வெளியேற்றிவிட்டுதான் அங்கு சென்றதாக கம்பனின் கற்பனை. தக்க சமயம் பார்த்து இந்திரன் ஆச்ரமத்தை அடைந்தான் என்பது வால்மீகியின் சொல்.

11. இந்திரனுடைய தீய செயலைக் கண்டு கோபமுற்ற கௌதம முனிவன், அவனைப் பார்த்து நீ விருஷணம் அற்றவனாக ஆகக் கடவாய் என்று சபித்த உடன் அப்படியே அவை அறுபட்டுக் கீழே விழுந்ததாக ஆதிகாவியம் பேசுகிறது. ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி உனக்கு உண்டாகக் கடவது என்று இந்திரனை கௌதமன் சபித்ததாகக் கம்பன் கற்பனை செய்கிறான்.

12. ''காற்றை ஆகாரமாக உண்டு, மண்ணில் படுத்து ஒருவருடைய கண்ணுக்கும் அகப்படாமல் ஆகக் கடவாய். இராமனுடைய பாத தூளியினால் உனது சாபம் தொலையும். இராமனுக்கு உபசாரம் செய்து நீ சுய ரூபத்தை அடையப்

போகிறாய்'' என்று கௌதமன் அகலிகையைச் சபித்து அவள் கேளாமல் தானாகவே சாபவிமோசன மார்க்கத்தையும் அவன் கூறியதாக ஆதிகாவியத்தில் உள்ள கதைப்போக்கு. நீயும் கல்லாகக் கடவாய் என்று முனிவன் சபித்தவுடன் அவள் அங்கு அவ்வாறே கருங்கல்லாய் கீழே விழுகிறாள். சாப விமோசனத்திற்கு வழி யாதெனக் கணவனை அவள் வேண்ட, பிறகு முனிவன் அவளுக்கு வழி கூறுகிறான் என்று இங்கு கம்பனில் காணப்படும் கதைப்போக்கு. தன் மனைவியை சபித்துவிட்டுத் தான் தவம் செய்யக் கௌதம முனிவன் இமயமலைக்குச் சென்று விடுகிறான் என்று, மூலத்தில் கூறியுள்ள விசேஷம் கம்பனில் காணவில்லை. சாபம் நீங்கிய அகலிகையை ஏற்றுக் கொள்ளுமாறு விசுவாமித்திர முனிவர், கௌதம முனிவனை வேண்டிக் கொண்டதாக கம்பன் பேசிய விஷயம் மூலத்தில் இல்லை.

*13.* தன்னிடம் வந்தவன் தனது கணவரல்லன் என்பதை அகலிகை அறிந்து இருந்தும் ''தேவர் ரா ஜ குதூஹலாத்'' (இந்திரனே நேரில் வந்து விட்டான் என்ற சந்தோஷத் தினால்) அவனுக்கு இசைந்தாள் என்று ஆதி காவியத்தில் கூறிய சம்பவம் கம்பனில் குறிப்பிடப்படவில்லை.

*14.* தேவர்கள் ஒன்றுகூடி இந்திரனுக்கு ஏற்பட்ட இக் கதியைப் போக்க வேண்டும் என்று பித்ரு தேவதைகளிடம் முறையிட, பித்ரு தேவதைகள் ஆட்டினுடைய விருஷணத்தை இந்திரனுக்கு அளித்ததாக மூலக்கதை. பிரும்ம தேவனுடன் தேவர்கள் கௌதம முனிவனை அடைந்து இந்திரனின் சாபத்தைப் போக்க வேண்டும் என்று சரணடைந்தார்கள். அதற்கிசைந்த கௌதம முனிவன், இந்திரனுடைய உடம்பில் உள்ள ஆயிரம் பெண் குறிகளை ஆயிரம் கண்களாக மாற்றிவிடுகிறான் என்பது இங்கு கம்பனின் கதைப்போக்கு.

*15.* அகலிகைக்கு நல்ல உபதேசம் செய்து கணவன் சொற்படி நடந்து கொள்ளுமாறு இராமன் கூறியதாகக் கம்பன் கூறிய விஷயம் வால்மீகத்தில் காணப்படவில்லை. இந்திரன் கௌதம முனிவ ஆச்ரமத்தில் அகலிகையுடன் இருக்கும்போது திடீரென கௌதம முனிவன் அங்கு வர, இந்திரன் பூனை வடிவம் கொண்டு அங்கிருந்து தப்பித்துக் கொண்டதாகக் கம்பன் கூறிய விஷயம் மூலத்தில் காண வில்லை.

*16.* சோணா நதிக்கரையில் கௌசிகை நதியின் சரித்திரத்தையும் கங்கா நதிக்கரையில் கங்கை, முருகன், இவர்களுடைய வரலாற்றையும் விசால நகரத்தை அடைந்து அங்கு சமுத்திர மதன விருத்தாந்தத்தையும் முனிவர் கூறினார், என்று ஆதி காவியத்திலிருந்து தெளிவாகிறது. சோணா நதிக்கரையில் உள்ள சோலையில் தங்கியிருக்கும் போது சமுத்திர மதன விருத்தாந்தத்தையும் கங்கா நதிக்கரையில் அதன் வரலாற்றையும் முனிவன் கூறியதாகக் கம்பனால் வெளியாகிறது.

## 10. மிதிலைக் காட்சிப் படலம்

**வி**சுவாமித்திர முனிவன் இராம, இலக்ஷ்மணர்களுடன் மிதிலா நகரத்தை அடைந்து அந்நகரத்தின் அழகைக் கண்டு களிக்கும் செய்தி இதில் கூறப்படுகிறது. இவர்கள் மிதிலா நகரத்தை அடையும் வரை அநேகமாக ஆதிகாவியத்தில் உள்ள கதையை அதிகம் மாற்றாமலும் புதிய கற்பனைகளை அதிகம் புகுத்தாமலும் அங்குள்ள கிளைக்கதைகளைக் கூடிய வரை விடாமலும், சுருக்கமாகக் கம்பன் சொல்லி ஆதி காவியத்தை தழுவியே தனது நூலை எழுதி வந்திருக்கிறான். ஏதோ சில இடங்களில் அதாவது கிளைக்கதைகளை முன்னும் பின்னுமாக மாற்றிச் சொல்வது, ஒரு கிளைக்

கதையை ஆதி காவியத்தில் ஒருவர் சொல்வதாக இருப்பதைத் தனது நூலில் மற்றொருவர் சொன்னதாகக் குறிப்பிடுவது போன்ற லேசாக, மூலக் கதைக்கு குந்தகம் ஏற்படாத வகையில் சிற்சில மாறுதல்களை மாத்திரம் இதுவரை உள்ள பாகத்தில் ஆங்காங்கு காணலாம். முதலில் ஆற்றுப்படலம், நாட்டுப்படலம் இரண்டும் கம்பனின் புதிய படைப்பு. அதனால் மூலக்கதைப் போக்கில் விசேஷ மாறுதல் ஏற்பட அவகாசமில்லை. ஆதி காவியம், பால காண்டம் எழுபத்தேழு ஸர்க்கங்களைக் கொண்டது. கம்பன் இயற்றிய பாலகாண்டம் (1396) ஆயிரத்து முன்னூற்று தொன்னூற்றி ஆறு பாடல்களைக் கொண்டது. ஆதிகாவியம் ஐம்பது ஸர்க்கங்கள் வரையாகக் கூறிய கதையின் பெரும் பகுதியை கம்பன் ஐந்நூற்று அறுபத்திரண்டு பாட்டுக்களால் அகலிகைப் படலம் கடைசி பாகத்தோடு சுருக்கி சொல்லி இருக்கிறான். ஆதிகாவியத்தில் எஞ்சியுள்ள இருபத்தேழு ஸர்க்கங்களுடைய குறைந்த கதாபாகத்தை ஐந்நூற்று முப்பத்தைந்து பாடல்கள் கொண்ட பெரும் பகுதியால் (அதாவது மிதிலைக் காட்சிப் படலம் முதல் கடைசி வரையாக உள்ள பதிமூன்று படலங்களால்) விவரித்துக் கூறுகிறான். பால இராமனுடைய கதையைச் சொல்லி அனுபவிப்பதில் வால்மீகி முனிவனுக்கு ஆர்வம் அதிகம் என்றும், சீக்கிரமாக இராமனுக்கு மணம் செய்து வைப்பதில் முனிவன் அக்கறை கொண்டுள்ளான் என்றும் இதனால் தெரிய வருகிறது. பருவ இராமனை காதல் கோலத்தில் பற்பலவாறு கற்பனை செய்து அவனை அனுபவிப்பதோடு சிறிது விளம்பமாக இராமனுடைய கல்யாணத்தை முடிப்பதில் ஆர்வமுள்ளவன் கம்பன் என்று சொல்லலாம். அநேகமாக இப்படலம் முதல் (இரண்டொரு படலங்களைத் தவிர) பால காண்டம் முடியும் வரை உள்ள படலங்கள்

எல்லாம் கம்பனின் புதிய படைப்பே யாகும். கவி தனது கவிதைத் திறன், கற்பனைத் திறன், முழுவதையும் இப் படலம் முதல் தான் காட்டியிருக்கிறான். அதிலும் முக்கிய மாக மிதிலைக் காட்சிப் படலத்தில் அவனுடைய கற்பனைத் திறன் உச்சக்கட்டத்தை அடைந்து விட்டதென்று சொல்ல வேண்டும். கம்பனுடைய கவிதையின் அழகையும், கற்பனைத் திறனையும், கம்ப இராமாயணத்தின் சிறப்பையும் அறிய விரும்புகிறவர்கள் இப்படலம் முதல் இக்காண்டம் கடைசி வரையாக உள்ள பாகத்தைப் படிப்பது மிக அவசியம் ஆகும். ஆதிகாவியம் இருக்க கம்ப இராமாயணம் எதற்கு என்ற தவறான எண்ணமுடையவர்கள் இவ்விரண்டாம் பகுதியைப் படிப்பது மிகவும் அவசியமாகும்.

## இப்படலத்தின் கதைச் சுருக்கம் பின்வருமாறு:

**வி**சுவாமித்திரன் இராம, இலக்ஷ்மணர்களுடன் மிதிலா நரத்தை அடைந்து இராஜ மார்க்கமாகச் சென்று முறையே நகரத்தின் அழகையும், கடைவீதிகள், கேளிக்கைகள், நடன சாலைகள், பந்தாட்டம், ஊஞ்சலாட்டம் இவற்றைப் பார்த்துக் கொண்டே செல்லுகிறான். ஜனகனுடைய அந்தப் புரத்து மேல்மாடியில் கன்னிமாடத்தில் நின்ற கோலத்தில் காட்சியளிக்கும் சீதையை இம்மூவரும் காண்கிறார்கள். இராமனும், சீதையும் ஒருவரையொருவர் காதல் குறியோடு பார்த்து ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள். பிறகு இராமன் முனிவனோடு சென்று விடுகிறான். இராமனைக் கண்டது முதல் அவனை உள்ளன்போடு காதலித்த சீதை விரக வேதனையினால் வருந்துகிறாள். தோழிமார்கள் அவளுக்கு சைத்திய உபசாரம் செய்கிறார்கள். இராமனை எண்ணி ஏதேதோ எண்ணமிட்டுப் பலவாறு புலம்புகிறாள். அவள் விரக வேதனை அதிகரித்து வருகிறது. தோழிமார்கள்

சீதைக்குச் செய்த பல உபசாரங்களும் வீணாயின. சந்திரன் தோன்றுகிறான். அவனைப் பலவாறு பழித்து மேலும் காதல் நோயால் தவித்துத் தத்தளிக்கிறாள் சீதை. முனிவன் வந்த செய்தியை அறிந்த ஜனகன் அம்மூவரையும் உபசரித்து அழைத்து ஓர் மாளிகையில் அமர்த்திச் சென்றுவிடுகிறான். அங்கு அவர்களைக் காண ஜனக புரோகிதர் சதானந்தர் வருகிறார். இராமனுடைய வரலாற்றை (அவனால் அகலிகை சாபம் நீங்கிய செய்தி உள்பட) முனிவன் சதானந்தனுக்குச் கூறுகிறான். அப்பொழுது சதானந்தன் விசுவாமித்திர முனிவனைப் புகழ்ந்து விட்டு இராமனிடம் விசுவாமித்திரருடைய சரித்திரத்தை விரிவாக ஐம்பத்தொன்பது பாடல்களால் அம்முனிவன் முன்னிலையில் கூறி விடைபெற்றுச் சென்று விடுகிறார் சதானந்த முனிவர். பிறகு விசுவாமித்திரனும், இலக்ஷ்மணனும் நித்திரை செய்யச் சென்று விடுகிறார்கள். தனியே இருந்த இராமன் தனக்குத்தானே சீதையைப் பலவாறு நினைத்துப் புலம்பி விரகத்தினால் வேதனைப்படு கிறான். காலை மூவரும் எழுந்து ஜனகனின் வேள்விச் சாலைக்குச் செல்கிறார்கள். ஜனகன் அவர்களை வரவேற்று அங்கு அவர்களை ஆசனத்தில் அமர்த்துகிறான். இராம, இலக்ஷ்மணருடைய அழகைக் கண்டு பரவசமடைந்த ஜனகன் இவர்கள் யாரென முனிவனைக் கேட்க, ''இவர்கள் தசரதன் புதல்வர்கள். வேள்வியைக் காண வந்திருக்கிறார்கள்; சிவதனுசையும் காண விரும்புகிறார்கள்'' என்று சொல்லி இராமனுடைய முன்னோர்களுடைய குலப் பிரபாவத்தை அடுத்த படலத்தில் கூறுகிறார் விசுவாமித்திரர். (157) நூற்று ஐம்பத்தேழு பாடல்களைக் கொண்ட இப்படலத்தில் முதல் எண்பத்திரண்டு பாடல்கள் வரை உள்ள பாகம் முற்றிலும் கம்பனின் புதிய படைப்பு. அது முதல் நூற்று நாற்பதாவது பாடல்கள் வரை (அதாவது விசுவாமித்திரருடைய

வரலாற்றைக் கூறும் பகுதி) இரண்டு நூல்களிலும் ஒன்றாகவே அமைந்துள்ளன. நூற்று நாற்பது, நூற்று ஐம்பத்தேழு வரை (அதாவது விசுவாமித்திரர் இராம, இலக்ஷ்மணர்கள் ஆக இவர்கள் ஜனகனைச் சந்தித்து அவனால் யாகசாலையில் உபசரிக்கப்பட்ட பகுதி) அநேகமாக சிற்சில சிறிய மாறுதல்களைத் தவிர ஒன்றாகவே அமைந்திருக்கிறது.

ஆதிகாவியத்தில் ஐம்பதாவது ஸர்க்கம் முதல் அறுபத்தைந்தாவது ஸர்க்கம் வரை கூறியுள்ள கதையைத் தழுவி இப்படலம் அமைந்துள்ளது.

1. விசுவாமித்திரர் அரச குமாரர்களுடன் நேரிடையாக ஜனகனுடைய யாகசாலைக்கு வருகிறார். அதை அறிந்த ஜனகன் அவனது புரோகிதனான சதானந்த முனிவனுடன் அங்கு வந்து அவர்களை உபசரித்து ஆசனத்தில் அமர்த்தி இராம, இலக்ஷ்மணர்களைக் கண்டு இவர்கள் யாரென முனிவனைப் பார்த்து வினவ, இராமன் சித்தாஸ்ரமத்தில் அரக்கர்களை வென்று அகலிகையின் சாபம் தீர்த்தது வரையாக நடந்த இராம சரிதத்தை அரசனுக்குக் கூறுகிறார் முனிவர். அங்கிருந்த சதானந்த முனிவர் தனது தாய் அகலிகையைப் பற்றி விவரம் விசாரிக்க, நடந்தவற்றை அவருக்குக் கூறுகிறான் விசுவாமித்திரன். பிறகு சதானந்தர் இராமனைப் புகழ்ந்து அங்கு ஜனகர், விசுவாமித்திரர், மற்றுமுள்ள முனிவர்கள் முன்னிலையில் விசுவாமித்திரருடைய வரலாற்றை இராமனுக்குக் கூறுகிறார் என்பது மூலத்தின் கதைப்போக்கு.

ராஜ வீதியோடு வந்து கொண்டிருக்கும் இராமன் முதலியவர்களை ஜனகன் எதிர் கொண்டு வரவேற்று அவர்களை ஒரு மாளிகையில் அமர்த்திவிட்டு சென்று விடுகிறான். பிறகு சதானந்த முனிவர் அங்கு வர இராமன் முனிவனை

வணங்க இராமனுடைய வரலாற்றை அதாவது (அரக்கர்களைக் கொன்று யாகத்தை நிறைவேற்றி அகலிகையின் சாபத்தை நீக்கிய வரலாற்றை) விசுவாமித்திரன் சதானந்த முனிவனுக்குச் சொல்ல சதானந்தர் அம்மாளிகையில் இராமனிடம் விசுவாமித்திரருடைய வரலாற்றை (ஜனகன் இல்லாதபொழுது) கூறுகிறார் என்பது கம்பனின் கதைப் போக்கு.

2. இராமனை யாக சாலையில் முதல் முதல் பார்த்த போதே ஜனகன் இராம, இலக்ஷ்மணர்களைப் பார்த்து யாரென்று முனிவனிடம் கேட்க, அதற்கு விசுவாமித்திர முனிவர் இராமனுடைய சரித்திரத்தைச் சொல்லி பதில் அளித்ததாக மூலத்தில் உள்ளது.

முதல் நாள் ஜனகன் முனிவனுடன் இராம, இலக்ஷ்மணர்களை வரவேற்று அவர்களை மாளிகையில் அமர்த்தி விட்டு அவர்கள் யாரென்று முனிவனிடம் கேட்காமலேயே சென்று விடுகிறான். மறு நாள் காலை இராம, இலக்ஷ்மணர்களுடன் முனிவன் யாக சாலைக்கு வர அப்பொழுதுதான் முனிவனைப் பார்த்து இவ்வரசகுமாரர்கள் யார் என்று ஜனகன் கேட்க அதற்கு பதில் உரைக்கும் வகையில் இராமனுடைய சரித்திரத்தை முனிவன் சொன்னதாக இங்கு கம்பனின் கதைப்போக்கு.

3. விசுவாமித்திர முனிவன் யாகசாலையில் இராமன் அகலிகையின் சாபத்தை தீர்த்த விஷயத்தைச் சொல்லும் போது சதானந்த முனிவர் ஆர்வத்தோடு தன்னுடைய தாயைப் பற்றி கேட்பதாகவும் அதற்கு முனிவன் பதில் கூறியதாகவும் மூலத்தில் உள்ளது. தனது தாயினுடைய சாப விமோசனச் செய்தியை விசுவாமித்திர முனிவன் மூலம் அவர்கள் விடுதியில் கேட்டிருந்தும் சதானந்தன் தன் தாயைப்

பற்றி ஒன்றும் விசுவாமித்திர முனிவனிடம் கேட்டதாகவோ, அதற்கு முனிவன் பதில் கூறியதாகவோ யாதும் கம்பனில் காணவில்லை.

4. யாகசாலையில் விசுவாமித்திரருடைய வரலாற்றைக் கூறிய பிறகு ஜனகன் ''சந்தியாகாலம் வந்துவிட்டது. நாளை நீங்கள் யாகசாலைக்கு வாருங்கள்'' என்று சொல்லி சதானந்தனுடன் சென்று விடுவதாக மூலத்தின் கதைப்போக்கு. முனிவர் தங்கியிருந்த மாளிகையில் விசுவாமித்திரருடைய சரித்திரத்தை இராமனுக்குக் கூறி சதானந்தன் திரும்பிச் செல்ல, விசுவாமித்திரனும் இலக்ஷ்மணனும் நித்திரை செய்யச் செல்கிறார்கள். இராமன் தனியே சீதையை நினைத்துப் புலம்புகிறான். மறுநாள் காலை மூவரும் எழுந்து யாக சாலைக்குச் செல்கிறார்கள். அங்கு ஜனகனுடைய கேள்விக்கு விடையாக இராமனுடைய சரித்திரத்தை முனிவன் கூறுகிறான் என்பது கம்பனின் கதைப்போக்கு.

5. விசுவாமித்திரருடைய சரிதத்தைக் கேட்டபிறகு ''சூரியன் மேற்கு திக்கில் தோன்றினான், சந்தியாவேளை வந்து விட்டது'' என்று ஜனகன் சொல்லவிட்டு விடை பெற்றுச் செல்வதால், விசுவாமித்திர சரித்திரம் சதானந்த முனிவரால் மாலை வேளைக்குள் சொல்லி முடித்ததாக ஆதி காவியத்தினால் தெரிய வருகிறது. விசுவாமித்திர சரித்திரத்தை சதானந்த முனிவர் அவர்கள் தங்கியிருந்த விடுதிக்கு வந்து சொல்லிவிட்டுச் சென்ற பிறகு விசுவாமித்திரனும், இலக்ஷ்மணனும் படுக்கச் சென்று விடுவதாக கூறி இருப்பதை வைத்து விசுவாமித்திர சரித்திரம் இரவு வெகு நேரம் வரை சொல்லி முடிக்கப்பட்டதாகக் கம்பனால் தெரிய வருகிறது.

## 11. குலமுறை கிளத்துப்படலம்

சூரிய வம்ச அரசர்களுடைய வரலாற்றை விசுவாமித்திர முனிவன் ஜனகனுக்குக் கூறியதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. இது (29) இருபத்தொன்பது பாடல் களைக் கொண்டது. யாக சாலையில் சூரிய வம்சத்து முதல் அரசனான மனுச் சக்கரவர்த்தி முதல் தசரத சக்கரவர்த்தி வரையாக உள்ள பிரதான அரசர்களுடைய பெருமையைச் சுருக்கிச் சொல்லி, பிறகு இராமன் பிறந்தது முதல் இங்கு வந்தது வரையாக நடந்த இராம சரித்திரத்தையும் சுருக்கமாக விசுவாமித்திர முனிவன் ஜனகனுக்கு கூறி முடித்தான் என்பது இப்படலத்தின் கதா சுருக்கம்.

1. மனு முதல் தசரத சக்கரவர்த்தி வரையாக பிரசித்த மான பன்னிரண்டு அரசர்களுடைய சரித்திரத்தையும், சுருக்க மாக இராம சரித்திரத்தையும் விசுவாமித்திர முனிவன் யாக சாலையில் மிதிலைக்கு வந்த இரண்டாவது நாள் இராமன் வில்லை ஒடிப்பதற்கு முன்னாலேயே சொல்லியதாக இங்கு கம்பனின் கதைப்போக்கு.

ஜனகன், விசுவாமித்திரர் முதலியோருக்கு சீதை, சிவ தனுசு இவர்களுடைய சரித்திரத்தை சொல்லி பிறகு இராமன் அவ்வில்லை வளைத்து, தசரதன் முதலியோர் மிதிலா நகருக்கு வந்த பிறகு அதாவது பத்து தினங்கள் கழித்து தசரதருடைய அனுமதியையும், இராமன் அங்கு வந்து விசுவாமித்திரருடைய அனுமதியையும் பெற்று வசிஷ்ட முனிவர், பிரும்மா, மரீச்சி, காசியபர் என்று தொடங்கி தசரத சக்கரவர்த்தி வரையாக சுமார் நாற்பது சூரிய வம்ச அரசர்க ளுடைய பெயரையும், விசேஷமாக சகரருடைய சரித்திரத் தையும் ஜனகனுக்குக் கூறியதாக ஆதிகாவியத்திலிருந்து தெரிய வருகிறது. இங்கு சுருக்கமாக இராமனுடைய சரித் திரத்தை கம்பனைப் போல் சொல்லாமல் இவ்விருவர்களும்

தசரதருடைய புதல்வர்கள் என்று மாத்திரம் சொல்லி நிறுத்து கிறார் ஆதிகவி. இச்சம்பவத்தை ஆதிகவி நாற்பத்தாறாவது சுலோகம் வரையாக உள்ள சுலோகங்களால் பிறகு சொல்லப் போகிறார். அதை முன்னதாகவே கம்பர் இங்கு சொல்லி விட்டார்.

இதுவரையில் இராமாயணக் கதையை மாற்றாமல் கிளைக் கதைகளை மாத்திரம் முன்னும், பின்னுமாக மாற்றிச் சொன்ன கம்பன் மூலக்கதையிலும் பிறகு சொல்ல வேண்டி யதை முன்னதாகவே சொல்லி முறையை இங்கு மாற்றி அமைக்கின்றார்.

2. குலமகிமையை விசுவாமித்திரன் யாகசாலையில் சொன்னதாக கம்பனால் தெரிய வருகிறது.

ராஜ சபையில் தனது தம்பி குசத்வஜனுடன் சிற்றரசர்கள் புடை சூழ ஜனகன் வீற்றிருக்கும் பொழுது குலமுறையை வசிஷ்டன் சொன்னதாக ஆதிகாவியத்தினால் தெரிய வருகிறது.

3. வசிஷ்டர் இராமனுடைய குலப்பெருமையை ஜனக னிடம் சொல்லி அத்துடன் ''உனது இரு குமாரத்திகளையும் இராம, இலக்ஷ்மணர்களுக்கு கன்னிகாதானம் செய்து கொடு'' என்று வேண்டியதாகவும் மூலத்தில் உள்ளது. கம்பன் இங்கு குலப்பெருமையைச் சொல்வதோடு நிறுத்திக் கொள்கிறார்.

## 12. கார்முகப்படலம்

சிவதனுசை இராமன் நாணேற்றி முறித்த செய்தியைக் கூறுவதால் இப்படலத்திற்கு இப் பெயர் வந்தது. அறுபத் தாறு பாடல்கள் கொண்டது இது. ஆதிகாவியத்தில் அறுபத் தாறு, அறுபத்தேழு ஸர்க்கங்களில் சுருக்கமாகக் கூறிய கதையைத் தழுவி இப்படலம் அமைக்கப்பட்டதாகும்.

விசுவாமித்திரன் சொன்னதைக் கேட்ட ஜனகன் சிவ தனுசை நாணேற்றி வளைப்பவனுக்கே தனது மகள் சீதையைக் கொடுப்பதாக தான் செய்திருந்த முடிவைக் கூறி அங்கிருந்த வேலையாட்களிடம் அவ்வில்லைக் கொண்டு வருமாறு அரசன் கட்டளையிட, அவ்வில்லைக் கொண்டு வருகிறார்கள். அச்சமயம் நகர ஜனங்கள் வில்லின் பெருமை யையும், இராமனுடைய பெருமையையும் பற்றி பலவாறு பேசுகிறார்கள். அப்பொழுது அங்கிருந்த சதானந்த முனிவன் அவ்வீர வில்லைப் பார்த்து, ''இவ்வில்லை வளைத்து சீதையை யார் மணக்கப் போகிறானோ'' என்று வேதனை யோடு கூடியிருக்கும் ஜனகனுடைய உள்ளத்தை அறிந்து விசுவாமித்திரரைப் பார்த்து சீதாதேவி, சிவதனுசு இவர்க ளுடைய வரலாற்றையும், அதை வளைக்க வந்த பல அரசர்கள் வளைக்க முடியாமல் அவமானம் பெற்று சென்றதையும், இதை இராமன் வளைத்தால் சீதையை அவனுக்குத் தருவோம் என்றும் சொல்லி முடிக்கிறான். உடனே இராமன் வில்லை வளைக்கச் செல்கிறான். அங்கு கூடியிருந்த நகரப் பெண்கள் இராமனைப் பார்த்து பலவாறு பேசிக் கொள்கிறார்கள். இராமன் சுலபமாக வில்லை முறித்து வளைத்து விடுகிறான். இது இப்படி இருக்க, சீதாதேவி தாமரைப் பொய்கைக் கரையில் உள்ள ஒரு பளிங்கு மண்டபத்தில் ஓர் மலர்ப் படுக்கையை அடைந்து இராமனை நினைத்து ஏங்கி வருந்திக் கொண்டிருக்கிறாள். நீலமாலை என்ற தோழி அலங்கோலமாக ஓடிவந்து முனிவனுடன் வந்த இராமன் வில்லை முறித்த செய்தியைத் தெரிவிக்கிறாள். அதைக்கேட்ட சீதை உள்ளம் பூரிக்கிறாள். உடனே ஜனகன், விசுவாமித்திரன் சொன்னபடி தசரதனை வரவழைத்துத் திருமணம் நடத்த அயோத்திக்குத் தூதர்களை அனுப்புகிறான் என்பது இப் படலத்தின் கதாசாரம்.

1. ஜனகன் சிவதனுசைக் கொண்டு வரும்படி நான்கு வேலையாட்களைப் பார்த்துச் சொல்ல, அவர்கள் கொண்டுவரச் செல்லுகிறார்கள். அறுபதினாயிரம் பேர்கள் கூடி அவ்வில்லை ராஜசபைக்கு எடுத்து வருகிறார்கள் என்று இங்கு கம்பன் கூறுகிறான்.

ஜனகன் வில்லைக் கொண்டு வரும்படி மந்திரிகளிடம் சொல்ல, அவர்கள் சென்று ஓர் இரும்புப் பெட்டியில் அதை வைத்து ஐயாயிரம் பேரைக் கொண்டு அதை இழுத்து சபைக்குக் கொண்டு சேர்த்ததாக இங்கு ஆதிகவி வேறு விதமாகப் பேசுகிறார்.

2. விசுவாமித்திரருடைய கேள்விக்கு விடையாக சீதையி னுடைய சரித்திரத்தையும், வில்லினுடைய வரலாற்றையும் ஜனகனே சொன்னதாக ஆதிகாவியத்தில் உள்ளது. அவ் விரண்டு வரலாற்றையும் சதானந்தன் முனிவனுக்குக் கூறிய தாக கம்பன் இங்கு அதை மாற்றி அமைத்திருக்கிறான்.

3. முதலில் ஜனகன் வேலையாட்கள் மூலம் வில்லை சபைக்கு வரவழைக்கிறான். பிறகு சதானந்தன் சீதை - வில் இவர்களுடைய வரலாற்றைக் கூறி, வில்லை வளைக்கும்படி இராமனை ஏவுகிறான் என்று இங்கு கம்பனின் கதைப்போக்கு.

முதலில் ஜனகன் சீதை, வில், இவ்விரண்டு வரலாற்றைக் கூறிய பிறகு வில்லை வரவழைத்து சபையில் வைத்து பல அரசர்கள் வந்து தோல்வியுற்றதையும், வில்லை வளைத்தால் சீதையை இராமனுக்குத் தருவதாகவும் கூறியதாக ஆதிகாவியத்தின் கதைப்போக்கு.

4. இராமன் வில்லை வளைத்த பிறகு ''தசரதச் சக்கரவர்த்தியை இங்கு வரவழைத்து பிறகு திருமணம் நடத்த வேண்டுமா? அல்லது உடனே செய்து விடலாமா?'' என்று

ஜனகன் விசுவாமித்திரரைக் கேட்க, தசரதரை வரவழைத்து திருமணம் நடத்துவதுதான் சரியென முனிவன் உரைத்தான் என்று கம்பன் இங்குக் கூறியிருக்கிறான்.

ஜனகன் விசுவாமித்திரருடைய அனுமதி பெற்று தசரதரை வரவழைக்கத் தூதர்களை அனுப்புகிறான் என்று மாத்திரம் சொல்லி, ஜனகர் முனிவனை சந்தேகம் கேட்ட தாகவும், அதற்கு முனிவன் பதில் சொன்னதாகவும் உள்ள பகுதியை ஆதிகவி கூறவில்லை.

இங்கு ஆதிகாவியத்தில் சுருக்கமாகக் கூறியுள்ள கதையை ஆதாரமாக வைத்து இடையிடையே பல கற்பனை களையும் கதையுடன் சேர்த்து இப்படலத்தை தயாரித்த தோடு, வால்மீகி இராமாயணத்திற்குக் கம்பன் புதியதோர் மெருகு கொடுக்கின்றான். இப் படலம் முதல் மேல்வரும் பல படலங்களால் புலனாகும்.

## 13. எழுச்சிப்படலம்

தசரதன் படைகளுடன் புறப்பட்டு மிதிலா நகரத்திற்கு சென்ற செய்தியைக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. இது (82) எண்பத்து இரண்டு பாடல்கள் கொண்டது.

ஜனக தூதர்கள் அயோத்தி வந்து நடந்த செய்தியைக் கூறி அரசன் கொடுத்த ஓலையைச் சபையில் நீட்ட, அதைச் சபையிலுள்ள ஓர் அறிஞன் வாங்கி அதிலுள்ள செய்தியை தசரதனுக்குப் படித்துக் காண்பிக்கிறான். அதனால் களிப் படைந்த தசரதன் உடனே மிதிலைக்கு எல்லோரும் புறப்படு மாறு முரசு கொட்டி, செய்தி தெரிவித்து, சேனைகள் சூழ, புறப்பட்டு இரண்டு யோசனை தூரம் சென்று சந்திர சைல மலையின் அடிவாரத்தில் தங்குகிறான் என்பது இப் படலத்தின் கதா சுருக்கம்.

1. ஜனக தூதர்கள் மூன்று நாள் வழியில் கழித்து அயோத்தியை அடைகிறார்கள் என்று மூலத்தில் கூறி உள்ளது. கம்பன் இங்கு நாளைக் குறிப்பிடவில்லை.

2. இங்கு வந்த ஜனக தூதர்கள் நேரிடையாக அரசனிடம் இராமன் வில்லை முறித்த செய்தியை விரிவாகக் கூறியதாக மூலத்தில் உள்ளது. அரச சபையில் செய்தி ஓலையைக் கொடுத்த செய்தி இங்கு இல்லை.

ஒரு பாட்டினால்-சுருக்கமாக நடந்தவற்றைக் கூறி செய்தி ஓலையை அரசன் முன் தூதர்கள் நீட்டியதாக இங்கு கம்பனின் கதைப் போக்கு.

3. தசரதன் செய்தி உணர்ந்த உடன் வசிஷ்டாதி முனிவர்களைப் பார்த்து ''ஜனகனுடன் சம்பந்தம் செய்து கொள்ளுதல் சரிதானா? உங்கள் விருப்பம் என்ன?'' என்று கேட்டு, அவர்களுடைய அனுமதியைப் பெற்றுப் பின் மிதிலைக்குப் புறப்பட்டதாக மூலத்தில் குறிப்பிட்ட விசேஷ செய்தி கம்பனில் காணவில்லை.

4. தசரதன் புறப்படும்போது முதலில் சைனியம், பிறகு மனைவிமார்கள், வசிஷ்டன், பிறகு பரத, சத்ருக்னர்கள், முறையே முன்னே சென்ற பிறகு கடைசியாக தசரதன் சென்றதாகக் கம்பன் கூறுகிறான்.

முனிவர்களுடன் கூடிய தசரதன் மிதிலைக்குச் செல்ல, சேனை அவனைத் தொடர்ந்து சென்றது என்று இங்கு வால்மீகி வேறு விதமாகக் கூறுகிறார்.

5. தசரதன் புறப்பட்டு நான்கு தினங்கள் வழியில் தங்கி ஐந்தாவது நாள் மிதிலையை அடைந்ததாக மூலத்தில் உள்ளது. கம்பன் இங்கு இத்தனை நாள் என்பதை குறிப் பிடாமல் ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் இடத்தில் தங்கி

அங்கு நடந்த சம்பவங்களைக் குறிக்கும் நான்கு படலங் களை முறையே ''வரைக்காட்சிப்படலம்'', ''பூக்கொய்ப் படலம்'', ''புனல் விளையாட்டுப் படலம்'', ''உண்டாடுப் படலம்'' எனப் பெயரிட்டு புதிய கற்பனையைச் செய்திருக்கிறார்.

தசரதனுடைய பட்ட மகிஷிகள் மிதிலைக்குப் புறப் பட்டுச் சென்றதாகக் கம்பனில் கூறியுள்ள விசேஷ செய்தி மூலத்தில் காணவில்லை.

ஆதிகாவியத்தில் அறுபத்தெட்டாவது ஸர்க்கம் 69-ஏழு சுலோகம் வரையாக உள்ள இக்கதையைத் தழுவி இப் படலம் அமைந்துள்ளது. அதிலும் இப்படலத்தில் எட்டாவது பாட்டுக்குள்ளாக மூலக்கதையை சுருக்கமாய்க் கூறிவிட்டு மேற்கொண்டு தசரதனுடைய சேனையையும், அவை சென்ற கோலத்தையும், செல்லும்போது நடந்த சம்பவங்களையும், விசேஷமாக வர்ணித்து இப்படலத்தில் சேர்த்து இருக்கிறார் கம்பர். எனவே அநேகமாக இப்படலம் கம்பனின் புதிய படைப்பென்றே சொல்லலாம்.

## 14. வரைக்காட்சிப்படலம்

தசரத சைனியம் சந்திர சைல மலையை அடைந்து அங்கு வாசம் செய்யும் போது நடந்த சம்பவங்களை சித்திரித்துக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. எழுபத்தேழு பாடல்கள் கொண்டது இப்படலம். இப்படலத் திற்கு மூலக் கதையோடு சிறிதளவும் சம்பந்தம் இல்லை. தான் இயற்றும் காவியத்திற்கு மஹாகாவிய லட்சணம் பொருந்துவதற்காக இது முதல் முறையே நான்கு படலங் களையும் (மூலக்கதைக்கு சிறிதளவும் சம்பந்தம் இல்லாத) புதியதாய் எழுதி இந்நூலில் சேர்த்திருக்கிறான் கம்பன்.

சிசுபாலவதம், கிராதார்ஜுநீயம் போன்ற வடமொழிக் காவியங்களிலும் இவ்வமைப்பைக் காணலாம்.

## 15. பூக்கொய்ப்படலம்

அன்று இரவு தசரத சைனியம் சந்திர சைலமலை அடிவாரத்தில் தங்கி, மறுநாள் காலை சோணா நதிக்கரையில் உள்ள ஒரு பூஞ்சோலையை அடைந்த போது, கூட வந்த பெண்மணிகள் அங்கு மலர்களைப் பறித்து விளையாடிய செய்தியைப் பலவாறு கற்பனை செய்து கூறுகிறான் கம்பன் இப்படலத்தில். முப்பத்தொன்பது பாடல்கள் கொண்டது இப்படலம்.

## 16. புனல் விளையாட்டுப்படலம்

அப்பூஞ்சோலையில் இப்பெண்மணிகள் மலர்களைப் பறித்த பிறகு அங்குள்ள நதிகளிலும், ஓடைகளிலும் இறங்கிப் பலவாறு களிப்புடன் ஆடவருடன் விளையாடிய செய்தியை வெகு அழகாய் விதவிதமாய்க் கம்பன் இதில் கற்பித்துக் கூறியிருக்கிறான். முப்பத்துமூன்று பாடல்கள் கொண்டது இப்பட்லம். இப்படலமும் கம்பனின் கற்பனை யில் உருவாகியதே.

## 17. உண்டாடுப்படலம்

அன்றிரவு சைனியத்தில் உள்ள ஆண்களும், பெண் களும் மதுவை அருந்தி களிப்பினால் செய்த செய்கைகளைப் பலவாறு வர்ணித்துக் கூறுகிறான் கம்பன் இப்படலத்தில். அறுபத்தேழு பாடல்கள் கொண்டது இப்படலம். விசுவாமித்திர முனிவர் இராம, இலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு, சரயூ நதி, கங்காநதி, இவற்றைக் கடந்து காமாஸ்ரமத்தின்

வழியாகத் தாடகாவனத்தை அடைந்து, சித்தாஸ்ரமத்தில் யாகத்தை முடித்து, சோணா நதியை அடைந்து கங்கையைக் கடந்து விசால நகரத்தை அடைந்து கௌதமருடைய ஆச்ரமத்தைக் கண்டு மிதிலையை அடைந்தார் என்பது அயோத்தியிலிருந்து மிதிலா நகரத்திற்கு முனிவன் இராம, இலக்ஷ்மணர்களுடன் சென்ற பாதையாகும். இதில் ஆதி காவியத்திற்கும் கம்பனுக்கும் அதிகம் மாறுதல் இல்லை.

அயோத்தியிலிருந்து புறப்பட்டு சந்திர சைலமலையை அடைந்த பிறகு, சோணா நதிக்கரையில் தங்கி கங்கையைக் கடந்து மிதிலையை தசரதன் அடைந்தான் என தசரதர் மிதிலைக்குச் சென்ற பாதையை கம்பன் விவரமாய் கூறியிருக்கிறான்.

நான்கு தினங்கள் பிரயாணம் செய்து, தசரதன் சேனையுடன் ஐந்தாம் நாள் மிதிலா நகரத்தை அடைந்ததாக மாத்திரம் ஆதி கவி கூறியிருப்பதால், மேலே சொன்ன இரண்டு மார்க்கங்களில் எந்த வழியாக தசரதன் மிதிலையை வந்தடைந்தான் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

## 18. எதிர்கொள் படலம்

தசரத சக்கரவர்த்தி பந்து, மித்திர பரிவாரங்களுடன் மிதிலையைக் கிட்டியபோது ஜனக மகாராஜன் சேனையோடு சென்று எதிர்கொண்டழைத்து வந்த வரலாற்றைக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. முப்பத்துநான்கு பாடல்களைக் கொண்டது இப்படலம்.

தசரதன் சேனையோடு கங்கைக்கரை வந்து அங்கிருந்து புறப்பட்டு மிதிலா நகரத்தைக் கிட்டுகிறான். இச்செய்தியை அறிந்த ஜனகன் சேனைகளோடு புறப்பட்டு நகரத்திற்கு வெளியே வந்து தசரதனை வரவேற்கிறான். ஜனகனை கை

கொடுத்து தனது தேரில் ஏற்றிக் கொண்டு க்ஷேமம் விசாரித்து அவனைத் தழுவிக் கொள்கிறான் தசரதன். இரு அரசர்களும் நகரத்தைக் கிட்டியபொழுது, இராம, இலக்ஷ்மணர்களும் தசரதனை எதிர் கொண்டழைக்க வருகிறார்கள். புதல்வர் களைக் கட்டித் தழுவி பிறகு, சேனைகளை அழைத்து முன்னே செல்லுமாறு தசரதன் இராமனுக்குக் கட்டளையிடு கிறான். இரண்டு பக்கங்களிலும் தம்பிமார் சூழ இராமன் இரதமேறி நகர வீதியை அடைகிறான் என்பது இப் படலத்தின் கதா சுருக்கம்.

1. தசரதன் அயோத்திலிருந்து புறப்பட்டு மிதிலா நகரை அடைய, ஜனகன் அவனை உபசரிக்க அவன் ஓரிடத்தில் தங்குகிறான். அங்கு விசுவாமித்திர முனிவனுடன் இராம, இலக்ஷ்மணர்கள் தந்தையை வந்து வணங்குகிறார்கள் என்பது இங்கு ஆதிகவி கூறிய கதைப்போக்கு. நகரத்திற்கு வெளியே சென்று ஜனகனோ, இராம, இலக்ஷ்மணர்களோ தசரதரை வரவேற்று அழைத்து வந்ததாகக் காணவில்லை.

ஜனகன் முதலில் நகரத்திற்கு வெளியே சென்று தசரதரை வரவேற்று அழைத்து வந்ததாகவும், பிறகு இராம இலக்ஷ்மணர்கள் நகரத்திற்கு வெளியே சென்று தந்தையை வரவேற்றதாகவும் இங்கு கம்பன் கதையை அமைத்திருக் கிறான். தசரதரை வரவேற்க இராம, இலக்ஷ்மணர்களுடன் விசுவாமித்திரன் சென்றதாகக் கம்பன் கூறவில்லை. ஆதிகாவியம் அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் ஏழாவது சுலோகம் முதல் பத்தொன்பதாவது சுலோகம் (அதாவது ஸர்க்கம் முடியும்வரை) பன்னிரண்டு ஸ்லோகங்களில் கூறியுள்ள கதையைத் தழுவி இப்படலம் அமைக்கப்பட் டுள்ளது. நான்கு நாட்கள் வழியில் தங்கி மிதிலா நகரத்தை அடைந்த தசரதன் ஜனகனால் உபசரிக்கப்பட்டு முனிவர்க ளுடன் அங்கு இரவைக் கழித்தான் என்று மூலத்தில்

சுருக்கமாய்க் கூறியுள்ள கதையை ஆதாரமாக வைத்து அத்துடன் பல, பல புதிய சம்பவங்களைச் சேர்த்து இப் படலத்தை தயாரித்து இருக்கிறான் கம்பன். அநேகமாய் இதுவும் கம்பனின் கற்பனையில் உருவாகியதென்றே சொல்லலாம்.

## 19. உலாவியல் படலம்

இராமன் மிதிலா நகரத்து வீதியோடு பவனி வருகின்ற காட்சியை விதவிதமாக சித்திரித்துக் கூறுவதால் இப் படலத்திற்கு இப்பெயர் வந்தது. 54 பாசுரங்கள் இதில் உள்ளன.

இராமபிரான் தேரில் ஏறி ராஜவீதியோடு ஊர்வலமாக வருகிறான். நகரப் பெண்மணிகள் அவன் அழகைக் காண்ப தற்காக ஓடோடி வந்து அவன் அழகைக் கண்டு மோகம் கொள்கிறார்கள். ஒவ்வொருவரும் ''அவனைக் கணவனாக அடையும் பாக்கியம் கிட்டவில்லையே'' என்று ஒருவரோ டொருவர் சொல்லிக் கொண்டு வருந்துகிறார்கள். இராமனுடைய ஒவ்வொரு அவயவத்தையும் கண்டு அதிலேயே ஈடுபட்டு மற்றோர் அவயவத்தைக் காண முடியாதவர்களாகிறார்கள். இவ்வாறு ஜகன் மோகனாகாரனான இராமன் ஊர்வலமாய் வந்து சபா மண்டபத்தை அடைந்து, அங்கு வீற்றிருந்த வசிஷ்டர், விசுவாமித்திரர் இவர்களை வணங்கி, இலக்ஷ்மணனுடன் ஓர் ஆசனத்தில் அமர்கிறான். பிறகு சிற்றரசர்களுடன் தசரதன் அங்கு வந்து சேர, ஜனகன் அவர்கள் எல்லோரையும் நன்கு உபசரிக்கிறான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

இங்கு திருமணத்திற்கு முதல்நாள் மாலை மணமகனை ஊர்வலமாக அழைத்து வந்து ஓர் மண்டபத்தில் அமர்த்தி

உபசரிக்கும் வழக்கம் நம் நாட்டில் இன்றும் நடைபெற்று வருகின்றது. மாப்பிள்ளை அழைப்பு, ஜாநவாசம் என்று இதற்குப் பெயர். கம்பன் இப்பழக்கத்தை மனதில் கொண்டு இப்படலத்தை இங்கமைத்திருக்கிறான். மூலத்தில் இது குறிப்பிடப்படவில்லை. எனவே இப்படலமும் கம்பனின் புதிய கற்பனையே ஆகும்.

## 20. கோலங் காண் படலம்

சீதாப்பிராட்டியைத் தோழிமார் பலவகையாக அலங்காரம் செய்த விதத்தைக் கூறுவதால் இதற்கு இப்பெயர் வந்தது. 43 பாசுரங்கள் இதில் உள்ளன. அங்குள்ள வசிஷ்ட முனிவன் ஜனகனைப் பார்த்து சீதையை அங்கு அழைத்து வருமாறு உத்தரவிடுகிறார். அரசனின் உத்தரவுப்படி பெண்கள் தோழிகளிடம் சென்று அதைத் தெரிவிக்கின்றனர். தோழிமார்கள் சீதைக்கு விதவிதமாய், தாங்களே அவளைக் கண்டு மோகிக்கும் வண்ணம் பற்பல அலங்காரங்கள் செய்கிறார்கள். சீதை அன்னநடைப் போட்டு சபா மண்டபத்தை அடைகிறாள். இராமன், ''அன்று கன்னி மாடத்தில் கண்ட பெண் இவளே'' என எண்ணி மகிழ்கிறான். வசிஷ்ட முனிவன், விசுவாமித்திரர், தசரதர் முதலியோர் சீதா தேவியின் அழகைக் கண்டு, இவள் லக்ஷ்மி அவதாரமே என்று எண்ணிப் பூரித்துப் பேரானந்தம் அடைகின்றனர். மற்றவர்கள் அவளை கைதூக்கி வணங்குகிறார்கள்.

''திருமணம் என்றைக்கு?'' என்று அச்சமயம் தசரதன் விசுவாமித்திர முனிவனைக் கேட்க, ''நாளை'' என முனிவன் பதில் கூறுகிறான். பிறகு தசரதன் தனது இருக்கைக்குச் சென்று விடுகிறான். சூரியனும் மறைகிறான் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

1. தசரதர் முதலியோர் மிதிலை நகரை வந்தடைந்த வுடன் தனது தம்பியான குசத்வஜனை அழைத்து வருமாறு ஜனகன் செய்தியனுப்பி அவனை வரவழைத்ததாக இங்கு வால்மீகத்தில் கூறியுள்ள செய்தியைக் கம்பன் தனது நூலில் பிரஸ்தாபிக்கவில்லை.

2. வசிஷ்டர் இராமனுடைய குல மகிமையைச் சொல்லி முடிந்த உடன் ஜனகனும், நிமிச்சக்கரவர்த்தி முதலாக தன் வரையாக தனது முன்னோர்களுடைய பெயர்களையும் சரித்திரத்தையும் வசிஷ்டரிடம் கூறியதாக ஆதிகாவியத்தில் உள்ள பகுதி இங்குக் கம்பனில் காணவில்லை.

3. ஜனகன் தனது குல மகிமையைச் சொல்லி முடித்த வுடன் தொடர்ந்தாற் போல் விசுவாமித்திர முனிவன் பரத, சத்ருக்னர்களுக்கு ஜனகனுடைய தம்பியான குசத்வஜன் என்பவனுடைய இரண்டு பெண்களையும் கன்னிகாதானம் செய்து தருமாறு கேட்டதாகவும், அதற்கு ஜனகனும் இசைந்து நாளை கழித்த மறுநாள் பங்குனி உத்திரத்தில் நால்வருக்கும் மணமுடித்து விடலாம் என்று கூறியதாகவும் ஆதிகவி கூறிய விசேஷடத்தைக் கம்பன் இங்குக் குறிப்பிட வில்லை.

4. ''இன்று மகா நட்சத்திரம் நாளை கழித்த மறுநாள் பங்குனி உத்திரம். அது விவாகத்துக்கு சிறந்த நாள். அன்று திருமணத்தை முடிக்கலாம்'' என்று ஜனகன் வசிஷ்ட முனிவரிடம் கூறியதாக ஆதி காவியத்தில் குறிப்பிட்டபடி உள்ள நிச்சயதார்த்தம் என்ற சடங்கு, திருமணத்திற்கு முதல் நாளைக்கு முதல் நாள் மகா நட்சத்திரத்தில் நடந்ததாக ஆதி காவியத்தால் தெரிய வருகிறது.

மாப்பிள்ளை அழைப்பு முடிந்தவுடன் தொடர்ந்தாற் போல் ''திருமணம் என்றைக்கு?'' என்று விசுவாமித்திரரைப் பார்த்து தசரதர் கேட்டதும், அதற்கு முனிவன் ''நாளை'' என்று பதில் கூறியதும் திருமணத்திற்கு முதல்நாள் மாலை நடந்ததாகக் கூறி இருப்பதால் நிச்சயதார்த்தம் என்ற சடங்கு திருமணத்திற்கு முதல் நாள் அதாவது பூர நட்சத்திரத்தில் நடந்ததாகக் கம்பனால் தெரிய வருகிறது.

5. இராமனும், சீதையும் திருமணம் நடப்பதற்கு முன் கன்னிமாடத்தில் முதல் தடவையாகவும் நிச்சயதார்த்தத்தில் இரண்டாவது தடவையாகவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதாகக் கம்பன் கூறியிருக்கிறான்.

திருமண சமயத்தில்தான் முதல் தடவையாக சீதையும், இராமனும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதாக ஆதி காவியத்திலிருந்து தெரிய வருகிறது. திருமணத்திற்கு முதல் நாள் தம்பதிகளை பீடத்திலமர்த்தி வழக்கமாய் நடத்தப்படும் நிச்சயதாம்பூலம் என்ற ஒரு சடங்கை ஆதாரமாக வைத்து கற்பனை செய்த படலமாகும் இது.

வசிஷ்ட முனிவன் இராம, இலக்ஷ்மணர்களுக்காக ஜனகனிடம் பெண்களைக் கன்னிகாதானம் செய்து கொடுக்கும் படி கேட்பதும், அவ்வாறே விசுவாமித்திர முனிவன் குசத்வஜனுடைய பெண்களை பரத, சத்ருக்னர்களுக்குக் கொடுக்குமாறு ஜனகனிடம் கேட்பதும், அதற்கு ஜனகன் சரியென்று சம்மதித்து முகூர்த்தநாளை குறிப்பிடுவதும் ஆகிய விஷயங்கள் ஆதி காவியத்தில் 70 ஸர்க்கம் முதல் 72-ஆவது வரை பேசப்பட்டிருக்கிறது. எனவே அதை ஆதார மாக வைத்துக் கொண்டு இடையிடையே பல புதிய விஷயங் களைச் சேர்த்து இப்படலத்தை புதியதாக உருவாக்கி இருக்கிறான் கம்பன்.

# 21. கடிமணப்படலம்

இராமன் முதலியோர்களுடைய திருமண வைபவத்தை விரிவாகக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. 104 பாடல்கள் கொண்டது இப்படலம். ஆதிகாவியம் 73-ஆவது ஸர்க்கத்தில் கூறியுள்ள கதையை ஆதாரமாக வைத்து இப்படலம் அமைக்கப்பட்டிருக்கிறது. கம்பன் இங்கு பற்பல சம்பவங்களைப் புதியதாகக் கற்பித்து மூலக் கதையோடு சேர்த்து இப்படலத்தை அழகாகத் தயாரித் திருக்கிறான்.

திருமணத்திற்கு முதல் நாள் இரவு இராமன், சீதை இருவரும் தனித்தனியே ஒருவரையொருவர் எண்ணி துயர முற்று காம வேதனைப்படுகின்றனர். நாளை திருமணம் என அரசனால் அறிவிக்கப்பட்ட உடன் ஜனங்கள் இரவெல்லாம் நகரத்தை விதவிதமாக அலங்கரிக்கின்றனர். சூரிய உதய மானவுடன் தசரதன் பரிவாரத்தோடு திருமண மண்டபத்தை அடைகிறான். அங்கு ஜனகனும் வந்து ஆசனத்தில் அமர் கிறான். இராமன் நீராடி நெற்றியிலே திருமண் இட்டு தன்னை அலங்கரித்துக் கொண்டு தம்பிமார்களுடன் தேரேறி திருமண மண்டபத்தை அடைகிறான். வசிஷ்ட முனிவன் திருமணத்தை நடத்தி வைப்பதற்குத் தேவையான வஸ்துக்க ளுடன் அங்கு வருகிறான். தம்பதிகள் இருவரும் மண மேடையில் வீற்றிருக்க, ஜனகன் இராமனுக்கு சீதையை தாரை வார்த்துக் கொடுக்கிறான். உடனே சீதை அக்கினி வலம் வந்து, அம்மி மிதித்து எல்லோரையும் போல் அருந்ததி நட்சத்திரத்தை ஆகாயத்தில் அண்ணாந்து பார்க்காமல், அங்கு எதிரில் வசிஷ்ட முனிவனுடைய அருகில் தத்ரூபமாய் வீற்றிருக்கும் சாஷாத் அருந்ததியைக் கண்டாள். உடனே இராமனும், சீதையும் தசரதன்

முதலியோரை வணங்கிப் பிறகு தாய்மார்களையும் வணங்கி பள்ளி அறைக்குச் சென்றார்கள். பிறகு ஜனகன் தனது தம்பி குமாரத்திகளான மூவரையும் இராமனுடைய தம்பிமார் மூவர்களுக்கும், திருமணம் செய்விக்க, தசரதனோடு கூடி நிச்சயித்து மணம் முடிக்கிறான். திருமணம் முடிந்த பிறகு சில நாட்கள்வரை தசரதன் மிதிலையிலேயே தங்கி இருக்கிறான் என்பது இப்படலத்தின் கதா சுருக்கம்.

*1. பரதனுடைய தாய்மாமனான யுதாஜித் என்பவன் பரதனைத் தன்னுடைய நகரத்திற்குத் தனது தந்தையின் விருப்பப்படி அழைத்துச் செல்ல அயோத்திக்கு வர, எல்லோரும் திருமணத்திற்கு மிதிலா நகரம் சென்று விட்ட செய்தியை உணர்ந்து, நேரிடையாய் அங்கிருந்து புறப் பட்டு மிதிலையை அடைந்து திருமணத்திற்கு முதல் நாள் தசரதனைச் சந்தித்து தான் அயோத்திக்கு முதலில் வந்து, அங்கிருந்து இங்கு வந்த செய்தியையும் தசரதனிடம் தெரிவிப்பதாக ஆதிகாவியத்தில் உள்ள பகுதி கம்பனில் காணப்படவில்லை.*

*2. திருமணத்திற்கு முதல் இரவு இராமனும், சீதையும் ஒருவரையொருவர் நினைத்து விரக வேதனைப் பட்டதாகக் கம்பன் புதிதாய்க் கூறியுள்ள அம்சம் மூலத்தில் காண வில்லை.*

*3. முதலில் தசரதன், அடுத்தாற்போல் இராமன், பிறகு சீதை, அடுத்தாற்போல் வசிஷ்டன் என்ற வரிசையில் இவர்கள் திருமண மண்டபத்தை அடைந்ததாகக் கம்பன் கூறுகிறான். முதலில் தசரதன் பிறகு தம்பிமார்களுடனும் முனிவனுடனும் கூடி இராமன் அங்கு வந்ததாக ஆதி காவியத்தின் போக்கு.*

4. சீதை அம்மி மிதித்து வசிஷ்ட முனிவனுடைய மனைவியாகிய அருந்ததி தேவியை நட்சத்திர வடிவத்தில் ஆகாயத்தில் பார்க்காமல் எதிரில் புரோகிதராய் வீற்றிருக்கும் வசிஷ்டருடைய அருகாமையில் உட்கார்ந்திருந்த நிஜ அருந்ததியைக் கண்டதாகக் கம்பன் கூறியுள்ள அம்சங்களை ஆதிகவி தனது நூலில் எழுதவில்லை.

5. திருமணம் முடிந்த பிறகு சீதை, முதலில் கைகேயி, பிறகு கௌசல்யை, சுமத்திரை என இம்மூவரையும் வணங்க, அவர்கள் இவளுக்கு ஏராளமான நகைகளை கொடுத்ததாகக் கம்பனில் கூறியுள்ள கதை வால்மீகத்தில் இல்லை.

6. விவாகம் யாக சாலையில் நடந்ததாக ஆதிகாவியத்தினால் தெரிகிறது. கம்பன் இங்கு யாகசாலை என்பதை குறிப் பிடாமல் மணி மண்டபம் என்று மாத்திரம் கூறியிருக்கிறான்.

7. வசிஷ்ட முனிவன் ''உனது இரு குமாரத்திகளையும் இராம, இலக்ஷ்மணர்களுக்குத் தர வேண்டும்'' என ஜனகனைக் கேட்டதாகவும், விசுவாமித்திர முனிவர் பரத, சத்ருகனர்களுக்கு குசத்வஜனுடைய இரண்டு குமாரத்தி களைத் தரும்படி கேட்டதாகவும் ஆதிகாவியத்தில் தெளி வாகச் சொல்லியிருப்பதால் சீதை, ஊர்மிளை இருவர்களும் ஜனகனுடைய புதல்விகள் என்றும், மாண்டவி, சுருதகீர்த்தி என்ற இவர்கள் குசத்வஜனுடைய பெண்கள் என்றும் தெளி வாகிறது.

கம்பன் இங்கு சீதையைத் தவிர மற்ற மூவர்களையும் குசத்வஜனுடைய பெண்கள் என்று தெளிவாகக் கூறியிருக்கிறான்.

8. திருமணம் நடந்த பிறகு சில நாட்கள் வரை மிதிலை யில் தசரதன் தங்கி இருந்ததாகக் கம்பன் இங்கு கூறியிருக்கிறான்.

திருமணம் நடந்த மறுதினமே விசுவாமித்திரர் இமய மலைக்குச் சென்றதாகவும் அதைத் தொடர்ந்தாற்போல் தசரதர் உடனே அயோத்திக்குப் புறப்பட்டதாகவும் ஆதி காவியத்தினால் தெரிய வருகிறது.

9. இராமன் முதலியோர் நால்வரும் ஒரே சமயத்தில் விவாகம் செய்து கொண்டு பள்ளி அறைக்குச் சென்றதாக ஆதிகவி கூறியுள்ளதை மாற்றி, இராமன், சீதையுடன் திருமணம் முடிந்து முதலில் பள்ளி அறைக்குச் சென்ற தாகவும், பிறகு மற்ற மூவருக்கும் விவாகம் ஜனகனால் நிச்சயிக்கப்பட்டு நடந்தேறியதாகவும் கம்பன் வேறுவிதமாக இங்கு எழுதியிருக்கிறான்.

10. மிதிலா நகரத்தைத் திருமணத்திற்கு முதல் இரவு நகர ஜனங்கள் விசேஷமாக அலங்காரம் செய்த விதத்தை ஆதிகவி கூறியிருக்கிறார். கம்பனில் காணவில்லை.

11. யுதாஜித் அயோத்தி சென்று அங்குதான் திருமணச் செய்தி தெரிந்து கொண்டான் என்று மூலத்தில் சொல்லி இருப்பதிலிருந்து அவசரமாய் திருமணம் முடிவு செய்யப் பட்டதால், திருமணப் பத்திரிக்கை கேகய நாட்டு அரசனுக்குக் கூட அனுப்ப முடியவில்லை என்று ஆதிகாவியத்தினால் தெரிய வருகிறது.

## 22. பரசுராமப் படலம்

தசரதன், இராமன் முதலியோருடன் அயோத்திக்குத் திரும்பிச் செல்லும்போது, வழியில் வலிய சண்டைக்கு வந்த பரசுராமனை, ஸ்ரீராமன் ஜெயித்த செய்தியைக் கூறுவதால் இப்படலத்திற்கு இப்பெயர் வந்தது. 50 பாடல்கள் இதில் இடம் பெற்றிருக்கின்றன. 74 ஸர்க்கம் முதல் 77 ஸர்க்கம் வரை ஆதிகாவியத்தில் கூறியுள்ள கதையை ஆதாரமாகக்

கொண்டு கம்பன் இப்படலத்தை அமைத்திருக்கிறான். இப் படலத்தில் ஏதோ சிற்சில பேதங்கள்தான் மூலக் கதைக்கும், கம்பனுக்கும் இடையே காணப்படுகின்றன. அநேகமாய், இவற்றைத் தவிர மற்ற விஷயங்களில் இப்படலத்தை பொறுத்த வரையில் ஆதிகாவியத்திற்கும் கம்பனுக்குமிடையே கதைப்போக்கில் ஒற்றுமை இருப்பதைக் காணலாம்.

திருமணத்தை முடித்துக் கொண்டு ஜனகனிடம் அனுமதி பெற்று விசுவாமித்திர முனிவர் இராம தம்பதிகளை வாழ்த்தி விட்டு தவம் செய்ய இமயமலைக்குச் செல்கிறார். தசரதனும் பரிவாரங்களுடன் புதல்வர்களை அழைத்துக் கொண்டு அயோத்திக்குச் செல்ல, வழியில் மயில்கள் வலது புறமாகவும், காகம் முதலிய பறவைகள் இடது புறமாகவும் செல்வதைக் கண்டு இது ஓர் அபசகுனம் என எண்ணி வருந்தி, உடனே ஒரு சோதிடனை வரவழைத்து இதன் பலன் யாதெனக் கேட்க, ''துன்பம் வரும். ஆனால் அது உடனே நீங்கி விடும்'' என்று அவன் பதில் கூறுகிறான். அச்சமயம் பரசுராமன் வில்லையும், கோடாரியையும் கையிலேந்தி உலகமெல்லாம் நடுங்கும்படியாக பயங்கர உருவத்துடன் இராமன் முன் தோன்றி, ''சொத்தை வில்லை நீ முன்பு முறித்து விட்டாயே, இப்பொழுது உனது தோள்பலத்தை பரீட்சிக்க வந்திருக்கிறேன்'' என்று கோபாவேசமாகப் பேச, அதைக் கண்ட தசரதன் நடுங்கி, பரசுராமனைப் பலவாறு புகழ்ந்து அபயம் என வேண்டுகிறான். அதையும் இலட்சியம் செய்யாமல் பரசுராமன் ஸ்ரீராமனிடம் வந்து சிவதனுசின் வரலாறு, தான் கையில் ஏந்தியிருக்கும் விஷ்ணுதனுசின் வரலாறு, இதனால் மஹா விஷ்ணுவிற்கும், பரமசிவனுக்கும் நிகழ்ந்த போர், அப்பொழுது சிவதனுசு முறிந்து போனது ஆகியவற்றை கூறி, தனது தந்தையை கார்த்தவீரியார்ச்சுனன்

கொன்றதனால் ஏற்பட்ட கோபம் தணிந்து இதுவரை மகேந்திர மலையில் தான் வசித்து வந்ததையும் இப்பொழுது இராமன் சிவதனுசை முறித்த ஒலியைக் கேட்டு இங்கு வந்ததையும் ஸ்ரீ ராமனிடம் கூறித் தன் கையிலுள்ள விஷ்ணுதனுசை அவனிடம் காட்டி, ''நீ வீரனானால், இதை வளை பார்க்கலாம். பிறகு உன்னுடன் போர் செய்கிறேன்'' என்று கூறுகிறான்.

உடனே ஸ்ரீ இராமன் அதை வாங்கி வளைத்து தனது பாணத்திற்கு லட்சியம் யாது என பரசுராமனைக் கேட்க, பரசுராமன் இராமனைப் பலவாறு துதித்து, தான் இதுவரை செய்த தவத்தை எல்லாம் அந்த பாணத்திற்கு இலக்காக்கிக் கொள்ளுமாறு கூறுகிறான். உடனே இராமபாணம் வேக மாய்ச் சென்று பரசுராமன் இதுவரை தவம் செய்து சம்பாதித்த புண்ணியங்களையெல்லாம் வாரி சுருட்டிக் கொண்டு வருகிறது. பரசுராமன் இராமனை வணங்கிச் சென்று விடுகிறான். பிறகு மூர்ச்சை அடைந்திருக்கும் தந்தையை சமாதானப்படுத்துகிறான் ராமன். தசரதன் புதல் வனைத் தழுவி ஆனந்தமடைகிறான். பரசுராமனிடமிருந்து பெற்ற விஷ்ணு தனுசை ஜாக்கிரதையாக வைத்துக் காக்கும் படி சொல்லி வருணனிடம் அதைக் கொடுத்து அயோத்திக்குத் தந்தையுடன் செல்கிறான் ராமன். அங்கு சென்ற சில தினங் களுக்குள் பரதனையும், சத்ருக்னனையும், பரதனுடைய தாய் மாமனாகிய யுதாஜித் கேகய நாட்டிற்கு அழைத்துச் செல்கிறான் என்பது கதைச் சுருக்கம்.

1. தசரதன் புதல்வர்களையும், நாட்டுப் பெண்களையும் அழைத்து அயோத்திக்குச் செல்லும் வழியில், ஜனகன் பெண் களுக்கு, பொன், முத்து, பசுக்கள், பூமி ஆகியவைகளை சீதனமாக ஏராளமாகச் சீர்களைக் கொடுத்து சிறிது தூரம்

சென்று தசரதனை வழி அனுப்பி வந்ததாக ஆதிகாவியத்தில் கூறிய செய்தியை கம்பன் தனது நூலில் குறிப்பிடவில்லை.

2. மயில்கள் வலம் வருவது, காகம் முதலிய பறவைகள் இடம் வருவது ஆகியவைகளை அபசகுனமாகக் கம்பன் கூறியிருக்கிறான்.

பட்சிகள் கோரமாக ஒலித்தன; மிருகங்கள் வலம் வந்தன என்று ஆதிகாவியத்தில் அபசகுன குறிகளை வேறு விதமாக ஆதிகவி கூறுகிறார்.

3. அபசகுனங்களைக் கண்ட தசரதன் ஒரு சோதிடனை வரவழைத்து இதற்குப் பலன் கேட்டதாகக் கம்பன் கூறுகிறான்.

வசிஷ்டரையே இதற்குப் பலன் யாதென தசரதன் கேட்டதாக ஆதிகவி இங்கு சொல்லியிருக்கிறார்.

4. பரசுராமர் கோபாவேசமாக எதிரில் வந்தபொழுது வசிஷ்டாதி முனிவர்கள் அர்க்கிய பாத்யம் கொடுத்து அவனை உபசரித்ததாக மூலத்தில் உள்ளது.

இங்கு கம்பன், தசரதனே நேரில் பரசுராமனை உபசரித்த தாகக் கூறி, வசிஷ்டாதி முனிவர்களைக் குறிப்பிடவில்லை.

5. ''உளுத்துப் போன வில்லை நீ முறித்தது ஒரு பெரிய பெருமை இல்லை. இந்த வில்லை எடுத்து வளை பார்க்கலாம்'' என்று எடுத்த எடுப்பில் ஓர் இறுமாப்புடனும், கர்வத்துடனும் பரசுராமன், இராமனைப் பார்த்துக் கூறியதாகக் கம்பன் இங்கு பேசுகிறான்.

சிவதனுசைப் பற்றி அலட்சியமாக ஒன்றும் பேசாமல் ''நீ ஒரு க்ஷத்திரியன் ஆகையால், உனது திறமையை இங்கு

காணவே நான் வந்திருக்கிறேன். இந்த வில்லை எடுத்து நாணேற்றினால் உன்னுடன் போர் செய்வேன்'' என்று இராமனை அலட்சியம் செய்யாமல் பரசுராமன் கேட்டதாக ஆதிகவி இங்குக் குறிப்பிட்டிருக்கிறார்.

6. இராமன் வில்லை வளைத்து நாணேற்றி ''எனது பாணம் வீணாகாது. எனவே உனது பாதகதியை (கால் வலிமையை) இதைக் கொண்டு அழிக்க வேண்டுமா? அல்லது நீ இதுவரை யில் தவம் செய்து சேர்த்து வைத்த புண்ணியங்களை இதனால் அழிக்கட்டுமா?'' என்று பரசுராமனை இராமன் கேட்டதாகவும், அதற்கு தனக்கு காசியபர் அளித்த சாபப் பிரகாரம் இங்கு இரவு தங்காமல் உடனே மகேந்திர மலைக்குச் செல்ல வேண்டி இருப்பதால் தனது புண்ணியங்களையே பாணத் திற்கு இலக்காக்கிக் கொள்ளுமாறு பரசுராமன் இராமனிடம் கூறியதாக ஆதிகாவியத்தில் உள்ளது.

இங்கு இரண்டைக் குறிப்பிட்டு எதை அழிப்பது என்று இராமன் பரசுராமனைக் கேட்காமல் எனது பாணத்திற்கு இலக்கு யாது என்று பொதுவாக மாத்திரம் கேட்டதாக இங்கு கம்பன் கூறியிருக்கிறான்.

7. பரசுராமன் தோல்வியுற்றுச் சென்றபிறகு விஷ்ணு தனுசை வருணனிடம் கொடுத்து பிறகு வசிஷ்டரை வணங்கி, பிறகு மூர்ச்சையுற்ற தசரதரை சமாதானப்படுத்தியதாக இங்கு ஆதிகவி கூறியிருக்கிறார்.

தசரதரை மூர்ச்சையிலிருந்து எழுப்பி சமாதானப்படுத்தி, பிறகு வருணனிடம் வில்லைக் கொடுத்து அதைக் காப்பாற்றி வருமாறு இராமன் கூறினான் என்பது இங்கு கம்பனின் கதைப்போக்கு.

8. தந்தையினுடைய அனுமதி பெற்று ராஜ்ய பரி பாலனங்களை இராமன் ஏற்று நடத்தியதாகவும் பெரி யோர்கள் பார்த்துச் செய்த திருமணம் என்ற காரணத்தினால் சீதையிடம் இராமன் விசேஷமாக அன்பு கொண்டான் என்றும் ஆதிகவி கூறியுள்ள விசேஷங்களை கம்பன் இங்கு குறிப்பிடவில்லை.

பொதுவாக கம்பன் ஆதிகாவியத்தில் உள்ள கதையை கீழ்க் குறிப்பிடும் அடிப்படையில் மாற்றி அமைத்திருக்கிறான் என்று முடிவு செய்யலாம்.

1. மூலக்கதை, கிளைக்கதை ஆகியவற்றில் ஆங்காங்கு சில மாறுதல்களைச் செய்தல்.

2. மூலக்கதை, கிளைக்கதை ஆகியவற்றை மூலத்தில் ஒரு சந்தர்ப்பத்தில் சொல்லி இருப்பதைத் தான் வேறு சந்தர்ப்பத்தில் சொல்லுவது.

3. மூலத்தில் ஓர் இடத்தில் சொல்லியிருக்கும் கதையைத் தான் மற்றோர் இடத்தில் சொல்லுவது.

4. மூலக்கதைக்கு சம்பந்தப்பட்ட சில கற்பனை களையும், சம்பந்தமில்லாத சில சுதந்திரக் கற்பனைகளையும் செய்து மூலக்கதையில் இடையே ஆங்காங்கு சேர்ப்பது.

5. மூலத்தில் ஓர் கதையை ஒருவர் சொல்லியதாகக் கூறியிருந்தால், அதையே தான் வேறொருவரைக் கொண்டு சொல்ல வைப்பது.

இராம, இலக்ஷ்மணர்களை விசுவாமித்திரன் அழைத்து சென்ற பாதையை வால்மீகத்தில் குறிப்பிட்ட முறைக்கு மாறாகத் தான் வேறு விதமாகச் சொல்லுவது.

கம்பன் ஆதிகாவியத்தில் உள்ள கதையை எதற்காக மாற்றினான்? இவன் செய்த மாறுதல்களுக்கும், புதிய கற்பனைகளுக்கும், புராணம் போன்ற பழைய நூல்களில் எங்காவது ஆதாரம் இருக்கின்றனவா? அல்லது சுதந்திர மாகவே செய்யப்பட்டவையா? என்ற இப்படிப்பட்ட ஆராய்ச்சிகளில் இறங்குவது இப்பொழுது அவசியம் இல்லை என்று சொல்லி நிறுத்திக் கொள்கிறேன்.

**கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூல்**
**முகவுரை, 1964**



